# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Tuesday, the 28th March 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, the Deputy Speaker (SRI B. BHAKTAVATSALU NAIDU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Handloom weavers (repayment of loan)*

* 1121 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் ஆண்டு ஆகஸ்ட்மீ 20உ-ல் 316-ம் எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி, கூட்டுறவு இயக்கத்தில் சேராத கைத்தறி நெசவாளர்களுக்குக் கொடுத்திருக்கும் கடனைத் திருப்பிக் கட்டாதவர்களின் சொத்துக்கள் ஜப்தி செய்யப்பட்டிருக்கின்றனவா ?

(இ) அப்படியானால் எத்தனை பேர் ?

The HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes, Sir.

(*b*) 17.

SRI S. M. ANNAMALAI : ஸார், அவர்கள் அந்தக் கடன்களைத் திருப்பிக் கொடுக்காமல் இருப்பதற்கு முக்கிய காரணம் வறுமைதான். அப்படி வறுமையின் காரணமாக கொடுக்க முடியாமல் போனால், அவர்களுடைய சொத்தை ஜப்தி செய்கிறார்கள். குறிப்பாக, அவர்கள் வைத்திருக்கும் கைத்தறிகளை ஜப்தி செய்கிறார்கள். அதைத் தடுப்பதற்கு முயற்சி எடுத்துக்கொள்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கம்யூனிடி டெவலப்மெண்ட் பண்டிலிருந்து நெசவாளிகளுக்கு கடனாகக் கொடுக்கப்படுவது. இம்மாதிரி இவர்கள் பணம் கட்டத் தவறினால், மீதிப் பேருக்கும் கொடுக்கலாமா, வேண்டாமா என்ற சந்தேகம் ஏற்படும். அவர்களை சிறு சிறு தவணைகளாகத்தான் கொடுக்கச் சொல்கிறோம். வேண்டுமென்றால் அவர்கள் இதைக் கட்டி விடலாம். அதற்கு கனம் அங்கத்தினர்களும் கொஞ்சம் உதவி செய்ய வேண்டும். இம்மாதிரியான கேள்விகளைக் கேட்டு, அவர்களுடைய மனப்பான்மையை இதிலே இன்னும் கொஞ்சம் வளர்க்க வேண்டாமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI V. SUBBIAH : ஸார், இந்தமாதிரி கடன்பட்ட கைத்தறி நெசவாளிகளுக்கு பல தவணைகளிலே கொஞ்சம் கொஞ்சமாகக் கட்டுவதற்கு அந்த டிகிரிமேல் ஏற்பாடு செய்ய கோர்ட்டுகளுக்கு அரசாங்கம் ஏதாவது உத்திரவு கொடுக்கப்பட்டுள்ளதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சிறு சிறு தவணைகளில் கொடுக்கத்தான் இப்போது ஏற்பாடு. கடன் வாங்கினால் ஒன்றுமே கொடுக்க வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறார்கள். இதுதான் அதிலே ஏற்பட்டிருக்கக்கூடிய கஷ்டம்.

*Oil-seed crops*

* 1122 *Q.*—Sri V. K. KRISHNAMURTHI (on behalf of Sri T. T. DANIEL) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there is any proposal to improve the development schemes for increasing the production of oil-seed crops;

(*b*) whether any Oil-Seed State Committee is formed;

(*c*) if so, the names of the members of the Committee; and

(*d*) the steps taken to prevent a decline in oil yield?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*), (*b*), (*c*) & (*d*) A paper[a] is placed on the table of the House.

*Hospitals, North Arcot (bed strength)*

* 1123 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் வட ஆற்காடு ஜில்லாவில் எந்தெந்த ஆஸ்பத்திரிகளில் படுக்கைகளை அதிகப்படுத்த ஏற்பாடாகியுள்ளது ?

(இ) இவ்வேலை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்குள் முடியுமா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) Construction of additional or new buildings has been sanctioned already with a view to increase the bed-strength of the Government Headquarters Hospital, Vellore, and the Government Hospitals at Cheyyar, Tirupathur and Wandiwash. In the case of the hospitals at Arni, Arkonam, Chengam, Gudiyatham, Polur and Tiruvannamalai, proposals for putting up additional or new buildings or for acquisition of the land required, for the purpose, have not yet been finalised.

(*b*) No, Sir.

Sri V. K. KOTHANDARAMAN : ஸார், 32 லட்சம் மக்களைக் கொண்ட இந்த ஜில்லாஹெட்குவார்ட்டர்ஸ் ஆஸ்பத்திரி 250 படுக்கைகள் தான் கொண்டதாக இருக்கிறது. 300 பேர்களுக்கு மேல் தரையிலே படுத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைமையிலே வட ஆற்காடு ஜில்லாவில், வேலூரிலுள்ள தலைமை ஆஸ்பத்திரியில் மேலும் படுக்கைகளை அதிகப்படுத்துவார்களா ? கனம் அமைச்சர் அவர்கள் அந்த ஜில்லாவாசியாகையினாலே, எங்கே அதிலேயே கவனம் செலுத்தி வருகின்றார் என்று சொல்லப் போகின்றார்களோ என்று இதிலே தயங்குகிறார்களா அல்லது வேறு எந்த காரணங்களினால் அது அபிவிருத்தி செய்யப்படாமல் அப்படியே இருந்து வருகிறார்கள் ?

The Hon. Sri M. A. MANICKAVELU : இதிலே ஜில்லாவாசியா, இல்லையா என்ற பிரச்னையே எழவில்லை. இப்போது அங்கே 250 படுக்கைகள் இருக்கின்றன. இன்னும் 128 படுக்கைகளை அங்கே சேர்க்க ஏற்பாடாகி வருகிறது.

---

a Printed as Appendix I on page 326 infra.

28th March 1961]

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், குடியாத்தத்திலே ஏற்கெனவே பல ஆண்டுகாலம் மிஷன் ஆஸ்பத்திரி இருந்து வந்தது. அதை 6 மாதங்களுக்கு முன்னால் ஒரேயடியாக மூடிவிட்டார்கள். ஆகவே அங்கே போய்க் கொண்டிருந்த மக்கள் இப்போது சர்க்கார் தலைமை ஆஸ்பத்திரிக்கு வருவதால் நாள் ஒன்றுக்கு 1,000 பேர்களுக்கு மேல் வருகிறார்கள். ஆகவே அங்கேயும் ஒரு ஆஸ்பத்திரியை ஏற்படுத்தி, அதை படுக்கைகளுடன் அபிவிருத்தி செய்வதற்கு உத்தேசம் உண்டா ? அப்படியானால் எப்போது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அங்கேயும் 40 படுக்கைகள் வைத்து விரிவுபடுத்துவதற்கு வேண்டிய எஸ்டிமேட்டுகள் தயாராகிக் கொண்டிருக்கின்றன.

SRI V. K. KRISHNAMURTHI : வேலூர் நகரத்தைப் பொறுத்த அளவில் உலகம் புகழும் மிஷின் ஆஸ்பத்திரி தனிப்பட்டவர்களுக்கு உதவும் நிலைமையிலிருக்கிறது. ஆகவே ஓரளவு அதற்குத் தகுந்த முறையிலே இப்போதுள்ள 250 படுக்கைகளை விஸ்தரிப்பதற்கானத் திட்டம் வகுத்து, ஏழை எளிய மக்களுக்கு இலவச உதவி செய்வதற்கு இந்த அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அப்படி முன்வந்துதான் இப்போது இந்தப் படுக்கைகளை அதிகப்படுத்துகிறோம்.

SRI V. K. KOTHANDARAMAN : வேலூர் ஆஸ்பத்திரியிலே ஸ்பெஷல் வார்டிலே நான்கு அறைகள்தான் இப்போது இருக்கின்றன. அதனால் பலர் அங்கு வந்து சிகிச்சை பெற முடியாமல் போகக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. ஆகவே அந்த ஸ்பெஷல் வார்டுகளின் எண்ணிக்கையை 20 ஆக உயர்த்துவதற்கு, அந்த முறையிலே அவைகளைத் தடுப்பதற்கு ஏற்பாடு செய்ய உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : The suggestion that the quarters for House Surgeons provided for in the 2nd floor of the block be shifted to another place and provision made for another 50 beds is under consideration.

ஏழைகளுக்கு அதிகப்படுத்திய பிற்பாடு, பணக்காரர்களுக்கும் இந்த வசதி செய்யப்படும்.

*Harijan students (scholarships)*

* 1124 Q.—SRI N. MARUDACHALAM : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1960-ம் ஆண்டு எப்ரல் மீ 1உ முதல் ஹரிஜன மாணவ, மாணவிகளுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்கப்பட வேண்டியது, 1960-ம் ஆண்டு நவம்பர் மீ 22உ வரையில் கொடுக்கப்படாததற்கு காரணம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN : A statement [a] is placed on the table of the House.

SRI N. MARUDACHALAM : ஸார், இந்த மேஜை மீது வைத்திருக்கும் பேப்பரிலே, 8057-ல், நாலாம் வகுப்புக்கு இது வரை கொடுக்கப்படாமல் இருக்கிறது என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அதைக் கொடுக்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் கேள்வியே விளங்கவில்லை.

---

[a] Printed as Appendix II on page 327 infra.

[28th March 1961

SRI N. MARUDACHALAM : நாலாவது வகுப்பில் இதுவரை ஸ்காலர்ஷிப் பணம் பல பள்ளிக்கூடங்களில் கொடுக்கப்படவில்லை. அதை விசாரித்து கொடுக்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நாலாவது படிவமா அல்லது நாலாவது வகுப்பா, எதைச் சொல்லுகிறீர்கள் ? (சில அங்கத்தினர்கள் : நாலாவது வகுப்பு) சில எலிமெண்டரி பாடசாலைகளுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்கிறார்கள் (கனம் ஸ்ரீ வி. சுப்பிரமணியம் : நாலாவது பாரமாகத்தான் இருக்கும்) அந்தந்தப் பள்ளிக்கூடங்களில் அங்கு இருக்கும் ஹரிஜன வெல்பேர் ஆபீசர்கள் நிதிக்குத் தக்கபடி கொடுக் கிறார்கள்.

SRI S. M. ANNAMALAI : மேஜைமீது வைத்திருக்கும் அறிக்கையில் கன்யாகுமரியில் 12,058 ப்ரஷ் அப்ளிகேஷன்கள் வந்ததாகவும், அதில் ஒன்றுகூட சாங்ஷன் செய்யப்படவில்லை என்றுமிருக்கிறது. காரணம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN : தயவுசெய்து கேள்வியைத் திருப்பிக் கேளுங்கள்.

DEPUTY SPEAKER : The hon. Member may please repeat his question.

SRI S. M. ANNAMALAI : ஸார் அறிக்கையில் 12,058 ப்ரெஷ் அப்ளி கேஷன்கள் வந்திருந்தும், ஒன்றுகூட சாங்ஷன் ஆகவில்லை. அதற் கென்ன காரணம் ?

THE HON. SRI P. KAKKAN : கன்யாகுமரி ஜில்லாவில், புது அப்ளிகேஷன்கள் 12,058-ம், ரெனியூவல்கள் 4,210-ம் வந்திருக்கின்றன ; அவற்றில் 1,015 ரெனியூவல் பண்ணப்பட்டிருக்கிறது. . . (குறுக்கீடுகள்) தகவல் என்னிடம் இல்லை. கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போட்டால், பதில் சொல்லுகிறேன்.

SRI P. G. MANICKAM : மேசை மீது வைத்திருக்கும் குறிப்பிலே, 65,207 ப்ரெஷ் அப்ளிகேஷன்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன. அதில் 17,539 அப்ளிகேஷன்கள்தான் சாங்ஷன் செய்யப்பட்டிருக்கின்றன. ஆக மீதி 47,668 ப்ரெஷ் அப்ளிகேஷன்கள் சாங்ஷன் செய்யப்படவில்லை. குறிப்பாக கோயம்புத்தூர் ஜில்லாவில் 6,494 ப்ரெஷ் அப்ளிகேஷன் களில் 2,000 தான் சாங்ஷன் செய்யப்பட்டிருக்கிறது. கீழே உள்ள குறிப்பில் " The sanction of scholarships in the remaining cases is in progress " என்று போடப்பட்டிருக்கிறது. ஆகையினால், எல்லா ப்ரெஷ் அப்ளிகேஷன் களுக்கும் ஸ்காலர்ஷிப்புகள் கொடுப்பது பற்றி அரசாங்கம் கவனம் செலுத்துமா ?

THE HON. SRI P. KAKKAN : பல அப்ளிகேஷன்கள் வருகின்றன ; அவைகளைப் பரிசீலனை செய்து, எவை எவை செல்லத்தக்கவை, எவை எவை செல்லத்தகாதவை என்று பரிசீலனை செய்து செல்லத் தகாதவைகளை ரத்து செய்வார்கள். மற்றதைப் பார்த்து ஹரிஜன அதிகாரிகள் கலெக்டரை யும் கலந்து கொண்டு ஸ்காலர்ஷிப்கள் கொடுக்கிறார்கள். வந்ததற்கெல்லாம் 100-க்கு 100 கொடுக்க முடியாது. அவைகளில் செல்லத் தகாதவைகளும் இருக்கும்.

SRI P. S. SANTHANAM : தலைவர் அவர்களே, நாலாம் கிளாஸ் முதலியவைகளுக்குக் கொடுப்பதில், பள்ளிக்கூடத்திற்குப் பள்ளிக்கூடம் வித்தியாசம் இருக்கிறது. அவற்றை ஒரே சரிசமமாகச் செய்ய அரசாங்கம் முற்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : வித்தியாசம் இருப்பதற்கு வழி இல்லை. ஆரம்பப் பாடசாலைகளில் ஸ்காலர்ஷிப் கொடுப்பதுபற்றி விதி முறைகள் இருக் கின்றன. அதைப் பொருத்துத்தான் கொடுக்கிறார்கள். என்ன காரணம் என்று எனக்குத் தெரியவில்லை. கனம் அங்கத்தினர் குறிப்பாக எனக்கு எழுதினால், விளக்கப்படும்.

28th March 1961]

Sri P. G. MANICKAM : 1960-61-ம் வருஷத்தில், ஸ்காலர்ஷிப் கொடுக்க ஒதுக்கப்பட்ட தொகையானது மேற்கண்ட ப்ரெஷ் ஸ்காலர்ஷிப்புகளை கொடுக்க குறைவாக இருந்தால், நடப்பு வருஷத்தில் ப்ரெஷ் அப்ளி கேஷன்களை சாங்ஷன் செய்ய பரிசீலனை செய்வார்களா ?

The Hon. Sri P. KAKKAN : வருஷா வருஷம் ஸ்காலர்ஷிப்புகளை உயர்த்துகிறோம். அதிகத் தொகை வேண்டுமானால், பைனான்ஸ் டிபார்ட் மெண்டைக் கூடுதலாகக் கேட்டு தொகை பெறுகிறோம்.

Sri K. B. S. MANI : ஸார், ஸ்காலர்ஷிப் சம்பந்தமாக மூன்றும், நான்காம், ஐந்தாம் வகுப்புகளுக்கு எலிமெண்டரி செக்ஷன்களுக்கு சர்க்கார் தற்சமயம் இருக்கும் முறையில் ஸ்காலர்ஷிப் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை. அந்த ஸ்காலர்ஷிப்புகளை மேல் வகுப்பு மாணவர்களுக்குக் கொடுக்க முயற்சிப்பார்களா ?

The Hon. Sri P. KAKKAN : மேல் வகுப்பு மாணவர்களுக்கும் கொடுக்கிறோம். ஆரம்பக் கல்வி மாணவர்களுக்கும் கொடுத்து உதவி செய்ய வேண்டியிருக்கிறது.

Sri K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, தாழ்த்தப்பட்ட மாணவர்களுக்கு உதவியளிப்பதில், சேலம் மாவட்டத்தில் 3,408 மாணவர் களுக்கு மட்டுமே வழங்கப்பட்டிருந்தது. புதியவர்கள் கிட்டத்தட்ட 7,000 பேர்கள் விண்ணப்பித்துக் கொண்டிருந்தும்கூட அனுமதிக்கப்பட்டிருப்பது சென்ற ஆண்டைவிட இந்த ஆண்டு குறைய காரணம் என்ன ?

The Hon. Sri P. KAKKAN : நான் முன்பே சொன்னேன், என்னிடம் தகவல் இல்லையென்று. தனிக் கேள்வி போட்டால் பதிலளிக் கிறேன்.

*Road-dam across Manniyar*

DEPUTY SPEAKER : As the hon. Member who gave notice of question No. 1125 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

* 1125 *Q.*—Sri T. R. RAMAMIRTHA THONDAMAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லா, கும்பகோணம் தாலுகா, சோழபுரம் தத்துவாஞ்சேரி சாலையில் மண்ணியாற்றில் பாலங்கட்டி கப்பிபோட உத்தேசமுண்டா ? எப்போது வேலை துவங்கும் ?

The Hon. Sri P. KAKKAN : No, Sir.

*Middle Schools, Kanyakumari (upgrading)*

* 1126 *Q.*—Sri T. S. RAMASWAMY : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the number of applications received from the Kanyakumari district for upgrading Middle Schools (Upper Primary Schools) into High Schools in 1960;

(*b*) the number of applications sanctioned and the details thereof; and

(*c*) the reasons for refusal to other schools, if any?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Ten, Sir.

(b) Six, Sir; they are

(1) St. Mary's Upper Primary School, Colachel.

(2) L. M. Upper Primary School, Marthandam.

(3) Mission Upper Promary School, James Town.

(4) V. V. High School for Girls, Iranipuram.

(5) Government Upper Primary School, Thovala.

(6) Government Upper Primary School, Kummarapuram-thope.

(c) The existence of adequate number of High Schools in the area and the inability of the sponsors to create an endowment as required by the rules were the reasons for the refusal of permission.

### *Pig-iron (shortage)*

* 1127 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state the steps taken to overcome the shortage of pig-iron?

THE HON. SRI R. VENKATARAMAN : The Government of India in the Ministry of Steel, Mines and Fuel and in the Ministry of Railways were addressed to expedite supplies of pig-iron to this State and to make arrangements to provide adequate wagons to transport stock to the South Certain quantities of pig-iron have since been received and the supply position of pig-iron in the Madras State has eased now.

SRI A. A. RASHEED : May I know the industries which are adversely affected by the shortage of pig-iron?

THE HON. SRI R. VENKATARAMAN : Generally, the casting industries are affected.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know from the Hon. Minister whether the shortage is due to the transport bottleneck or whether the shortage is at the production end itself?

THE HON. SRI R. VENKATARAMAN : I should think that it is due to the transport bottleneck. Particularly, in October–November, there were serious floods and breaches on the North–East line and supplies became very scarce during that period.

SRI A. VEDARATHNAM : ரெயில்வே வாகன்கள் வசதிக் குறைவாக இருக்குமானல், கடல் மார்க்கமாகக் கொண்டுவர முயற்சிசெய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : அதற்குச் செலவு அதிகமாகும்.

SRI A. A. RASHEED : May I know when the supply position will improve in our State?

THE HON. SRI R. VENKATARAMAN : It has improved and that is what I said just now.

28th March 1961]

*Government Hospital, Kumbakonam (bed strength)*

* 1128 *Q.*—Sri T. SAMPATH : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the bed strength of the Government Hospital at Kumbakonam;

(*b*) whether there is any proposal to increase the same;

(*c*) whether lands adjacent to the Government Hospital, Kumbakonam, have been acquired for the extension of the hospital; and

(*d*) if so, when the extension would be made?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) 130.

(*b*) & (*c*) Yes.

(*d*) As soon as possible.

*Kamaraj Sagar, Madurai district*

* 1129 *Q.*—Sri M. P. SARATHI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை மாவட்டத்தில் காமராஜ் சாகர் சமீப மழையினால் எத்தகைய சேதம் அடைந்தது ?

(இ) அதனால் ஏற்பட்ட நாசம் எவ்வளவு ?

(உ) அதன்மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது ?

The Hon. Sri M. A. MANICKAVELU : (*a*) There were heavy floods in Kodavanar river and this resulted in the sudden rise of water level in the reservoir. The incomplete portion of the earth dam was not capable of withstanding the pressure of overflowing water and the bund for 67 feet length collapsed.

(*b*) The loss is estimated at Rs. 50,000.

(*c*) The Chief Engineer, Public Works Department (General) has reported that all measures are being taken to resume the work and to speed up the construction to complete the works early.

*Rent control courts, Madurai (cases pending)*

* 1130 *Q.*—Sri N. R. THIAGARAJAN : கனம் மின்சார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை டவுன் ரெண்ட் கண்ட்ரோல் முன்சீப்பிடம் எத்தனை வழக்குகள் விசாரிக்கப்படாமல் காலங்கடந்து நிற்கின்றன ?

(இ) எத்தனை வழக்குகளுக்கு மீண்டும் மீண்டும் வாய்தா போட்டு வருகிறார் ?

(உ) பகிரங்க கோர்ட்டில் கேசை நடத்தாமல், சமாதானம் பேசி காலங்கடத்தியும் சில்லரை வற்புறுத்தியும் வருவது சர்க்காருக்குத் தெரியுமா ?

The Hon. Sri V. RAMAIAH : (*a*) 90.

(*b*) 133.

[28th March 1961

(c) The Government have enquired into this. The present District Munsif took charge on 30th May 1960. It is reported that he has not been delaying the cases by compromising the parties or forcing them to come to a settlement. Only at the request of the parties or counsel for grant of time for settling disputes, time is given by the Court.

*Food adulteration*

* 1131 *Q*.—Sri A. VEDARATHNAM : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) உணவுக் கலப்படம் பற்றி ஹைதராபாத்தில் அண்மையில் நிகழ்ந்த அகில இந்தியப் பேச்சு அரங்கில் செய்த சிபாரிசுகள் இம்மா நிலத்தில் அமுலுக்குக் கொண்டுவரப்படுமா ?

(இ) அப்படியானல் அதன் விவரமென்ன ?

The Hon. Sri M. A. MANICKAVELU : (i) The proceedings of the Seminar have not yet been received from Governmnt of India.

(ii) Does not arise.

*Gramasevikas and Women Social Education Organisers*

* 1132 *Q*.—Sri K. VINAYAKAM : Will the Hon. the Chief Minister be pleased to state why the Gramasevikas and Women Social Education Organisers in Block Areas are placed under the control of men officers instead of being included amongst the staff of the Women's Welfare Department?

The Hon. Sri C. SUBRAMANIAM : The Gramasevikas and Social Education Organisers (W) were sanctioned by the Government as part of the Extension staff and they were expected to supplement the extension work done by the Gramasevaks and other Extension Officers. The Women's Welfare Department in the State is concerned solely with welfare work among Women while the extension work intended to be done by the Social Education Organisers (W) and Gramasevikas is broader in scope. Therefore the Gramasevikas and the Social Education Organisers (W) have not been brought under the control of Women's Welfare Department. However, a proposal to merge the posts of Social Education Organizers (W) and Gramasevikas with the establishment of Women's Welfare Department is now under consideration.

Sri K. B. S. MANI : இந்த கிராம சேவிகா, ஸ்பின்னிங் ஆர்கனேசர், கைத்தையல், என்பதற்காகப் போடப்படுகிற பெண்களை தனித்தனியாக வைத்திருப்பதனல் மக்களோடு சேர்ந்து பழகுவதற்கும், போக்குவரத்துக்கும் இடைஞ்சலாக இருப்பதனல் அப்படிப் போடுகிற பெண்களை இரண்டு இரண்டு பேர்களாகப் போட்டால் சேர்ந்து வேலை செய்வதற்கு சௌகர்யமாக இருக்காதா ? வருகிற ஆண்டிலிருந்தாவது அந்தமாதிரி செய்ய முடியுமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : மூலக் கேள்வியில் இருந்து அது எழுவது இல்லை.

28th March 1961]

*Village officials (collection of taxes)*

* 1133 *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether village officials are entrusted with the work of collecting taxes for the Panchayats; and

(*b*) if so, the remuneration paid to them therefor?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The village Headmen have been entrusted with the duty of collecting taxes and fees due to Panchayats.

(*b*) At the rate of Rs. 7 per month if he has a normal charge; and at the rate of Rs. 5 per month if he has a light charge.

SRI A. R. SUBBIAH MUDALIAR : ஜில்லாதோறும் நடந்த செமினார்களிலும், சென்னைக்கு வந்து நடத்தின செமினாரிலும் வில்லேஜ் ஆபீசர்களைப் போடக்கூடாது என்று தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. அத்துடன் ஒவ்வொரு வில்லேஜ் பஞ்சாயத்துக்கும் கேள்விகள் கேட்கப் பட்டபோது அநேகமாக எல்லா பஞ்சாயத்துக்களும் ஏகமனதாக அவ்வாறு செய்வது அவசியம் இல்லையென்று தெரிவித்திருந்தும் சர்க்கார் இத் திட்டத்தை வகுத்திருப்பதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைக் கட்டாயமாக ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதில்லை. கிராம அதிகாரிகளை இந்த வேலைக்குப் பயன்படுத்தினால் எவ்வளவு ஊதியம் கொடுக்கவேண்டு மென்பதுதான் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் கிராம அதிகாரிகள் தனி வர்க்கம், மற்றவர்கள் தனி வர்க்கம் என்ற மனப்பான்மையை வளர்ப்பது தவறு என்பது என் கருத்து.

SRI A. R. SUBBIAH MUDALIAR : வில்லேஜ் ஹெட்மென்னி டத்தில் கண்டிப்பாக வரிவசூல் செய்வதைக் கொடுக்க வேண்டுமென்ற திட்டம் இல்லையா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ரெவின்யூ டிபார்ட்மெண்டு செய்யவேண்டுமென்று இருப்பதனால், ரெவின்யூ டிபார்ட்மெண்டு கிராம அதிகாரிகள் மூலமாகத்தான் செய்யவேண்டியிருக்கும். மற்ற காரியங் களுக்கு அவர்களைப் பயன்படுத்திக்கொள்வதும், கொள்ளாததும், அவர வர்களுடைய இஷ்டம். பஞ்சாயத்துக்களே வரி வசூல் செய்துகொள்கின்ற பொறுப்பை ஏற்றுக்கொள்ளலாம் என்றால் அதை அவர்கள் ஏற்றுக்கொள்வதற்கில்லை என்று சொல்லிவிட்டார்கள். ஆகவேதான் இந்த ஏற்பாட்டை சர்க்கார் வகுக்கவேண்டியிருக்கிறது.

SRI V. SUBBIAH : டெவெலப்மெண்டு கவுன்சில் கூட்டத்தில் கிராம அதிகாரிகள்தான் பணத்தை வசூல் செய்யவேண்டுமென்று பஞ்சாயத்து களிடமிருந்து குறிப்பாக திருச்சி ஜில்லாவிலிருந்து வந்திருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : வரிகள் வசூல் பண்ணுவதைப் பொறுத்த வரையிலும் கிராம அதிகாரிகள் மூலமாகத்தான் வசூல் செய்ய முடியும். தனி அதிகாரிகள் என்று போட முடியாது. வேறு காரியங்களுக்குக் கர்ணங்களை உபயோகித்துக்கொள்ளலாமா, கூடாதா என்பது அவரவர்களுடைய இஷ்டத்திற்கு விடலாம். இஷ்டம் இல்லா விட்டால் வேண்டாம். ஆனால் கிராம அதிகாரிகளை ஏதோ தாழ்த்தப் பட்டவர்களைப் போலப் பிரசாரம் செய்வது கூடாது என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI T. IRUSAPPAN : தலைவர் அவர்களே, கிராம அதிகாரிகளுக்கும் ஓரளவு சம்பளத்தை உயர்த்துவது போல ஆகாதா இந்த ஏற்பாட்டினால் ? அதே சமயத்தில் பஞ்சாயத்துகளுக்கும் அவர்கள் வேலை பயன்படாதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதற்காகத்தான் இந்த இரண்டையும் ஒன்று சேர்ப்பதற்கு சர்க்கார் முயற்சி செய்து வருகிறது. கிராமத்திலும் இந்தச் சூழ்நிலை ஏற்படவேண்டுமென்பது என் கருத்து.

[28th March 1961

SRI R. SRINIVASA IYER : செக்ரடரியாகவே கர்ணங்களை நியமனம் செய்துகொள்வதற்கு தஞ்சாவூர் ஜில்லாவில் அநேகமாக எல்லோரும் சம்மதித்திருக்கிறார்களில்லையா ? கர்ணங்களையே செக்ரடரியாக வைத்துக் கொள்வது என்று அவர்கள் தீர்மானித்து இருப்பதனால் வரி வசூல் பண்ணுவது—செஸ் கணக்கு போன்றவைகள் எற்கெனவே செய்து கொண்டிருப்பதனால் அவர்களுக்கு சுலபமாக இருக்காதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதைத்தான் நான் சொன்னேன். வரி வசூல் செய்வதைப் பொறுத்த வரையிலும் கிராம அதிகாரிகள் மூலமாகத்தான் செய்ய முடியும் என்பதைக் குறிப்பிட்டேன். தஞ்சாவூர் ஜில்லாவாசிகள் புத்திசாலிகள். அதனால்தான் கர்ணங்களையே செக்ரடரியாகப் போட்டுக்கொள்ள சம்மதித்துவிட்டார்கள். அதைப் பாராட்டுகிறேன். இதைப் பார்த்தாவது மற்ற ஜில்லாக்களும் பயன்படுத்திக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : பல பஞ்சாயத்துக்களிலே க்ரூப் ஊழியர்கள் என்று சொல்லப்படுகிறவர்களால் வரி வசூலிக்கப் படுகிறது. இப்படி கிராம அதிகாரிகளிடத்திலே ஒப்படைக்கப்படுகிற வேலை நடக்குமா ? அவர்களை என்ன செய்ய உத்தேசம் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சரியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்ல முடியும்.

*Tuberculosis (cases of death)*

* 1134 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the number of persons who died of Tuberculosis during the last five years; and

(*b*) the figure in pre-Independence days?

THE HON. SRI M. A. MANICKAVELU :

**(*a*) —**

| *Year.* | *Number of deaths due to Tuberculosis.* |
|---|---|
| **1955** | 3,180 |
| **1956** | 3,098 |
| **1957** | 3,256 |
| **1958** | 2,918 |
| **1959** | 3,069 |

**(*b*) —**

| *Year.* | *Number of deaths.* |
|---|---|
| **1941** | 3,691 |
| **1942** | 3,391 |
| **1943** | 3,784 |
| **1944** | **Not available as separate figures were not compiled.** |
| **1945** | |
| **1946** | |
| **1947** | |

28th March 1961]

Sri K. VINAYAKAM : Do these figures represent deaths of such of those patients who were admitted in the Government hospitals or do they cover such of those who had not undergone any medical treatment and withered away for want of medical attendance?

The Hon. Sri M. A. MANICKAVELU : This refers to figures collected in Government institutions and in municipal areas.

Sri K. VINAYAKAM : What steps are being taken to prevent such kind of large scale deaths among T.B. patients. Has there been a tendency of decrease in the death of T.B. patients in the recent years?

The Hon. Sri M. A. MANICKAVELU : Yes, Sir, the number of deaths from T.B. has shown a marked decline during the past decennium (1949–59). The various steps taken like provision of facilities for modern treatment, hospitalisation in Sanatoria, early detection of active infection especially among the contacts during home-visiting in the course of domicilliary treatment and B.C.G. Vaccination, have gone a long way in checking the spread of infection.

Sri V. K. KOTHANDARAMAN : மதுவிலக்குச் சட்டம் வந்ததற்கு பிறகுதான் க்ஷயரோக வியாதி அதிகமாகிக்கெண்டு வந்திருக்கிறது. கள்ளுக்கடை திரும்ப வைக்க முடியாது என்றாலும் தென்னஞ்சாறு, பனஞ்சாறு போன்ற நீராக்கள் எங்கும் வசதியாகக் கிடைப்பதற்கு பெரிய கடைகளைத் திறக்க ஏற்பாடு செய்யப்படுமா? க்ஷயரோக வியாதிக்கு இந்த நீரா பருகுவதானது மிகவும் உதவியாக இருக்கும் என்பதால் இப்படி ஏற்பாடு செய்யப்படுமா?

The Hon. Sri M. A. MANICKAVELU : இதையெல்லாம் எந்த ஆராய்ச்சியில் இருந்து கனம் அங்கத்தினர் சொல்கிறார் என்று தெரியவில்லை. கடந்த பத்து வருஷங்களில் குறைந்து வந்திருக்கிறது என்று சொல்கிறேன். ஜனத்தொகை பெருகியிருக்கிறது. இதையும் கணக்கிட்டால் வியாதி ரொம்பக் குறைந்திருக்கிறது. கள்ளுக் குடிப்பதால் "ஹூபிங் காப்"-க்குத்தான் அனுகூலம் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

*Maternity and child welfare centres, North Arcot district*

* 1135 *Q.*— Sri V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) **G.O. Ms. No. 583, Health, dated 23—2—60**-ம் தேதி சர்க்கார் உத்தரவுப்படி 1960–61-ல் வட ஆற்காடு ஜில்லாவில் எங்கெங்கே **Maternity and Child Welfare** சென்டர்கள் புதிதாக திறக்கப்பட்டன?

(இ) உத்தரவு போடப்பட்ட இடங்களில் இன்னும் ஏன் திறக்கப்படவில்லை?

The Hon. Sri M. A. MANICKAVELU : (அ) One Maternity and Child Welfare Centre each in Kilpatti and Melvaithinamkuppam Panchayats and a Maternity Home in Jalarpet Panchayat.

( ) Owing to want of funds or want of suitable buildings the centres have not yet been opened by the Panchayats concerned.

[28th March 1961

SRI V. K. KOTHANDARAMAN : நம் ராஜ்யத்தைச் சேர்ந்த வட்டாரத்தில் 18,587 ஜனத் தொகை கொண்ட அந்த இடத்தில் ஏற்கெனவே ஆஸ்பத்திரி இருந்து மெடர்னிடி அண்ட் சைல்ட் வெல்பார் சென்டர் ஆரம்பிக்கவேண்டுமென்று சர்க்கார் உத்திரவு இருந்தும்கூட இதுவரையில் ஆரம்பிக்கப்படவில்லை. அதற்கான காரணம் என்ன? அந்த இடத்தில் ஆரம்பிக்கவேண்டியதை வேறு இடத்தில் ஆரம்பிக்க இருக்கிறார்களா ? அங்கே ஆரம்பிக்க என்ன நடவடிக்கை எடுக்கப்படுகிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த நிலைமையிலே எடுத்துக்கொள்ள வேண்டியது ஸ்தல ஸ்தாபனத்திற்குத்தான். 100-க்கு 25 அரசாங்கம் கொடுக்கிறது. இதில் பஞ்சாயத்து அக்கரை காட்டி மேல் நடவடிக்கை எடுக்காததுதான் காரணம். இங்கு ஆஸ்பத்திரி ஏற்படுத்துவதற்கு ஜில்லா போர்டு நடவடிக்கை எடுக்க வேண்டும்.

SRI V. K. KOTHANDARAMAN : இந்த மெடர்னிடி அண்டு சைல்ட் வெல்பேர் சென்டரை ஆரம்பிக்கவேண்டிய ஹெல்த் டிபார்ட்மெண்ட், அந்தத் தவறு செய்திருக்கிறது. ஆகையால் உடனடியாக அந்த இடத்தில் ஒரு மெடர்னிடி அண்டு சைல்ட் வெல்பேர் சென்டரை ஆரம்பிக்க, அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் சொல்லுகின்ற கிராமம் வேறு. இங்கு குறிப்பிடப்பட்டிருப்பது மூன்று கிராமங்களைப்பற்றி. ஆகையால் தனிக் கேள்வி போட வேண்டும்.

*Employees of local bodies (Revision of pay)*

*1136 *Q.*—SRI T. S. RAMASWAMY : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) whether the Government have revised the pay and allowances of the servants of local bodies recently; and

(*b*) if so, the details thereof in respect of—

(i) Panchayat servants;
(ii) Municipal servants; and
(iii) Corporation servants?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) Yes, Sir.

(*b*) (i) & (ii) Copies of G.O. No. 1636, L. A., dated 3rd October 1960 and G.O. No. 471, R.D. & L.A., dated 22nd February 1961 containing the details in respect of municipal and panchayat employees are available in the Legislature Library for reference by the members.

(iii) As regards the Corporation employees, the matter is one for consideration of the Corporation.

SRI T. S. RAMASWAMY : May I know, Sir, when this revision of scales of pay will be extended to the persons working in Kanyakumari district local bodies like Nagercoil and other municipalities?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : The Pay Commission has not made any specific recommendation regarding the scales of pay to be adopted for these employees. The Joint Inspector of Municipal Councils and Local Boards has been requested to examine the question and submit necessary proposals for the consideration of the Government.

28th March 1961]

SRI V. SUBBIAH : ஸ்தல ஸ்தாபன ஊழியர்களுக்கு சம்பளக் கமிஷன் சிபார்சுபடி அந்த ஸ்கீம் அமுல் நடத்தப்பட்டதா? இல்லையென்றால் எப்பொழுது அமுலுக்குக் கொண்டுவருவார்கள்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Orders have been passed in G.O. No. 471, R. D. & L.A., dated 22nd February 1961. It contains the revision of the scales of pay in respect of Municipal and Panchayat employees. They are available in the Legislature library.

ஜி.ஓ. நெ. 471 படி இப்போது அமுலுக்கு வந்திருக்கிறது. இதில் எந்தவிதமான சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறதோ, அதன்படி உத்திரவு பிறப்பித்திருப்பதனால் அதன்பிரகாரம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும்.

SRI T. S. RAMASWAMY : May I know, Sir, when the revision of scales of pay were implemented in other districts? May I know, Sir, when this recommendation will be given effect to for Kanyakumari district? May I know, Sir, why this slow pedalling so far as Kanyakumari district is concerned?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Orders have been issued in respect of Panchayat servants, in clause 1, in G.O. No. 471, R.D. & L.A., dated 22nd February 1961. So far as Kanyakumari district is concerned it is under the consideration of the Government.

SRI K. VINAYAKAM : As for the Corporation of Madras, are the Government aware of the fact that the recommendation of the Pay Commission were not given effect to regarding the increase of emoluments to their servants? If so, what exactly is the reason for the delay? Did they approach the Government for any loan or aid towards this kind of increase in their salaries?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : The information available with me is this. The Corporation appointed a Special Officer to go into the question of revision of scales of pay of its employees and to submit his recommendations. The Special Officer, it is understood, has submitted his report and it is under the consideration of the Corporation.

SRI R. SRINIVASA IYER : Is there any proposal to upgrade the scale of pay of the Executive Officers of First Grade Panchayats?

DEPUTY SPEAKER : How does this question arise from the main question?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : This is under the consideration of the Government.

SRI T. S. RAMASWAMY : May I know, Sir, how long it will be under the consideration of the Government. viz., the question of revision of pay scales of Kanyakumari district local body servants? May I know, Sir, why they should be treated on a different footing?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Now we are following the pay scales of the Travancore-Cochin State. Their scales of pay will be revised as soon as the rules of the Madras Panchayats Act, 1958, are made applicable to that area.

[28th March 1961

SRI K. VINAYAKAM : Sir, is the Government aware of the fact that the recommendations of the Special Officer are far-reaching the finances that could be easily managed by the Corporation authorities? They are complaining of paucity of funds. In such a contingency will the Government come forward to their aid to increase their finances?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : It is wholly for the Corporation to decide. They should look into it. So far Government have not received any representation.

*Cast iron pipes (manufacture)*

* 1137 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is a proposal to start a factory for the manufacture of cast iron pipes in Madras; and

(*b*) if so, when and where?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) There is no proposal to set up a factory in the Public Sector for the manufacture of cast iron pipes in this State.

Licences have been issued to five firms in this State for setting up factories in the private sector for the manufacture of cast iron spun pipes. Details about these private firms are not available.

SRI A. A. RASHEED : Is it a fact that our State had to depend entirely on the North Indian manufactures for the supplies of cast-from pipes?

THE HON. SRI R. VENKATARAMAN : There are no cast-iron spun pipes manufacturing factories in the Madras State?

**SRI A. VEDARATHNAM** : இந்த ஐந்து லைசன்ஸ்கள் எந்தெந்த ஜில்லாக்களிலே வழங்கப்பட்டு, எங்கெங்கே பாக்டரிகள் ஆரம்பிக்கப்பட இருக்கின்றன ?

**THE HON. SRI R. VENKATARAMAN** : இரண்டு திருவற்றியூரில், ஒன்று பீளமேட்டில், ஒன்று மீன்ஜூரில், ஒன்று செங்கல்பட்டில், ஆரம்பிக்கப் போகிறார்கள்.

SRI A. A. RASHEED : What is the capacity of the proposed factories?

THE HON. SRI R. VENKATARAMAN : Three of 10,000, one of 6,000 and one of 25,000.

*Madurai Mills Labour Co-operative Consumers' Society (misappropriation)*

*** 1138 *Q.*—SRI M. P. SARATHI** : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை மில் தொழிலாளர்கள் கூட்டுறவுப் பண்டகசாலை (**Madurai Mills Labour Co-operative Consumers' Society**) யில் பணக் கையாடல் நடைபெற்றுள்ளதா ?

28th March 1961]

(இ) எவ்வளவு காலமாக இந்தக் கையாடல் நடைபெற்று வருகின்றது ?

(உ) அதுபற்றி எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) It is alleged that there has been misappropriation of funds in the Co-operative Society.

(இ) & (உ) The matter is under investigation by the Police.

*Agencies for Welfare Works (grants)*

* 1139 *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Chief Minister be pleased to state when there is a Government Department for the welfare of women and children why the Government are giving grants to other semi-Government and voluntary agencies for welfare work?

THE HON. SRI C. SUBRAMANIAM : The State Government have always recognised the role which voluntary agencies have to play in Social Welfare Work, including the welfare of women and children. The Government, therefore, consider that the existence of a Government Department of Women's Welfare does not render it unnecessary to make Government grants available to such agencies.

SRI K. VINAYAKAM : Do the Government take any particular care to scrutinize the balance sheet or how the aid which is given to these private agencies and to some Government agencies are spent, whether they are usefully spent, whether there is no misappropriation or any other kind of discrepancy?

THE HON. SRI C. SUBRAMANIAM : Whenever grants are made, steps are taken to see whether they are properly utilised. From the question the hon. Member has put, I do not know whether he has got any instance in his mind where such misuse has occurred. If he brings it to the notice of the Government, it will be looked into.

*State functions (religious rites)*

* 1140 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சர்க்காரால் நடத்தப்படும் விழாக்களில் மதச் சடங்குகள் செய்யக் கூடாதென சர்க்கார் உத்திரவு பிறப்பித்துள்ளார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : No. Sir. It has not been found necessary to issue such instructions, because generally in official functions, rites and observances of any particular religion do not find a place.

[28th March 1961

SRI S. M. ANNAMALAI : சிலவிடங்களில் சர்க்காரால் நடத்தப்படும் விழாக்களில் ஒரே ஒரு மதத்தைப்பற்றிய விழாக்கள்தான் நடத்தப்படுகின்றன, அவைகளில் அமைச்சர்களும் சில சமயங்களில் பங்கெடுத்துக்கொள்கிறார்கள். அப்படி அதில் கலந்து கொள்ளும்போது பல மதத்தினர்களும் அதில் கலந்துகொள்ள முடியாமல் போகிறது. ஆகவே, சர்க்கார் அப்படிப்பட்ட விழாக்கள் நடத்தக்கூடாது என்று உத்தரவிடுவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மதத்தைப்பற்றி என்ன நடக்கிறதென்று எனக்குத் தெரியவில்லை. உதாரணமாக தேங்காய் உடைத்து வைக்கிறார்கள். மதத்திற்கும் அதற்கும் சம்பந்தமில்லை. அது மங்களகரமான நடவடிக்கையே தவிர எந்த மதச் சடங்கையும் அது சார்ந்ததாகச் சொல்ல முடியாது. இது போன்ற சடங்குகள் செய்யப்படுகிறதே தவிர மதச் சடங்குகள் நடப்பதாக எனக்குத் தெரியவில்லை.

SRI A. A. RASHEED : May I know whether lighting of "kuthuvilakku" is considered religious?

THE HON. SRI C. SUBRAMANIAM : அது, ஒளி கொடுப்பதற்காக. ஒளி, அறிவு ஒளியாக இருக்க வேண்டுமென்ற முறையில் அதன் சின்னமாக விளக்கு வைக்கப்படுகிறதே தவிர அதை மதச் சடங்காக கருத முடியாது.

SRI A. VEDARATHNAM : இந்த விழாக்களில் இறை வழிபாடு நடக்கிறது. அது மதச் சடங்காகக் கருதப்படுமா ? இந்தமாதிரி விஷயங்கள்கூட ஆட்சேபிக்கப்படுகிறதே.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆட்சேபணை வருவது, ஒரு மதத்தைச் சார்ந்தவர்கள் இன்னொரு மதத்தைச் சார்ந்தவர்களைச் சொல்கிற அந்த அடிப்படையில் அல்ல. மதத்தில் நம்பிக்கையில்லாதவர்கள் கடவுள் வழிபாடு, அல்லது கடவுளைப்பற்றி பாடக்கூடாது என்று அவர்கள் மனதில் நினைத்துக்கொண்டு மற்ற மதத்தினர் பேரில் சாக்குச் சொல்லி குறைகூறுகிறவர்கள்தான் ஆங்காங்கு காணப்படுகிறார்களே தவிர இதுபோன்ற விஷயங்களை ஒரு மதத்தினர் இன்னொரு மதத்தினரை ஆட்சேபிப்பதாகத் தெரியவில்லை.

*Inter-caste marriages (encouragement)*

* 1141 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

கலப்புத் திருமணம் செய்துகொள்பவர்களுக்கு சர்க்கார் உத்தியோகங்களில் முதல் சலுகை காட்ட ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI S. M. ANNAMALAI : ஜாதிமத பேதம் ஒழிக்கப்பட வேண்டுமென்ற கொள்கையை உடைய இந்த சர்க்கார், கலப்புத் திருமணம் செய்துகொள்வதால் ஜாதிமத பேதம் ஒழியும் என்று இச் சர்க்கார் கருதுகிறதா ? அப்படியானால் கலப்புத் திருமணம் செய்துகொள்கிறவர்களுக்கு ஏதாவது சலுகைகள் தரக்கூடாதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சர்க்கார் உத்தியோகம் கொடுப்பதன்மூலம் ஜாதி மத பேதம் ஒழியும் அல்லது கலப்புத் திருமணம் செய்துகொள்ள இதுபோன்ற தூண்டுதல் வேண்டுமென்று சொன்னால் அப்படிப்பட்ட கலப்புத் திருமணம் நடக்காமல் இருப்பதே நல்லது, உத்தியோகம் கிடைக்காவிட்டால் நடந்த திருமணம் நடக்காமலே போய்விடும். அதுபோன்ற நிலை வரலாம்.

28th March 1961]

Sri K. VINAYAKAM : Apart from giving any kind of encouragement for these inter-caste marriages in the matter of employment or promotions in Government service, is it a fact that these kind of "irresponsible marriages" have not been recognised by Government?

The Hon. Sri C. SUBRAMANIAM : I do not know what the hon. member means by "irresponsible marriages". Marriages are marriages. I do not know whether the hon. Member is aware of any "irresponsible marriage" (laughter).

Srimathi A. S. PONNAMMAL : கலப்புத் திருமணம் செய்து கொள்ள முடிவு செய்து, கல்யாணம் செய்துகொண்டு நாலைந்து குழந்தைகள் பிறந்த பின் விட்டு விட்டு ஓடிவிடுகிறார்கள். ஆகவே கலப்புத் திருமணமே கூடாது என்றுகூட வைக்கலாம், அல்லது முதலில் மணந்து விட்டு அவர்களைத் துறந்து, மறு கல்யாணம் செய்துகொள்கிறவர்கள்மீது நடவடிக்கை எடுத்து தக்க தண்டனை கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : கலப்புத் திருமணம் செய்து கொள்கிறவர்களிடையே பிணக்குகள் ஏற்பட்டு ஓடிவிடுகிறார்கள் என்பதில்லை, எல்லாயிடங்களிலும் இது நடைபெறுகிறது. கலப்புத் திருமணம் நடைபெறுவதைப் பார்த்து அதில் நம்பிக்கையில்லாதவர்கள் கலப்புத் திருமணத்தினால்தான் இதுமாதிரி ஏற்பட்டுவிட்டது என்று சொல்லக்கூடிய முறையில்தான் இது இருக்கிறதே தவிர ஆண் பெண்களிடையே கலப்புத் திருமணமாகயிருந்தாலும் சரி, வைதிக திருமணமாகயிருந்தாலும் சரி, எல்லாவற்றிலும் பிணக்குகள் ஏற்படலாம், பிரிவுகள் ஏற்படலாம். கலப்புத் திருமணங்களை மட்டும் தனியாக பிரித்துக் கூறுவது சரியல்ல என்பது என் கருத்து.

Sri K. ANBAZHAGAN : கலப்புத் திருமணம் செய்து கொண்ட தம்பதிகள் பிறரால் ஒதுக்கி வைக்கப்படுகிற சூழ்நிலை இன்னும் பலவிடங்களிலும் இருப்பதால், தாழ்த்தப்பட்டவர்களுக்கும் பிற்பட்டவர்களுக்கும் அரசாங்கம் சில பல வகைகளில் சலுகை காட்டுவதைப் போன்று அந்த வகையில் சலுகை காட்ட முன்வருமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இப்பொழுது அம்மாதிரியாக ஒதுக்கி வைக்கப்படுவதாக எனக்குத் தெரியவில்லை. சில பேர்களுக்கு கௌவரம் ஏற்படுவதற்கக்கூட கேள்விப்படுகிறேன்.

*Ministers' tour (travelling allowance)*

*1142 *Q.*—Sri S. M. ANNAMALAI : } Will the Hon. the
Sri T. S. RAMASWAMY : } Chief Minister be pleased to state—

(*a*) the total travelling allowance drawn by each Minister during the last financial year and during the six months ending on 30th September 1960;

(*b*) the total number of days within this period when each of them was in the City and the number of days during this period they were on camp outside the headquarters;

(*c*) the number of trips each had made and the official purpose for which they had gone; and

(*d*) the number of official functions they have participated and the nature of the functions?

[28th March 1961

THE HON. SRI C. SUBRAMANIAM: (a), (b) & (c) A statement[a] is laid on the table of the House. The trips were made for fulfilment of public and official engagements.

(d) No information is available as no record is kept for the purpose.

SRI S. M. ANNAMALAI: தலைநகரில் ஒரு அமைச்சர்கூட இல்லாத நாட்கள் எவ்வளவு என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: கணக்குத் தெரியவில்லை. அநேகமாக ஒரு அமைச்சரும் இல்லாதிருந்த நாள் அநேகமாக இருக்க முடியாது, தப்பித் தவறி வருடத்திற்கு அல்லது இரண்டு வருடங்களில் ஒரு நாள் இருக்குமோ என்னவோ தெரியாது.

*Ammonium sulphate, etc. (distribution)*

* 1143 *Q.*—SRI T. S. RAMASWAMY: Will the Hon. the Minister for Home be pleased to state the quantity of Ammonium Sulphate, Urea and Phosphates supplied to each district during the first half of (i) the last financial year and (ii) this financial year?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: A paper[b] is placed on the table of the House.

SRI T. S. RAMASWAMY: From the statement placed on the table, I find that in Kanyakumari district, for the previous half year, 1959–60 the amount of ammonium sulphate supplied was 9,000 tons whereas for the first half year of 1960–61 the quantity supplied was only 997 tons, viz., one-tenth of the quantity supplied in 1959–60. May I know the reason for this short-fall?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The hon. Member should put a separate question regarding short supply. I may assure the hon. Member that there was no discrimination.

SRI T. S. RAMASWAMY: Will the Hon. Minister give an assurance that this will not be repeated. The agriculturists are feeling a lot over the short supply. I do not find the same with regard to other districts. May I know why this short supply for Kanyakumari district, which depends entirely on fertilizers?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: The hon. Member should not indulge in such kind of propaganda. I repeat that there is no discrimination. The short supply may be due to other causes. Whatever is available and more than 50 per cent of requirements is distributed equitably. But distribution during particular seasons would affect the requirements of other districts concerned during those particular seasons.

SRI S. M. ANNAMALAI: கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்கிற போது சரிசமமாக பங்கிட்டுத் தரப்படுகிறதென்று சொன்னார்கள். பல மாவட்டங்களில் இது மாறுபட்டுக் காணப்படுகிறது. எந்த அடிப்படையில் பிரித்துத் தரப்படுகிறது, ஜனத்தொகை அடிப்படையிலா ? அல்லது ஏரியா அடிப்படையிலா ? தரப்படுகிறது, மாவட்டங்களுக்கு இடையே இந்த வித்தியாசம் காணப்படுவதற்குக் காரணம் என்ன ?

---

a Printed as Appendix 11I ou pages 828-333 infra.

b Prited as Appendix IV on page 334 infra.

28th March 1961]

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** மொத்தத்தில் நமது தேவைக்கு ஏறக்குறைய பாதி அல்லது கொஞ்சம் அதிகமாகத்தான் இருக்கிறது. ஒவ்வொரு ஜில்லாவின் தேவைக்கு பாதி கொடுக்கப்பட்டிருக்கிறது. ஜில்லாவிற்கு ஜில்லா என்று புள்ளிவிவரங்களை வைத்துக்கொண்டு ஒப்பிடுவதில் அர்த்தமில்லை.

**Sri T. S. RAMASWAMY :** I find from the report placed on the table that in some districts they have drawn more than what was drawn in the previous year. Apart from the propaganda aspect of it, will the Government enquire into the matter and find out why there has been short supply so far as Kanyakumari district is concerned?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : I may again tell the hon. Member that distribution among districts is not made on the previous year's offtake. It is based on requirements of each district, for a particular season. As I have said at least 50 per cent of the requirements has been met.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : So far as Tanjore district is concerned I find that the quantity supplied has increased. May I know whether the fertilisers supplied include those supplied under " Package Deal " also?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : Yes, Sir, that is the explanation.

**Sri S. M. ANNAMALAI :** பாதி அளவாவது கொடுத்திருக்கிறோம் என்று சொன்னார்கள். வட ஆற்காடு மாவட்டத்தில் 1959–60-ல் முதல் " ஹாபில் " Half, அம்மோனியம் சல்பேட் 3,032, யூரியா 1,118-ம் கொடுக்கப்பட்டிருக்கிறது. 1960–61-ல் " பர்ஸ்ட் ஹாபில் " யூரியா ஒரு டன் கூட கிடையாது. பாதி அளவாவது தரப்படுகிறதென்று சொன்னார்களே அப்படி சரிசமமாக பிரித்துத் தரப்படவில்லையே, அதற்குண்டான காரணங்கள் என்ன?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** அந்தந்த ஜில்லாவிற்கு எவ்வளவு தேவைப்படுகிறதோ அதற்கு பாதி என்று சொன்னேன். அம்மோனியம் சல்பேட்டை சிலர் வாங்குகிறார்கள், யூரியாவை சிலர் வேண்டாமென்று சொல்கிறார்கள். வேண்டாமென்று சொன்னால் கொடுக்கப்படாமல் இருக்கலாம், அல்லது குறைவாக கொடுக்கப்பட்டுமிருக்கலாம்.

*Water-supply Scheme (Sivaganga)*

* **1144** *Q.*—Sri V. K. RAMASWAMY MUDALIYAR : **Will** the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether any private lands were acquired as an additional catchment area in connection with the execution of the Protected Water-supply Scheme for Sivaganga;

(*b*) the reasons for laying a new road from the third ward to the Sivaganga Railway Station by the Sivaganga Panchayat under the Local Development Scheme through this catchment area; and

(*c*) whether plans and estimates for this road have been approved by the Town-Planning Director and the Chief Engineer (Public Works Department)?

THE HON. SRI C. SUBRAMANYAM : (a) Yes, Sir.

(b) To fulfil the long felt need of the public for providing a short-cut road from the Sivaganga Railway Station to the northern portion of the town where almost all the Government offices, courts, high schools, hospitals, etc., are situated.

(c) As the Sivaganga Panchayat area is not covered by any Town-Planning Scheme, the question of obtaining the approval of either the Director of Town-Planning or the Chief Engineer, Public Works Department (General), does not arise.

*Fish oil*

* 1145 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of SRI M. P. SARATHI) : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இந்த ராஜ்யத்தில் எந்தவகையான மீன்களிலிருந்து மீன் எண்ணெய் தயார் செய்யப்படுகிறது ?

(இ) எந்தெந்த இடங்களில் மீன் எண்ணெய் தயாரிக்கப்படுகிறது ?

(உ) 1958–59, 1959–60-ல் முறையேதயாரிக்கப்பட்ட மீன் எண்ணெயின் அளவும், நிதி வருவாயும் எவ்வளவு ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : The answer [a] is placed on the table of the House.

*Study in foreign countries (aid)*

* 1146 Q.—SRI T. S. RAMASWAMY (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. Minister for Finance be pleased to state—

(a) the number of Fellowships and Study Tours abroad offered to persons of our State under :

(i) W.H.O.,

(ii) U.N.T.A.A., and

(iii) the Technical Assistance Scheme of the Government of U.S.A. (Point Four Programme) during 1959 and 1960?

THE HON. SRI C. SUBRAMANIAM : Four copies of a statement containing the particulars are placed in the Legislature Library, for the hon. Members' reference.

*Time signal (City)*

* 1147 Q.—SRI A. VEDARATHNAM : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை நகரில் எல்லா மக்களும் அறிந்துகொள்ளும் வண்ணம் மணி அறிவிக்க எதேனும் ஏற்பாடு உண்டா ?

(இ) ஆங்கில ஆட்சியில் குண்டு போட்டு மணி அறிவித்ததுபோல் மீண்டும் செய்ய அரசாங்கம் ஆலோசிக்குமா ?

(உ) இல்லையானால், மணி அறிவிக்குமாறு என்ன முறை கையாளப் படும் ?

---

[a] Printed as Appendix V on pages 335–336 infra.

28th March 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) There is no proposal to give a time signal in the City.

(*b*) The Government do not have any proposals to revive the Time Gun as the type of Gun required for the purpose is not available.

(*c*) The Government consider that as all the bigger industrial units have their own sirens to indicate specific times, for their labour and as there are clock-towers for the public in most of the areas in the city no separate arrangements need be made by Government.

**SRI A. VEDARATHNAM :** ஸார், இப்போது கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டது போல் தொழிற்சாலைகளில் ஊதப்படும் சங்கின் மூலமாக நகர வாசிகள் பயனடைய முடியாது. ஆகவே முன்பு இருந்தது போல் கன்-டைம் ஏற்படுத்தினால் கடிகாரத்தை சரியாக வைத்துக்கொள்வதற்கு உதவும். ஆகவே கன்-டைம் ஏதாவது ஏற்படுத்த உத்தேசமுண்டா ? அல்லது அதுபோன்று வேறு ஏதாவது ஏற்பாடுகள் செய்வதற்கு வகை செய்யப்படுமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இதுபற்றி எந்தவிதமான ஆலோசனையும் இல்லை. நான் தொழிற்சாலையில் ஊதுகின்ற சங்கைப் பற்றிக் குறிப்பிட்டது, அந்தந்த தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்குத்தான் உதவும். அங்கு ஊதப்படுகின்ற சங்கின் ஒலி ஊர் முழுவதுக்கும் உதவும் என்று சொல்வதற்கில்லை. மற்றவர்களுக்கு நேரத்தை தெரிந்துகொள்வதற்கு ஆங்காங்கு கடிகாரங்கள் இருக்கின்றன. அவை நேரத்தை தெரிந்துகொள்வதற்கு உதவும்.

SRI K. VINAYAKAM : Sir, as the common adage goes, that "no two watches agree at the same time in any place in the world, may I know whether the Hon. Minister is aware of the fact that in spite of there being so many public clock towers over the buildings of the Corporation of Madras, the University of Madras, the Central Railway Station, those clocks usually never show the proper time? It is so ridiculous that some of these clocks sometimes showed 3 o'clock when the correct time was actually 10 o'clock in the morning. In view of this kind of discrepancy found in the various clocks, great inconvenience is caused to the public and they are completely misled. Taking all these factors into consideration, may I know whether the Government will take interest in the matter and arrange to have one time signal of their own to indicate the proper time in the City?

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I do agree that watches never agree. I may, however, tell the hon. Member that each man adjusts his work according to his own way and according to his own watch and he does not care about the other man's watch. So, there is no use of having a common time. After all, approximately, some time must be available for everybody and this is now available. Therefore, I do not think it will be possible to have a time signal as before.

**SRI K. ANBAZHAGAN :** தலைவர் அவர்களே, முன்பு இருந்ததைப்போல் சரியாக பகல் 12 மணிக்கு நேரத்தை அறிவிக்க இப்போது வாய்ப்பு இல்லை என்று சொன்னார்கள். அப்படியானால் பல்வேறு தொழிற்சாலைகள் நடத்துவோரையும் பகல் 12 மணிக்கு சங்கு ஒலி எழுப்புமாறு அரசாங்கம் கேட்டுக்கொள்ளுமா ?

[28th March 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : தொழிற்சாலைகளில் வேலை செய்கின்ற தொழிலாளர்களுடைய சௌகரியத்திற்காக சங்கு ஊதுகிருர்கள். அதை ஊர் முழுவதிற்கும் ஊதுமாறு கேட்டுக்கொள்வது சரியல்ல. அதற்கு முயற்சி செய்வதிலும் பயன் இல்லை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : சில இடங்களில் அதாவது நகரசபைகளில் இந்த ஒலி எழுப்புவதின் காரணமாக, பக்கத்தில் இருக்கக்கூடிய ஆசுபத்திரிகளில் இருக்கக்கூடிய நோயாளிகளுக்கு (பேஷிண்ட்) தொந்தரவு ஏற்படுகிறது என்று சொல்வதை நான் கேள்விபட்டிருக்கிறேன். ஆகவே மைசூர் போன்ற இடங்களில் ஏற்பாடு செய்திருப்பது போன்று அரை செக்கண்ட், அல்லது ஒரு செக்கண்ட் (லைட்டை) விளக்கை அணைத்து ஏற்றுவது என்கிற முறையை ஏற்படுத்த முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றியும் யோசனை செய்து பார்க்கலாம். ஆனால் "வீக்"-காக இருக்கும் பல்புகள், இதனால் ப்யூஸாகி விடும். எல்லாவற்றையும் யோசித்துப்பார்க்கலாம்.

SRI A. A. RASHEED : கடியாரம் பார்க்கத் தெரியாத ஆள்களின் நன்மையைக் கருதியாவது இந்த "டைம்-கன்" முறையை சர்க்கார் ஏற்படுத்துமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கடிகாரம் பார்க்கத் தெரியாதவர்களுக்கு இதன் மூலமும் நேரத்தை அறிந்துகொள்ள முடியாது.

SRI A. VEDARATHNAM : நம்முடைய கிராமங்களில் படிக்கத் தெரிந்தவர்களை விட படிக்கத் தெரியாதவர்கள்தான் அதிகமாக இருக்கிருர்கள். அவர்கள் சரியான நேரத்தில் வேலைக்குப் போகக்கூடிய அளவில், நேரத்தை குறிப்பிடுவதற்கு ஏதாவது அறிகுறி ஏற்படுத்தப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : நாம் சென்னை நகரத்தைப் பற்றி பேசிக்கொண்டிருக்கிருேம். கிராமங்களைப்பற்றி அல்ல.

*Beggar problem*

* 1148 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பிச்சைக்காரர்கள் ஆண்டுக்கு ஆண்டு அதிகரித்து வருவது உண்மையா ?

(இ) அப்படியானல் அதற்கான காரணங்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No year-wise census is taken to find out the number of beggars in this State.

(*b*) Does not arise.

*Bug nuisance*

* 1149 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மலேரியா ஒழிப்புக்கு D.D.T. அடித்ததின் காரணமாக மூட்டைப் பூச்சிகள் அதிகமாயுள்ளது என்பது உண்மையா ?

(இ) அப்படியானல் அதைப்போக்க சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

28th March 1961]

SRI S. M. ANNAMALAI : ஸார், நான் வட ஆற்காடு ஜில்லா டெவலப்மெண்ட் கவுன்சில் கூட்டத்தில் டி.எம்.ஓ. அவர்களிடத்தில் இதைப் பற்றி கேட்டதற்கு, . . . D.D.T. அடிப்பதின் காரணமாக மூட்டைப்பூச்சிகள் அதிகமாகி விட்டன. இதைத் தொலைப்பதற்கு மருந்து வாங்க இப்போது சர்க்காரிடத்தில் பணம் இல்லை. சர்க்கார் பணம் தருவதாக இருந்தால் இந்த மருந்தை வாங்கலாம் என்று சொன்னார்கள். ஆனால் அமைச்சர் அவர்கள் சொல்லுவது வேறுவிதமாக இருக்கிறது. ஆகவே அமைச்சர் அவர்கள் இதைப்பற்றி மறு பரிசீலனை செய்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இதைப்பற்றி நன்றாக பரிசீலனை பண்ணித்தான் சொல்லுகிறேன். மலேரியா ஒழிப்புத்திட்டத்தின் கீழ் கொசுக்களை ஒழிப்பதற்காக D.D.T. அடிக்கப்படுகிறது. அப்போது மலேரியாவுக்கு காரணமாய் இருக்கின்ற கொசு செத்துப்போய் விடுகிறது. அதோடு மூட்டைப்பூச்சி, பேன் முதலியவைகளும் செத்துக்கொண்டிருந் தன. இப்போது D.D.T. அடிக்கும்போது மூட்டைப்பூச்சிகள் (இம்யூன்) ஆகி திரும்பவும் சாகாமல் வந்துவிடுகிறது. முன்னால் சௌகரியமாய் இருந் தது, மூட்டைப்பூச்சிகள் எல்லாம் செத்துக்கொண்டிருந்ததினால், இப்போது அப்படி இல்லாததால் அசௌகரியம் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்லு கிறார்கள்.

SRIMATHI HEMALATHA DEVI : தலைவர் அவர்களே, கொசுக் களை ஒழிப்பதற்கு மருந்துகள் அடிக்கும்போது மூட்டைப்பூச்சிகளையும் ஒழிப்பதற்கு மருந்து அடிக்கப்படுகிறது என்பது உண்மையா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அவ்விதம்தான் மருந்து அடிக்கப்பட்டது. அதில் நல்ல பலனும் இருந்தது. இப்போது அந்த மருந்து அடித்தாலும் மூட்டைப்பூச்சிகள் எல்லாம் திமிர் ஏறி யிருப்பதால் சாவதில்லை. (சிரிப்பு).

*Diarrhoea (North Arcot)*

* 1150 *Q*.— SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டத்தில் வயிற்றுப்போக்கு (Diarrhoea) வியாதி அதிகமாய் பரவி வருவதைத் தடுக்க சர்க்கார் எடுத்துக்கொண்ட முயற்சிகள் யாவை ?

(இ) இதுவரை எத்தனை பேர்கள் இறந்துவிட்டார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The range Health staff and the reserve Health staff posted to the affected area have undertaken disinfection, chlorination of water sources and treatment of patients by sulphaguanidine and pro-diarrhoea mixture. Cases requiring hospital treatment are removed to hospitals.

(*b*) Ninety-three.

SRI S. M. ANNAMALAI : ஸார், கனம் அமைச்சர் அவர்கள் தருகின்ற புள்ளி விவரங்களுக்கும் உண்மையில் அங்கே நடைபெறுகின்ற விவரங்களுக்கும் பெரிய வித்தியாசம் இருக்கிறது. அங்கு பல்லாயிரக் கணக்கில் மக்கள் செத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று மகஜர்கள் வந்து கொண்டிருக்கின்றன. ஆரணி தாலூகாவில் மட்டும் 5,000 பேர்கள் இறந்து போயிருக்கிறார்கள் என்று அங்கிருந்து சுமார் 10 மகஜர்கள் வந்திருக் கின்றன. அதிகாரிகள் தங்கள் பொறுப்பிலிருந்து தப்பித்துக்கொள்வதற் காக இவ்விதம் கொடுத்திருக்கலாம் என்று நினைக்கிறேன். இந்த நோய்க்கு முக்கியமான காரணம் கடலை எண்ணெய்தான் என்று

[28th March 1961

சொல்லப்படுகிறது. இதற்கான கொட்டை எல்லாம் கெட்டுபோனதின் காரணமாகதான் இவ்விதம் ஏற்பட்டதாகவும் சொல்லப்படுகிறது. ஆகவே இதைப்பற்றி மறு பரிசீலனை செய்துபார்த்து சரியான புள்ளி விவரம் தர முடியுமா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : நான் கொடுத்திருக்கின்ற புள்ளி விவரம் வேண்டுமானால் கொஞ்சம் குறைவாக இருக்கலாம், ஆனால் ஆயிரக்கணக்கில் இருக்கும் என்று சொல்லுவதை ஒப்புக்கொள்ள முடியாது. இதனுடைய நேரடி காரணத்தைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. கிங் இன்ஸ்டிடியூட்டிலிருந்து போயிருந்த கோஷ்டி இதைப்பற்றி பரிசீலித்துப் பார்த்துவிட்டு, இது காலரா சம்பந்தப்பட்டது அல்ல என்று சொல்லியிருக்கிறார்கள். இன்ஃப்ளூன்ஸாவைப் பற்றியே நமது இந்தியர்கள்தான் கண்டு பிடித்தார்கள். இதைப்பற்றி மேலும் ஆராய்ச்சி செய்வதற்காக கூனூரிலுள்ள ஆராய்ச்சி சாலைக்கு அனுப்பி பரிசீலனை செய்ய உத்தேசம்.

SRI M. KALYANASUNDARAM : உணவுப் பண்டங்களில் கலப்படம் அதிகரித்து வருவதினால்தான் இந்த நோய் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறதே, அது உண்மையா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அண்ணாமலை அவர்களும் சொன்னார்கள், கடலை எண்ணெயிலுள்ள தகராறு காரணமாகத்தான் இது வருகிறது என்று. கடலை எண்ணெய் உபயோகிக்காத இடத்திலும் இந்த நோய் வந்திருக்கிறது. இதன் உண்மையான காரணத்தை கண்டுபிடிக்க முடியவில்லை. கண்டுபிடித்துவிட்டால் அதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கலாம். அதற்காக ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள்.

DEPUTY SPEAKER : Questions are over.

**[*Note*.—An asterisk * at the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—ANNOUNCEMENTS.

### (1) IDENTIFICATION OF MEMBERS AT THE FORT GATE DURING SECURITY CHECK.

DEPUTY SPEAKER : Hon. Members are aware of the point raised in the Assembly by the hon. Member, Sri K. Vinayakam, that on 20th March 1961, he was stopped by some military personnel and asked about his identity while he entered Fort St. George for attending the Assembly meeting on that day. The military authorities were requested to state the circumstances in which the incident took place. They have stated that as a security measure periodical verification of military passes issued to the personnel working/trading inside Fort St. George Military area, are carried out with a view to stop any unauthorized persons entering the area and accordingly a check of passes issued, was carried out by the personnel of Military Police on 20th March 1961 from 05-50 to 07-30 hours at the entrance gates of Fort St. George and that no personnel employed or visiting Government offices inside the Fort have been stopped and checked. However, they feel that during the police check, the hon. Member may have been questioned about his identity and to avoid similar incidents in future, they have stated that strict orders have been issued to the personnel of the Detachment Military Police to take special care when carrying out security work and that the dates of future checks will be intimated in advance to the Legislative Assembly Department.

28th March 1961]

[Deputy Speaker]

When the dates of future checks are intimated, the sergeant of this department could be deputed for duty to identify the Members if they are not having identity cards with them. 9-30 a.m.

**SRI M. KALYANASUNDARAM** : ஸார், இந்த அஸெம்ப்ளி ப்ரெஸிங்ட்ஸில் வந்து மிலிட்டரி பர்ஸொனெல் செக் பண்ண வேண்டிய அவசியம் என்ன, காரணம் என்ன ?

DEPUTY SPEAKER : The check was not within the precincts of the Assembly, but outside, at the entrance to the Fort St. George.

**SRI M. KALYANASUNDARAM** : மிலிட்டரி அத்தாரிட்டீஸுக்குச் சொல்ல வேண்டும், இப்படி செக் பண்ண வேண்டியது அவசியமானால் அஸெம்ப்ளியை விட்டு விட்டு, டெம்பரரியாக அடைப்பு போட்டு அதற்கு மறு புறத்தில் செக் பண்ண வேண்டும், அல்லது அஸெம்ப்ளி ஸெஷன் நடக்கும் காலம் தவிர மற்ற காலங்களில் செக் செய்து கொள்ளவேண்டும் என்று.

**DEPUTY SPEAKER** : இப்போதுதான் அவர்கள் சொல்லியிருக்கிறார்களே. அந்த மாதிரி செக் பண்ணுவதாக இருந்தால் முன்னதாகவே அஸெம்ப்ளி டிபார்ட்மெண்டுக்கு அவர்கள் தெரிவித்து விடுவார்கள். அப்போது சார்ஜெண்ட் இருந்து அங்கத்தினர்களை ஐடெண்டிஃபை பண்ணுவார்.

He will identify our Members to allow them to enter the gate. So, there is no difficulty about it. I do not think that there should be any discussion about it.

**SRI V. K. KOTHANDARAMAN** : அரசியல் கைதிகளை விடுதலை செய்யக்கோரி . . . .

DEPUTY SPEAKER : The hon. Member should resume his seat.

(The hon. Member Sri Kothandaraman was still standing in his seat.)

The hon. Member should know that when the Chair is on its legs, the hon. Member should resume his seat.

(2) NOMINATION OF MEMBERS TO THE COMMITTEE OF PRIVILEGES.

DEPUTY SPEAKER : I have to announce to the House that the following 15 Members were duly nominated for the election of fifteen Members of the Madras Legislative Assembly to the Committee of Privileges for the financial year 1961–62 :—

(1) Sri K. ANBAZHAGAN.
(2) Srimathi T. N. ANANDANAYAKI.
(3) The Hon. Sri M. BHAKTAVATSALAM.
(4) Sri A. GOVINDASAMY.
(5) Sri P. G. KARUTHIRUMAN.
(6) Sri M. KALYANASUNDARAM.
(7) Sri V. S. MANIKKASUNDARAM.

(8) Sri K. R. NALLASIVAM.

(9) Sri S. PAKKIRISAMI PILLAI.

(10) Sri T. S. RAMASWAMY.

(11) Sri A. A. RASHEED.

(12) Sri V. K. RAMASWAMY MUDALIYAR.

(13) Sri T. SAMPATH.

(14) Sri V. SUBBIAH.

(15) The Hon. Sri C. SUBRAMANIAM.

As the number of candidates validly nominated is equal to the number of vacancies to be filled, viz., *fifteen*, I hereby declare them to have been duly elected to the Committee of Privileges for the financial year 1961-62. The Deputy Speaker is a Member ex-officio of the Committee.

Under sub-rule (4) of rule 183 of the Madras Legislative Assembly Rules, I nominate Sri V. S. Manikkasundaram to be the Chairman of the Committee.

## III.—GOVERNMENT BILLS.

### (1) THE MADRAS CO-OPERATIVE SOCIETIES BILL, 1961. (L.A. BILL NO. 21 OF 1961).

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Deputy Speaker, Sir, there had been a technical error in the introduction of the Madras Co-operative Societies Bill, 1961, yesterday. Therefore, I will first move a motion for the withdrawal of the Bill and then the Chair may announce the recommendation of the Governor and then I will introduce the Bill.

DEPUTY SPEAKER : Yes.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I beg leave to withdraw the Madras Co-operative Societies Bill, 1961 (L.A. Bill No. 21 of 1961).

DEPUTY SPEAKER : The question is—

'That leave be granted for the withdrawal of the Madras Co-operative Societies Bill, 1961 (L.A. Bill No. 21 of 1961).'

The motion was put and carried and the Bill was withdrawn.

## II.—ANNOUNCEMENTS—*cont.*

### (3) THE MADRAS CO-OPERATIVE SOCIETIES BILL, 1961.

DEPUTY SPEAKER : I have to announce to the House that the Governor has given his recommendation for the introduction and consideration of the Madras Co-operative Societies Bill, 1961, in the Madras Legislative Assembly.

III.—GOVERNMENT BILLS—*cont.*

(1) THE MADRAS CO-OPERATIVE SOCIETIES BILL, 1961.—*cont.*

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I beg leave to introduce the Madras Co-operative Societies Bill, 1961.

DEPUTY SPEAKER : The question is—

' That leave be granted for the introduction of the Madras Co-operative Societies Bill, 1961. '

The motion was put and carried and the leave was granted.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I introduce the Bill.

DEPUTY SPEAKER : The Bill is introduced.

(2) THE MADRAS APPROPRIATION (NO. 2) BILL, 1961 (L.A. BILL NO. 18 OF 1961).

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, I move—

' That the Madras Appropriation (No. 2) Bill, 1961 (L.A. Bill No. 18 of 1961) [a] be taken into consideration. '

This is with reference to Excess Grants.

DEPUTY SPEAKER : The question is—

' That the Madras Appropriation (No. 2) Bill, 1961 (L.A. Bill No. 18 of 1961) be taken into consideration.'

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 was put and carried.

Clause 3 with the Schedule was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

' Thta the Madras Appropriation (No. 2) Bill, 1961 (L.A. Bill No. 18 of 1961) be passed.'

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Appropriation (No. 2) Bill, 1961 (L.A. Bill No. 18 of 1961) be passed.'

The motion was put and carried and the Bill was passed.

[a] Published in the *Fort St. George Gazette*, dated 25th March 1961.

(3) THE MADRAS APPROPRIATION (NO. 4) BILL, 1961 (L.A. BILL NO. 19 OF 1961).

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, I move—

'That the Madras Appropriation (No. 4) Bill, 1961 (L.A. Bill No. 18 of 1961) [a] be taken into consideration.'

This is with reference to Supplementary Grants.

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Appropriation (No. 2) Bill, 1961 (L.A. Bill No. 19 of 1961) be taken into consideration.'

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 with the Schedule was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

'That the Madras Appropriation (No. 2) Bill, 1961 (L.A. Bill No. 19 of 1961) be passed.'

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Appropriation (No. 4) Bill, 1961 (L.A. Bill No. 19 of 1961) be passed.'

The motion was put and carried and the Bill was passed.

(4) THE MADRAS APPROPRIATION (NO. 3) BILL, 1961 (L.A. BILL NO. 20 OF 1961).

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, I move—

'That the Madras Appropriation (No. 3) Bill, 1961 (L.A. Bill No. 20 of 1961) [a] be taken into consideration.'

DEPUTY SPEAKER : Motion moved—

'That the Madras Appropriation (No. 3) Bill, 1961 (L.A. Bill No. 20 of 1961) be taken into consideration.'

**SRI V. K. RAMASWAMY MUDALIYAR** : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மசோதாவின்பேரில் முக்கியமாக பாலிஸி மாட்டரைப் பற்றி இரண்டு வார்த்தைகளைச் சொல்ல அபிப்பிராயப்படுகிறேன்.

முதல் முதலாவது இந்த சர்க்காரிலே, அதுவும் முக்கியமாக ரெவின்யூ டிபார்ட்மெண்டிலே பேப்பர்கள் டிலே ஆவதைப்பற்றி அநேக அங்கத்தினர்கள் இவ்விடம் பேசியிருக்கிறார்கள், நானும் சொல்லி இருக்கிறேன். ரெவின்யூ இலாகாவில் மனுக்கள் போட்டால் அந்த மனுக்களுக்கு ஒரு விதமான பதிலும் முக்கியமாக கலெக்டர் ஆபீசிலிருந்தும் அதன்கீழுள்ள

[a] Published in the *Fort St. George Gazette*, dated 25th March 1961.

28th March 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

தாசில்தார் ஆபீசிலிருந்தும் வருவதே கிடையாது. அதன் காரணமாக மக்கள் ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். எல்லாவற்றிற்கும் மனுக்கள் போட்டு, அப்படிப் போட்ட மனுக்களுக்கெல்லாம் நல்ல உத்திரவுகள் வருமென்று சர்க்காரிடம் நாம் இன்றைக்கு எதிர்பார்க்க முடியாது. அதை நான் ஒப்புக்கொள்கிறேன். என்ன காரணத்திற்காக இப்படி உத்திரவுகள் பிறப்பிக்கப்படவில்லை என்பதையாவது திட்டவட்டமாக சொல்லி, அந்த அளவிலேயாவது பதில் போட்டால் மிகவும் நன்றாக இருக்கும். அதை அமைச்சர் அவர்கள் கண்ணும் கருத்துமாக கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். உடனடியாக ஏதாவது ஒரு பதில் அங்கிருந்து மனு போட்டவர்க்கு வரும்படி செய்யவேண்டும்.

அடுத்து இந்த வீடு கட்டும் திட்டத்தை எடுத்துக்கொண்டால், இந்தத் திட்டத்தின் காரணமாக அநேக வீடுகள் கட்டப்பட்டுவந்தபோதிலும்கூட இன்னும் குறைந்த வருமானம் வருபவர்களுக்கும் **(Low Income Group)**, மிடில் இன்கம் குரூப், மத்தியதர வருமானம் கிடைக்கும் நபர்கள் போன்றவர்களுக்கு போதுமான வீட்டு வசதி கிடைக்காத காரணத்தினால் மக்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இதுவரைக்கும் 7 பிளான் ஸ்கீம் போட்டோம்; 5 நான்-பிளான் ஸ்கீம் போட்டோம். பத்து வருஷங்களும் ஆயிற்று. இன்னும் பார்க்கப்போனால் ஆங்காங்கே சேரிகள் ஒழிக்கப்படாமல்தான் இருக்கிறது. அதற்காகப் பலத் திட்டங்கள் வகுக்கப்பட்டது. அப்படி இருந்தும், ஆங்காங்கே புதுப்புது சேரிகள் ஆரம்பிக்கப்பட்டுவருகிறது. இதற்கும் திட்டவட்டமாக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரு ஏற்பாடு செய்யவேண்டும். அப்படி செய்வதோடு, சிறு வீடுகள் கட்டுவதற்கும் ஏதாவது வழி செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். சில இடங்களில் இப்போது வீடுகள் கட்டப்பட்டுவருகின்றது. கூட்டுறவு இலாகா அமைச்சர் அவர்கள்கூட நகரத்தைச் சுற்றிலும் இப்போது 2,000 ஏக்கராக்கள் நிலங்களை வாங்கி சில ஏற்பாடுகள் செய்வதாகச் சொல்கிறார்கள். உண்மைதான். ஆனால் இன்னும் புதுப்புது சேரிகள் ஆங்காங்கே ஏற்படுகின்றன. ஒவ்வொரு முனிசிபாலிடியிலும், ஒவ்வொரு பிராந்தியங்களிலும் இந்த நிலைமை இருக்கிறது. அதைத் தடுப்பதற்கு வழி செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக கல்வித் திட்டத்தை எடுத்துக்கொண்டால், செகண்டரி கல்வி முறை இப்போது தமிழிலேயே போதிக்கப்பட்டுவருகிறது. அதிலும் இப்பொழுது கல்லூரிகளிலும் தமிழில் போதிக்க வேண்டுமென்பதற்காக கோயம்புத்தூரில் ஒரு எக்ஸ்பரிமெண்ட் பேசிஸில் ஒரு காலேஜில் தமிழில் போதிக்கப்பட்டுவருகிறது. அப்படிச்செய்வதால் ஆங்கிலத்தின்தரம் குறைந்துவிடுகிறது. இப்படி தமிழில் செகண்டரி கல்வி முறையை படித்துவிட்டு, மாணவர்கள் டெக்னிகல் கல்விமுறைக்கு வரும்போது ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். அதன் காரணமாக பப்ளிக் சர்வீஸ் கமிஷன் ரிப்போர்ட்டைப் பார்த்தால் தரம் ரொம்பவும் குறைந்துவிட்டது என்று எழுதியது தெரியும். அதன் காரணமாகத்தான் பரீட்சையிலும் அதிகமான மாணவர்கள் தவறிக்கொண்டுவருகிறார்கள். அதற்கும் சர்க்கார் திட்டவட்டமான ஒரு முடிவு செய்து, அவர்களுடைய கொள்கை என்ன என்பதைச் சொல்லவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக மெடிகல் டிமாண்டைப் பார்த்தால், இதற்கு 434 லட்சம் ரூபாய்தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இன்னும் இந்த வைத்திய வசதி அநேக இடங்களில் சரிவர இல்லை. ஜெனரல் ஆஸ்பத்திரியை எடுத்துக்கொண்டால் அங்கே அநேகம் நோயாளிகள் வெளியே வாராண்டாவிலும், கீழேயும்தான் படுத்துக்கொண்டு இருக்கிறார்கள். அவர்களுக்குப் போதுமான மருந்து வசதியும் கிடையாது. அவர்களுக்குப் போதுமான டாக்டர்கள் வசதியும் கிடையாது. டாக்டர்கள் சம்பள விகிதத்தைப்பற்றி மீண்டும் பரிசீலனை செய்வதற்கு சர்க்கார் யோசிக்கவேண்டும். தவிர, கிராமங்களிலேயும் போதுமான மருத்துவ வசதி கிடைக்காத காரணத்தினால், அங்குள்ள மக்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். தவிர, இந்த போஸ்ட்-கிராஜுவேட் கோர்ஸை **(Post-graduate Course)** எடுத்துக்கொண்டால், அதிலே

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [28th March 1961

முக்கியமாக தொராசிக் சர்ஜரி, நியுரோ சர்ஜரி போன்றவைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டும். நம்முடைய பிராந்தியத்தில் அப்படிப்பட்ட வைத்தியர்கள் இல்லாமல் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அதேபோல் பிளாஸ்டிக் சர்ஜரிக்கும் ஆட்கள் கிடையாது. இப்படிப்பட்ட கோர்ஸுகளுக்கு டாக்டர்கள் வெளிநாடுகளுக்குப் போவதாக இருந்தால், கொலம்போப் பிளான் முதலிய உதவிகளை எதிர்ப்பார்க்காமல் நம்முடைய சர்க்கார் உதவியாலேயே அவர்களை அனுப்பி வைக்கவேண்டும். இதுமாதிரியான கோர்ஸை தனிப்பட்டவர்கள் படிப்பதற்கு முன்வந்தாலும் அவர்களுக்கும் நாம் கொஞ்சம் உதவி செய்து, அவர்களை மேல்நாடுகளுக்கு அனுப்பி வைக்கவேண்டும். நான்-ஜெனரல் சர்ஜரிக்கோ, ஜெனரல் மெடிசனுக்கோ அவர்களை மேல்நாடுகளுக்கு அனுப்பவேண்டுமென்று சொல்லவில்லை. நம் பிராந்தியத்திலே இல்லாத படிப்பு வசதிகளைப் பெறுவதற்கு டாக்டர்களை தாராளமாக அனுப்பவேண்டும். ஆகவே இதிலேயும் சர்க்காருடைய திட்டவட்டமான கருத்து என்ன என்பதை சொல்ல வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

SRI S. M. ANNAMALAI : கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, நான் நேற்று சில மான்யங்கள்மீது பேசலாம் என்றிருந்தேன். ஆனால் அவைகள் கிலெடின் ஆகிவிட்டபடியால், முக்கியமாக சில கொள்கைகளைப்பற்றி நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். டிஸ்பிளேஸ்ட் பர்சனுக்கு 5,000 ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இலங்கை போன்ற இடங்களிலிருந்து நம் நாட்டிற்கு வரக்கூடியவர்களுக்கு செலவழிப்பதற்காக 5,000 ரூபாய் மட்டும்தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தொகையைப் பார்க்கின்றபோது மிகவும் வேதனைப்படவேண்டியிருக்கிறது. இப்படிப்பட்ட இனங்களுக்கு பிற மாகாணங்களிலிருந்து, அதாவது பாகிஸ்தான் போன்ற பிற மாகாணங்களிலிருந்து வரக்கூடியவர்களுக்கு அதிகமான தொகை செலவழிக்கப்பட்டு, நம் நாட்டைச் சார்ந்தவர்களுக்கு 5,000 ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பது உண்மையிலேயே மிகமிக வருத்தப்படவேண்டியிருக்கிறது.

அதைப் போலவே 5 லட்ச ரூபாய் செண்ட்ரல் ஸ்டிரைக்குக்கு என்று ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்த 5 லட்ச ரூபாயை நம் சர்க்கார் மத்திய சர்க்காரிடம் வற்புறுத்தி வாங்கியாகவேண்டும். காரணம், இந்தப் பணம் மத்திய சர்க்காருக்காக செலவழிக்கப்பட்ட பணம். இந்த 5 லட்சம் ரூபாயை அவசியம் நம்முடைய சர்க்கார் மத்திய சர்க்காருக்கு எழுதிக் கேட்டு வற்புறுத்தி வாங்கியாகவேண்டும்.

அடுத்து, பிற்பட்ட இனங்களுக்கு உதவித் தொகையாக சென்ற ஆண்டு 10 லட்சம் ஒதுக்கப்பட்டது. இந்த ஆண்டிற்கு 4 லட்சம்தான் ஒதுக்கப்பட்டு இருக்கிறது. அதிலே ஸ்காலர்ஷிப்புக்கு 1 லட்சம்தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதையெல்லாம் பார்த்தால், நாளாவட்டத்தில் பிற்பட்ட வகுப்பினர்களுக்கு தொடர்ந்து நன்மை செய்வதற்கான அறிகுறி இருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே இதையும் உயர்த்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக இப்போது பிரைஸ் பாண்டைப்பற்றிச் சொல்ல விரும்புகிறேன். இதிலே அதிகாரிகள் வற்புறுத்தப்படுகிறார்கள். அவர்களுக்கு டார்ஜட் அசீவ்மெண்ட் என்று போட்டு, ஒரு டிப்டி தாசில்தார் 2 லட்சம் ரூபாய்க்கு வசூல் செய்யவேண்டுமென்று சொல்வதால் அவர் ஆபீஸ் வேலையைக்கூட கவனிக்காமல் இந்த பிரைஸ் பாண்ட் கலெக்ஷனுக்காகத்தான் போய்க்கொண்டிருக்கக்கூடிய நிலைமையை இன்றைக்குப் பார்க்கிறோம். ஆகவே இவர்கள் மக்களிடத்திலே சென்று வற்புறுத்தவேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. குறிப்பாக, என்னுடைய தொகுதியிலே பல இடங்களில் இந்த வற்புறுத்தல் செய்யப்பட்டு இருக்கிறது. அதன் காரணமாக டிபுடி தாசில்தாருக்கு ஒரு வக்கீல் நோட்டீஸ்கூட கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர் ஒரு சாதாரணமானவர், 25 ரூபாய்க்கு இந்த பிரைஸ் பாண்டை வாங்குகிறேன் என்று கூறியிருக்கிறார். அப்படி இருந்தும், அங்குள்ள டிபுடி தாசில்தாரும், பிளாக் டெவலெப்மெண்ட் ஆபீசரும்

28th March 1961] [Sri S. M. Annamalai]

சென்று அவரை வற்புறுத்தியிருக்கிறார்கள். அவர் 25 ரூபாய்க்கு வாங்கிக் கொள்கிறேன் என்று சொல்லியும், இல்லை 5,000 ரூபாய்க்கு வாங்க வேண்டுமென்று சொல்லி, அதனால் கைகலப்புகூட ஏற்பட்டிருப்பதாக தெரிகிறது. அதனால் அவருடைய ரைஸ் மில் ஹல்லரை அந்த இரண்டு அதிகாரிகளும் சேர்ந்து எடுத்துக்கொண்டு வந்திருப்பதாகத் தெரிகிறது. இப்படி ரைஸ் மில் ஹல்லரை எடுத்துக் கொண்டு வந்திருப்பதால், அவருக்கு நஷ்டமேற்பட்டதாகக் கூறி அந்த டிபுடி தாசில்தாரின் மேல் 1,000 ரூபாய்க்கு மான நஷ்ட வழக்கை அந்த வியாபாரி தொடர்ந்திருக்கிறார். அந்த வக்கீல் நோட்டீசின் நகல் ஒன்றை எனக்கு அனுப்பியிருக்கிறார். இதையெல்லாம் பார்க்கும்போது இந்த பிரைஸ் பாண்டு விற்பனைக் காக சர்க்கார் மறைமுகமாக எப்படியெல்லாம் அதிகாரிகளை உபயோகப் படுத்துகிறது என்பது நன்கு விளங்குகிறது. இந்த சர்க்கார் ஒவ்வொரு கலெக்டர்களுக்கும் மறைமுகமாக உத்திரவு போட்டு, நீங்கள் இவ்வளவு பிரைஸ் பாண்டை வசூலிக்க வேண்டுமென்று தாக்கீது அனுப்பப்பட்டிருப்ப தாகத் தெரிகிறது. இன்னும் பார்க்கப் போனால் இதை இந்த பைனான் ஷியல் ஆண்டு முடிவடைவதற்கும் அதாவது மார்ச்சு மாதம் முடிவடை வதற்குள் வசூலிக்க வேண்டுமென்றும் சொல்லப்பட்டிருப்பதாகத் தெரி கிறது. இன்றைக்கு கண்ட்ராக்டர்கள் வேலைகளைச் செய்துவிட்டு, பில்லுக் குரிய பணத்தைப் பெறுவதற்குப் போகும்போது, 1,000 ரூபாய்க்கு பில் என்றால், 500 அல்லது 200 ரூபாய்க்கு பிரைஸ் பாண்டு வாங்கவேண்டு மென்று சொல்லப்படுகிறது. அதேபோல் விவசாயிகளுக்கு கடன் கேட் டால், 100 ரூபாய்க்கு இந்த பிரைஸ் பாண்டு வாங்கினால் 1,000 ரூபாய் கடன் கொடுப்பதாகச் சொல்லப்படுகிறது. இப்படியெல்லாம் பல இடங்களில் நேரடியாகவும் வற்புறுத்தப்படுகிறது. இதையெல்லாம் பார்க்கும்போது சர்க்காரால் எவ்வளவு ஹாரஸ்மெண்ட் செய்யப்படுகிறது என்பது நன்கு தெரியும். இவ்வளவு தூரம் பலாத்கார முறை கையாளப்படுவதால், டிபுடி தாசில்தாருக்கு வக்கீல் நோட்டீஸ் ஒரு சிறு தொகைக்காக அனுப்பப் பட்டிருக்கிறது என்று சொன்னால், அது சர்க்காருக்கு அனுப்பப்பட்டிருக் கிறது என்று தான் சொல்லவேண்டும். சர்க்கார் எந்த அளவுக்கு வற் புறுத்தி வாங்குகிறார்கள் என்பதை பத்திரிகைகளிலே பார்த்தாலும்கூட தெரிந்து கொள்ளலாம். ஆங்காங்குள்ள மக்கள் தங்களுக்கு ஏற்படும் கஷ்டங்களை பத்திரிகைகளுக்கு எழுதிச் சொல்லி, அவர்கள் அதை வெளி யிடுவதன் மூலமும் இது நன்கு விளங்குகிறது. காரணம் இதிலே அதி காரிகளுக்கு டார்ஜட் விதிக்கப்படுகிறது. டிபுடி தாசில்தாருக்கு 2 லட்சம் ரூபாய்க்கு வசூலிக்க வேண்டும். அதைப்போல் கிராம சேவக்குக்கு 50,000 ரூபாய். ஒரு கிராம சேவக்குக்கு 50 ஆயிரம் என்று சொன்னால், அவர் என்ன செய்வார். மக்களிடம் சென்று வற்புறுத்த வேண்டியிருக் கிறது. அப்படி வற்புறுத்துவதற்காக வேண்டி அவர்கள் மக்களிடம் சென்று, நீ ரைஸ் மில்லுக்கு லைசென்ஸ் வைத்துக்கொள்ளவில்லை, சினி மாவிற்கு லைசென்ஸ் வைத்துக்கொள்ளவில்லை என்று சொல்கிறார்கள். இப்போதுதான் அவர் ரைஸ் மில் ஆரம்பித்திருக்கிறார் என்றால், லைசென்ஸ் கூடவா இல்லாமல் இருக்கும். ஆகவே இப்படி வற்புறுத்துவதைத் தவிர்க்க வேண்டும். கட்டாயம் இவ்வளவு தொகைக்கு பிரைஸ் பாண்டு வசூலிக்கவேண்டுமென்ற டார்ஜட்டை ஏற்படுத்தக்கூடாது. இப்படி 5,000 ரூபாய்க்கு கட்டாயம் பிரைஸ் பாண்டு வாங்கித் தான் ஆக வேண்டுமென்று வற்புறுத்தக் கூடாது. இதுபற்றி இன்னும் 7, 8 கடிதங்கள் வந்திருக் கின்றன. இது மத்திய சர்க்கார் வெளியிட்டிருக்கிற பிரைஸ் பாண்டுத் திட்டம். இதிலே நம்முடைய அதிகாரிகளை இவ்வளவு தொகைக்கு பிரைஸ் பாண்டுகள் வசூலிக்க வேண்டுமென்று வற்புறுத்தக்கூடாது. இப்படி வற் புறுத்துவது அநீதி, கொடுமை. இது அதிருப்தியை ஏற்படுத்துகிறது. ஆகவே சர்க்கார் இதிலே தலையிட்டு இதைத் தடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Sri M. KALYANASUNDARAM :** கனம் உதவி சபாநாயகர் அவர் களே, இந்த நிதி ஒதுக்கு மசோதா மீது பேசும்போது, இன்னும் அடுத்த ஒரு வருஷத்திற்குள், தேர்தலுக்கு முந்தி இருக்கக் கூடிய வருஷம் என்ற காரணத்தால், நிர்வாகத்தில் அவசியமானால் புதிய மசோதாக்கள் கொண்டு

வந்து நடவடிக்கை எடுக்க வேண்டிய சில பிரச்சினைகள் பற்றிக் கூற விரும்புகிறேன். கல்வி சம்பந்தமாகச் சொல்லும்போது, கல்வி இலாகாவைப் பார்ப்போமேயானால், கடந்த 15, 20 வருஷ காலத்தில் எவ்வளவு அதிகமாகத் தொகை உயர்ந்திருக்கிறது என்பதும், எவ்வளவு அதிகமாக பள்ளிகள் நிர்வகிக்கப்படுகின்றன என்பதும் பல வகையிலும் விளங்கும். **1939**-ம் வருஷ பட்ஜட்டைப் பார்த்தால், ஆறு கோடி ஜனத தொகை கொண்ட, ஆந்திரா, மலபார், தமிழ்நாடு எல்லாம் சேர்ந்து, பட்ஜட் பூராவுமே **16** கோடி ரூபாய்தான். இன்றைக்கு கல்விக்கு மட்டும் **21** கோடி ரூபாய் செலவழிக்கிறோம் என்றால், எந்த அளவுக்கு பட்ஜெட் அதிகரித்திருக்கிறது, எந்த அளவுக்கு கல்வி இலாகாவின் பொருப்புகள் அதிகரித்திருக்கிறது என்பது விளங்கும். அது மட்டுமல்ல, சர்க்கார் தொகையில்லாமல், பொது மக்கள் கட்டடம் கட்டிப் போடுவதிலும், பள்ளிகளுக்குத் தேவையான பொருள் கொடுப்பதிலும், வரும் தொகைகளையும் சேர்த்துப் பார்த்தால், இன்னும் இதைவிட பல கோடி அதிகமாக இருக்கும் என்று நிச்சயமாகக் கூறமுடியும். இப்படியிருக்கும் போது, கல்வி இலாகாவை நிர்வகிக்கக்கூடிய அதிகாரத்தை எடுத்துக்கொண்டால் ஒரே டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன்என்ற ஒருவரே இருக்கிறார். அவருக்கு டெபுடி டைரக்டர்கள், பி.ஏ.-கள் இருக்கலாம். ஆனால், தலைமை அதிகாரி ஒருவரேதான். இந்த இலாகாவில் கடந்த இரண்டு மூன்று வருஷங்களில் நிர்வாகத் திறமை குறைந்திருக்கிறது. வேலைகள் அதிகரித்திருக்கலாம். பள்ளிக்கூட அபிவிருத்தி மாநாடுகள் நடத்தவில்லையா என்கலாம். ஆனால், ஆசிரியர்கள் மனுக்கள், பொது மக்கள் மனுக்கள் எதுவானாலும் சரி, பதில் எழுதுவது என்பதே கிடையாது. நிர்வாகத்திறன் சம்பந்தப்பட்ட மட்டில், எல்லா மட்டங்களிலும் இந்த இலாகாவில் தரம் குறைந்திருக்கிறது என்பது என் தாழ்மையான அபிப்பிராயம். சொந்த அனுபவத்தின் பேரில் சொல்லுகிறேன். இந்த சபையிலேகூட ஒரு கனம் அங்கத்தினர் சொன்னார்கள், ஒரு வெற்றுக் காகிதம் வந்த ஒரு அபூர்வமான சம்பவத்தை. அதுவே இந்த இலாகாவின் நிர்வாகத் திறனுக்கு ஒரு சான்று ஆகும். இந்த இலாகாவிலிருந்து பதில்கள் இப்படி வருகின்றன என்றால், விசாரணை, மற்ற நடவடிக்கை எடுப்பது போன்ற காரியங்களில், எதுவும் சரியாக நடப்பதில்லை. பொருப்புகள் அதிகரித்திருக்கின்றன. வேலைகள் முக்கியமானவை. தனிப்பட்ட அதிகாரிகள் செயல் எப்படி இருந்தாலும் கவலையில்லை ; அதைத் திருத்தி விடலாம். ஆகவே, இந்த இலாகாவை இரண்டாகப் பிரித்து, இதற்கு இரண்டு டைரக்டர்கள் போட்டு, ஆரம்பக் கல்வி சம்மந்தமாக ஒரு பகுதியும், மற்றதை ஒரு பகுதியாகவும் பிரித்து விடலாமா என்று யோசனை செய்ய வேண்டும்.

கல்வி இலாகாவில் இப்பொழுது சமீபகாலமாக நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. வரவேற்கத்தக்க நடவடிக்கைகள் ஆனாலும் அவை ஆசிரியர்களிடத்தில் தவறான வழியில் செலுத்தக் கூடியவைகளாக இருக்கின்றன. காரணம் என்னவென்றால், மேலே இருக்கக்கூடிய அதிகாரிகள் கையாளும் முறைதான் என்பதை அமைச்சர் கவனத்திற்குக் கொண்டுவர கடமைப் பட்டிருக்கிறேன். ஆசிரியர்கள் மூலம் திட்டங்கள் நிறைவேறுவதற்குப் பதில், எதிர்ப்பும் ஏற்படுகிறது. அதிருப்தியும் ஏற்படக் கூடிய நிலைமை இருக்கிறது. நான் குறிப்பிடுவது பள்ளி சீரமைப்பு மாநாடுகள் பற்றி, குழந்தைகளுக்கு உணவளிக்கும் திட்டம் பற்றி, இரண்டும் சம்மந்தப்பட்ட மட்டிலும், அடிக்கடி ஆசிரியர்களுக்கு கோடா முறை கொடுத்து, வசூல் செய்யச் செய்வது என்ற முறை இருக்கக் கூடாது. மூன்று வருஷத்திற்கு ஒரு முறை, நான்கு வருஷத்திற்கு ஒரு முறை என்று செய்யலாம். ஆனால் ஒவ்வொரு வருஷமும், கட்டடத்திற்காக, பள்ளிச்சாதனங்களுக்காக என்று மக்களிடம் வசூல் செய்ய வேண்டியிருக்கிறது. ஸ்கூல் இம்ப்ரூமெண்ட் கான்பெரன்ஸ் என்று சொல்லி, வசூல் செய்து, பள்ளி சாமான்கள் சேகரித்து, சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள். கொள்கையளவில் அதற்கு ஆட்சேபிக்கவில்லை. ஆனால், அதை அமுல் நடத்துவதில், அந்த முறை ஆட்சேபிக்கக்கூடியதாகத்தான் இருக்கிறது. எனக்குச் சில பள்ளிக்கூடங்களில் அனுபவம் உண்டு. சேலம் ஜில்லாவில், தாராமங்கலம் என்ற இடத்தில் நம்

28th March 1961] [Sri M. Kalyanasundaram]

அமைச்சரும், மத்திய சர்க்கார் அமைச்சரும் வர இருக்கிறார்கள். அங்கே சமீபத்தில் பள்ளிச் சீரமைப்பு மாநாட்டிற்காகத் தயாராகிறது. அது சம்பந்தமாக ஆசிரியர்கள் படும் கஷ்டத்தைப் பார்க்கும் போது, மிகவும் வருத்தமாக இருக்கிறது. அவர்களுக்குக் கோட்டா வைத்து கான்பரன்ஸுக்காக 8 ரூபாய் கொடுக்கவேண்டும் என்று நிர்ப்பந்திப்பது அமைச்சரவர்கள் கூர்ந்து கவனிக்க வேண்டும். ஜனங்களிடம் வசூல் செய்வதில் கூட, மேல் அதிகாரிகள், டி. இ. ஒ., டி. பி. ஐ. இவர்கள் செய்தால் நலமாக இருக்கும். அவர்கள் "உன் ரேஞ்சில் கான்பரன்ஸ் நடக்கிறது, அதற்காக இவ்வளவு நீங்கள் வசூல் செய்ய வேண்டும்" என்று சொல்லி ஒரு வரம்பை ஏற்படுத்துவது விரும்பத் தக்கது அல்ல. முதலில் அவர்கள் ரூபாய் 5 கொடுத்திருக்கிறார்கள். மறுபடியும் அவர்களை ரூபாய் 3 கொடுக்க வேண்டும் என்கிறார்கள். இப்படி வற்புறுத்தப்பட்டால் எப்படி ஆசிரியர்கள் ஒத்துழைப்புக் கிடைக்கும்? சேகரித்த சாமான்களை எப்படி ஒரு இடத்திலிருந்து மற்ற இடத்திற்கு அவர்கள் கொண்டு போக முடியும்? நான் என் சம்பந்தப்பட்டவரை, அப்படிச்சாமான்களைக் கொண்டு போக இலவசமாக ட்ரான்ஸ்போர்ட் வசதி செய்து கொடுத்திருக்கிறேன். நான் ஏதோ என் சொந்தக் கருத்தை வைத்துக் கொண்டு குறை சொல்லுவதாக நினைக்கக்கூடாது. நானே உதவியும் செய்திருக்கிறேன். அப்படி ஒரு இடத்தில் இருந்து மற்ற இடத்திற்கு கிட்டத் தட்ட 3,000, 4,000 ரூபாய் பெறுமானமுள்ள சாமான்களை எடுத்துச் செல்ல வேண்டியிருக்கிறது. அதற்கே ட்ரான்ஸ்போர்ட் செலவு குறைந்தது ரூபாய் 300-க்கு மேல் ஆகிவிடுகிறது. அப்படி ட்ரான்ஸ்போர்ட் உதவியளித்த ஒருவர் கூட இப்படி ஏன் இவர்கள் செய்கிறார்கள், நான் இந்தச் செலவிற்கு இன்னொரு மேசை, பீரோ, கொடுத்திருப்பேனே என்றார்கள். சொன்னால் அமைச்சர் நம்ப மாட்டார்கள், உதவி செய்தவரே இது வீண் விளம்பரம் என்று அபிப்பிராயப்பட்டார்கள். அப்படியே மக்களும் அபிப்பிராயப்படுகிறார்கள். இது வெட்டிச் செலவு, அர்த்தம் இல்லாத விளம்பரம் என்று கருதப்படுகிறது என்பதை அமைச்சர் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். இது விஷயத்திலும் பள்ளி ஆசிரியர்கள் விஷயத்திலும் பரிகாரம் கண்டுபிடித்தாகவேண்டும். அதிகார மனோபாவத்தோடு கோடா நிர்ணயிப்பதை தவிர்க்கவேண்டும். வசூல் செய்ய இவர்களை உபயோகிக்கலாம். அது அவர்களுடைய உற்சாகம், ஆர்வம் இவற்றைப் பாதிக்காத வகையில் செய்தால் நலமாக இருக்கும். அதை ரொம்பத் தீவிரமாகச் செய்ய முற்பட்டால், அது அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் விஷம் என்பதுபோல் ஆகும். ஆகவே, இதைத் திருத்தி அமைக்க வேண்டும். அதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டும். வேண்டுமானால், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளையும் சேர்த்துக்கொண்டு வசூல் செய்யட்டுமே. ஆசிரியர்களைக் கஷ்டப்படுத்தக்கூடாது. இந்த 8 ரூபாய் கொடுப்பதில், ஒரு ஆசிரியர் கேட்டாராம். "எப்படி ஸார் கொடுப்பது" என்று. அதற்கு அதிகாரி சொன்னாராம், "இப்படித்தான் உங்களுக்கு சம்பளம் அதிகமாகக்கொடுத்திருக்கிறார்களே; அது ஒரு மாதம் வரவில்லை என்று நினைத்துக்கொள்ளுங்கள்" என்றாராம். இது எவ்வளவு மோசமாக இருக்கிறது? அவர்கள் இஷ்டபூர்வமாகக் கொடுக்க வேண்டும். இப்படி வற்புறுத்தப்பட்டால், அவர்கள் மனவெறுப்பு அடைவார்கள், மன வேறுபாடு அடைவார்கள்.

இந்த இலாகாவைப் பூரணமாகப் பரிசீலனை செய்து, ஆரம்பக் கல்வி செகண்டரிக் கல்வி இவைகள் விஷயமாக துரிதமாக நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். இந்த வருஷத்தில் இந்த சபைக்கு நல்ல வேலை இருக்கிறது. நில சீர்திருத்தச் சட்டம் இருக்கிறது. இப்பொழுது அமைச்சர் கூட்டுறவு மசோதாவை பிரேரேபித்திருக்கிறார்கள். அது பரிசீலனை செய்ய சில மாதங்கள் ஆகும். இந்த நான்கு வருஷங்களைப் பார்த்தால், போன வருஷம் நாம் 45 நாட்கள்தான் கூடியிருக்கிறோம் என்று முன்பே சொன்னேன். ஐந்தாண்டுத் திட்டத்திற்கெல்லாம் எப்படித் திட்ட மிடுகிறோமோ அம்மாதிரியே, இந்த சட்டங்கள் சம்பந்தமாகவும் ஒவ்வொரு வருஷமும் இன்னின்னது கொண்டு வரவேண்டும் என்று திட்டமிட்டுச் செய்தால் நலமாக இருக்கும். சில நேரத்தில் மசோதாக்கள் குறிப்பிட்ட காலத்தில்

நிறைவேற்ற வேண்டியிருக்கும். ஆனால், மற்றவைகளைத் திட்டமிட்டுச் செய்யலாம். எல்லாவற்றையும் கடைசியில் கொண்டு வந்து அவசரமாகச் செய்ய வேண்டுமா என்பதைப் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். குறித்த காலத்தில் ஒரு பேஸ்ட் ப்ரோக்ராமோடு செய்ய நடவடிக்கை எடுக்கப்படுமா என்று அறிய ஆவல் உள்ளவனாக இருக்கிறேன்.

10 a.m. பாசனத் திட்டங்கள் சம்பந்தப்பட்ட மட்டில் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே ஒதுக்கப்பட்டுள்ள தொகை குறைவு என்று சொல்வதில்லை. போன வருஷம் 20 கோடி ரூபாய் ஒதுக்கியிருப்பதைப் பார்க்கிறபோது இப்போது 27½ கோடி ஒதுக்கியிருப்பது குறைவு அல்ல. ஆனால் ஒரு சில திட்டம் ஒரு சில பகுதியில் மட்டும் அதிகமாகச் செலவிட்டுவிடக்கூடிய நிலைமைக்குக் கொண்டுபோய்விடும் என்பதை அமைச்சர் அவர்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். பின் தங்கிய பகுதிகளில் எல்லாம் பாசன வசதி பெருகவேண்டுமென்ற எண்ணம் நாட்டில் ஏற்பட்டிருக்கிறது. மூன்றாவது திட்டம்பற்றி ஆலோசித்த குழுவில் கூட இதைப் பற்றிச் சொல்லியிருக்கிறோம். அந்த ஆலோசனைக் குழுவின் யோசனைகளின்படி எல்லா பாசனத் திட்டங்களையும் எடுத்துக்கொள்வதற்குப் பணம் கண்டுபிடித்தாகவேண்டும். அவற்றுக்காக இந்தச் செலவைக் குறைக்க வேண்டுமென்று சொல்லவில்லை. ஐம்பதாயிரம், 60 ஆயிரம் ரூபாய் செலவு செய்து கல்போட்ட திட்டங்களை எல்லாம் கூட எடுத்து நிறைவேற்றுவதற்கு முயற்சி செய்யவேண்டும். சும்மா கல்லைப் போட்டது ஒரு வேளை 1962-ம் வருஷ தேர்தலில் வோட்டு வாங்கப் பிரயோசனப்படலாம். மற்றபடி அந்த அந்தத் திட்டங்களில் வேலையை அப்படியே நிறுத்தி வைப்பது செலவு செய்த பணம் வீணாகப்போவதற்குதான் பயன்படும். அந்த விவரங்களை எல்லாம் நான் சொல்ல விரும்பவில்லை, அமைச்சர் அவர்களுக்கே தெரியும் என்கிற காரணத்தினால். ஆகவே இத்திட்டங்களுக்கும் நிதி ஒதுக்கித் தரவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

அதோடு கூட இத்திட்டங்களுக்கு எல்லாம் காரணமாய் இருந்த தொழிலாளிகள் எல்லாம் புறக்கணிக்கப்பட்டு வருகிறார்கள். பிராஜக்டுகளில் கிட்டத்தட்ட 30 வருஷம் வேலை செய்தவர்கள் எல்லாம் கூட நிரந்தரம் செய்யப்படவில்லை. அவர்கள் தொடர்ந்து பணியாற்றி வந்திருந்தபோதிலும்கூட ரெக்கார்டு பூர்வமாக அது காட்டப்படவில்லை. வீடூர் திட்டம் முடிந்தது என்றால் இன்னும் திட்டப் பகுதிக்குப் போகச் சொல்கிறார்கள். அதுவும் பெயர் எழுதிக்கூட அனுப்புவதில்லை. நான் சாதாரணமாக மண் வெட்டுகிறவர்கள், கல்தூக்குகிறவர்கள் போன்றவர்களைக்கூடச் சொல்லவில்லை. இயந்திரங்களிலே வேலை செய்யக்கூடிய ஆற்றலும், தகுதியும், திறமையும் பெற்ற தொழிலாளர்களையே இப்படிப் பலகாலமாக நிரந்தரமாக்காமல் வைத்திருக்கிறார்கள். அவர்களுக்கு எந்தவிதமான வசதியும் அளிக்கப்படுவதில்லை. இதனால் அவர்களிடத்திலே அதிருப்தி வளர்ந்து வருகிறது. நம்முடைய திட்டங்கள் எல்லாம் ஓரளவுக்குத் துரிதமாகவும் அதுவும் எத்தனையோ குறைபாடுகள் இருக்கின்றன என்றாலும் போட்ட திட்டத்திற்கு மேல் செலவு போகாமல் நிறைவேறுவதற்கு இவர்கள் தான் காரணமாக இருந்தார்கள். இவர்களை அதற்காகத் தனியாகப் பாராட்டாவிட்டாலும் அவர்களுடைய சர்வீஸ் முறையை ஒழுங்குசெய்வதற்கு இந்தச் சர்க்கார் உடனடியாக வரவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். இந்தத்திட்டங்களுக்கு ஓரளவு என்ஜினியர்கள் பொறுப்பு என்று சொன்னாலும் இந்தத் தொழிலாளிகள்தான் தங்கள் ரத்தத்தைச் சிந்தியவர்கள். தங்கள் ஆற்றலையும் வலிவையும் காட்டி உழைத்தவர்கள். ஆகவே ஒட்டுமொத்தமான இவர்களுடைய சர்வீஸைக் கணக்கெடுத்து ஒழுங்கு செய்யவேண்டும் என்பதாக இச்சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

மூன்றாவதாக நான் கூறவிரும்புவது நகர்புரங்களின் அபிவிருத்தி. கிராமப்புரங்கள் மிகவும் பிற்பட்ட நிலையில் இருந்தன. அதைமாற்றுவதற்குத்தான் பஞ்சாயத்துச் சட்டம் கொண்டு வந்தோம். அது இன்னும்

28th March 1961] [Sri M. Kalyanasundaram]

துரிதமாக அபிவிருத்தி செய்யப்பட வேண்டுமென்பதில் இரண்டுவிதக் கருத்து இருக்கமுடியாது. ஆனால் நகர்புரங்களிலேயே பெரும்பாலும் தொழில அபிவிருத்தி அதிகமாகிக்கொண்டேயிருக்கிறது. அதனால் ஜனத் தொகையும் பெருகிக்கொண்டிருக்கிறது. இன்றைக்கு நகரத்தின் முக்கிய மான தேவையாக இருப்பது சுகாதார வசதி, குடிதண்ணீர் வசதி இரண்டும்தான். அப்படிப் பார்க்கிறபோது சென்னை நகரமும் சரி, மற்ற நகரங்களும் சரி பின்தங்கிய நிலைமையில்தான் இருக்கின்றன. திருச்சி மதுரை, கோவை போன்ற நகரங்களில் குடி தண்ணீர் வசதி போது மானதாக இல்லை. திருச்சி சாலைகளைப் பார்த்தால் தெரியும். பெரிய வண்டி நடு ரோட்டிலே போக முடியாது. இப்போது பெரிய வண்டி களும் கூடப் போவதனால் ஒரே தூசி கிளம்புகிறது. நகரத்தின் ரோடு களுக்கு ஒரு கோடியில் இருந்து இன்னொரு கோடி வரையிலுமாவது தார் போட்டால்தான் தூசி கிளம்பாமல் இருக்கும். அப்போதுதான் சுகாதாரம் பாதுகாக்கப்படும். இப்போது ரோடு போட கல் கொட்டினால் 5 வருஷம் ஆகிறது. அதை எடுக்க தார் போட 3 வருஷம் ஆகிறது. வருகிற 29-ந் தேதி கூட அமைச்சர் அவர்கள் திருச்சி செல்லப் போவதாகத் தெரி கிறது. அவருடைய சுற்றுப்பிரயாணத்தின்போது அவசியம் திருச்சி ரோடுகள் எல்லாவற்றிலும் ஒரு முறை தனியாகச் சென்று பார்க்க வேண்டும். அப்படிப் பார்த்தால் திருச்சியைவிடவேண்டுமென்று அருவ ருப்பு அடைவார்கள். அதோடு இந்த நகரத்தில் குடிதண்ணீர் பிரச்சனை தீர்க்கப்படவேண்டும். காவேரிக்கரையில் இருக்கிறது என்றுதான் பெயர். வாடர் ஒர்க்ஸ் அபிவிருத்தி செய்யப்படாத காரணத்தினால் குடிதண்ணீர் கஷ்டம் அங்கே அதிகமாக இருக்கிறது. எல்லாக் கட்சிக்காரர்களும் அதைச் சொல்லி வருகிறார்கள். இப்போது ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்தான் சேர்மானாக இருக்கிறார். இருந்தாலும் பயன் இல்லை. உடனடியாக அந் நகரத்து வாடர் ஒர்க்ஸை அபிவிருத்தி செய்வதற்கு முக்கிய கவனம் செலுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

கோவை நகரம் பெரிதும் அபிவிருத்தி அடைந்து வருகிறது. அந் நகரம் பார்ப்பதற்கே குளுமையாக இருக்கிறது. ஆனால் அங்கேகூட குடி தண்ணீர்க் கஷ்டம். சிறுவாணித் திட்டத்தை நிறைவேற்றினால் தான் குடிதண்ணீர் பிரச்சனை தீரும். விவசாயத்திற்குப் பயன்படுத்தாவிட்டாலும் குடி தண்ணீருக்காக மட்டும் கோவை நகரத்திற்கும், அந்த வழியில் இருக்கக்கூடிய பஞ்சாயத்து கிராமங்களுக்குமாக அதை எடுத்துக்கொள்வ தற்கு கேரள அரசாங்கத்தோடு பேச்சு வார்த்தை நடத்தி உறுதி மொழி அளிப்பதோடு அதைத் துரிதமாகக் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்தத் தொகுதியில் நிற்கிறார்களா இல்லையா என்பது வேறு விஷயம். நகரத்திலே வேறு இடத்திலே அவர் கள் நின்றாலும் நிற்கலாம். அவர்கள் பிறந்து வளர்ந்து தொழில் புரிந்த இடமாதலால் அங்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அபிவிருத்திகள் நடந்த பகுதியிலே அவர்கள் நிற்கலாம். (குறுக்கீடு) ஏனென்றால் அங்கு நின்றால் அங்கு நிறை வேற்றப்பட்ட திட்டங்களைப்பற்றி மக்களுக்கு எடுத்துச் சொல்லலாம். இது வும் முக்கியமானது என்றாலும் கோவை நகரத்திலே இருக்கும் குடி தண்ணீர்ப் பிரச்னை தீர்க்கப்படவேண்டும் என்பதைப் பற்றி கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவருகிறேன்.

மதுரை, கோயம்பத்தூர், திருச்சி, சேலம், இந்நான்கு நகரங்களிலும் 30, 32 சேரிகள் இருக்கின்றன. குடிசைவாழ்பகுதியில் உள்ள மக்கள் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். குறிப்பாக மதுரையில் சேரி மக்கள் மிகவும் மோசமான நிலையில் இருக்கிறார்கள். 4 வருஷ காலமாக இந்த இடத்தை விட்டு வெளியேறும்படியாக நோட்டீஸ் கொடுத்து வருகி றார்கள். அங்கே 400, 500 குடும்பங்கள் வாழ்ந்துகொண்டு வருகிறார் கள். இதுமாதிரிதான் திருச்சி நகரத்தை எடுத்துக்கொண்டாலும் அங்கே சேரிகள் மிகவும் மோசமான நிலையில் இருக்கின்றன. சுகாதார வசதிகள்

கிடையாது. நகருக்கு 10 மைலுக்கு அப்பால் உள்ள இடங்களில் ஹரிஜன மக்களை வசிக்கச் சொல்கிறார்கள். கூலி வேலைக்கு ஆட்கள் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. ஆகையால் இப்பொழுது நகரத்திலே காலியாக உள்ள மனைக்கட்டுகளை அவர்களுக்குக் கொடுக்கவேண்டும். அதற்குப் பணம் போதாமல் இருக்கலாம். இப்பொழுது மத்திய சர்க்கார் ஸ்லம் க்ளியரான்ஸ் ஸ்கீமின் கீழ் கொடுக்கிற உதவியைக் கொண்டு, இந்த நான்கு நகரங்களிலும் உள்ள முனிசிபாலிடிகள் **(Contribution)** கொடுக்க வேண்டுமென்று உத்திரவு போட்டு அந்தப் பணத்தைக் கொண்டு எல்லா சேரிகளையும் அடுத்த ஐந்தாண்டுத் திட்டகாலத்திற்குள் அபிவிருத்தி வேண்டும்.

பெரிய முனிசிபாலிடிகளைச் சுற்றி பெரிய பஞ்சாயத்துக்கள் இருக்கின்றன. பொதுவாக கோயம்பத்தூர், திருச்சி, சேலம், மதுரையில் மேஜர் பஞ்சாயத்துக்கள் இருக்கின்றன. அதனுடைய வருமானம் சுமார் 60, 70 ஆயிரம்தான் இருக்கும். அந்தந்த பஞ்சாயத்துக்கள் நடக்கவேண்டுமென்பதற்காக அங்கங்கே ரோட்டு போடுவதற்காக என்று மண்ணை ரோட்டு ஓரங்களில் போட்டு விட்டுப் போய்விடுகிறார்கள். மழை பெய்தால் மண் எல்லாம் கறைந்து போய் பழைய நிலைமைக்கு வந்துவிடுகிறது. இதனால் பண விரயம் ஆகிறது. ஆகையால் மேஜர் பஞ்சாயத்துக்களுக்கு அபிவிருத்தி செய்வதற்கு அதிகப் பணம் கிடையாது. ஆகவே குடி தண்ணீர் வசதி செய்வதற்கும், சாக்கடை சீர்திருத்தம் செய்வதற்கும் சர்க்காரே, பொறுப்பு ஏற்றுக்கொண்டு இவைகளை நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இதைத் தவிர டவுன் பிளானிங் கீழ் பல டவுன்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இதில் பல குறைபாடுகள் இருக்கின்றன. இங்கெல்லாம் ஜன நெருக்கடி அதிகமாகிவிடுகிறது. இங்கு சுகாதார வசதியும், குடி தண்ணீர் வசதியும் செய்து கொடுக்கவேண்டியிருக்கிறது. இதற்குப் பணம் அதிகமாகத் தேவைப்படுகிறது. இதற்கெல்லாம் அரசாங்கம் கடன் உதவி அளித்து ஒரு நீண்ட காலத் திட்டத்தை ஏற்படுத்தி அபிவிருத்தி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்னும் புதிய பஞ்சாயத்துக்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இங்கு பஞ்சாயத்து யூனியனைப்பற்றிய புஸ்தகமே அங்கத்தினர்களுக்குக் கிடைப்பதில்லை. பஞ்சாயத்துத் தலைவரே பணம் கொடுத்து வாங்கி இருக்கிறார்கள். அதேமாதிரியாக பாரங்கள் கிடைப்பதில்லை. சல்லான் பாரம் வாங்க வெண்டுமென்றால் 1 அணா கொடுத்து வாங்குகிறார்கள் என்று ஒரு பஸ் ஆபரேடர் தெரிவித்தார். இந்த விஷயங்களையெல்லாம் கவனிப்பதற்கு சப்லிமென்டரி கிராண்ட் 5 லட்சம் ரூபாய் கொடுத்திருக்கிறார்கள். அப்படி இருந்தும்கூட அதற்கான நடவடிக்கை எடுத்துக் கொள்ளவில்லை. இதைத் தவிர பஞ்சாயத்து யூனியன்களிலே பிளாக் தேர்ந்தெடுப்பதிலே ஏ, பி, ஸி, டீ என்று தரம் இருக்கிறது. அது மெகானிகலாக நிர்ணயிக்கப்படுகிறது. வருமானம் எவ்வளவு, ஜனத்தொகை எவ்வளவு என்று கணக்கிடுகிறார்கள். உதாரணமாக பொன்மலைபேட்டையில் 140 சதுர மைலில் 45 ஆயிரம் ஜனத்தொகை இருக்கிறது. இதை ஏ பிரிவாகப் பிரித்திருக்கிறார்கள். ஆனால் உண்மையாக இது ஒரு பின்தங்கிய இடம். ஆகையால் சர்க்கார் வருமானம், ஜனத்தொகை என்ற அடிப்படையிலே தரத்தை நிர்ணயிக்காமல் பின் தங்கிய பகுதியாக இருந்தால் அதற்குத் தகுந்த பிரகாரம் ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இன்னும் பல விஷயங்களைப்பற்றிப் பேச இருக்கிறேன். அதிகமாகப் பேசிக்கொண்டே போகலாம். அதற்கு நேரம் கிடையாது. இன்னும் ஒரு விஷயத்தைப்பற்றி மாத்திரம் சொல்லிவிட்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

இதுவரையில் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த அரசியல் கைதிகளை இன்னும் விடுதலை செய்யவில்லை. கனம் அமைச்சர் அவர்கள் ' அரசியல் கைதிகள் அல்ல அவர்கள் ' என்று இந்த் சபையில் இரண்டு மூன்று நாட்

களுக்கு முன்பு ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கும்போது சொன்னதாக நான் வெளியூரில் இருக்கும்போது பத்திரிகையில் படித்தேன். அவர்கள் அரசியல் கைதிகள் அல்ல என்று எப்படிச் சொன்னார்கள் என்று தான் எனக்குப் புரியவில்லை. எனக்கும் கொஞ்சம் அரசியலைப் பற்றித் தெரியும். இந்த அரசியல் கைதிகளில் பெரும்பாலோர் திருநெல்வேலி கான்ஸ்பிரஸி கேஸ் சம்பந்தப்பட்டவர்கள். அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட சார்ஜ் ஷீட்டிலே **'to attempt to overthrow the Government by force and overawe the Government established by law by show of force'** என்று சொல்லியிருக்கிறது. பலாத்காரத்தைக்கொண்டு அரசாங்கத்தைக் கவிழ்ப்பது, அரசாங்கத்தை பயமுறுத்த பலாத்காரம் பிரயோகிக்கப்பட்டது என்பதுதான் அதன் அர்த்தம். இதுமாதிரி, ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என்று குற்றச் சாட்டுகள் இருக்கின்றன. 144-வது செக்ஷனை மீறுகிறவர்கள் . . . . . . . . . . . . . . . . .

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இம்மாதிரி தண்டனை அனுபவித்துவரும் கைதிகள் எல்லாம் அரசியல் குற்றங்கள் செய்தவர்கள் என்று நான் சொல்வதற்குத் தயாராய் இல்லை.

SRI M. KALYANASUNDARAM : அந்தந்த குற்றங்கள் அரசியல் காரணத்திற்காகத்தான் செய்யப்பட்டிருக்கின்றன. அரசியல் போராட்ட காலத்தில் செய்யப்பட்ட குற்றங்கள்தான் அவை. வெள்ளைக்காரன் காலத்தில் உபயோகப்படுத்தின அதே கிரிமினல் சட்டத்தின் கீழ்தான் தண்டிக்கப்பட்டார்கள். வெள்ளைக்காரன் எந்த விதமான 144 செக்ஷனை உபயோகப்படுத்தினானோ அதேமாதிரியாக இப்பொழுது எதிர்க்கட்சியின் மீது பிரயோகப்படுத்துகிறார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : இப்பொழுது மக்கள் ஓட்டுப் போட்டு வெளியே அனுப்பக்கூடிய நிலைமை இருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM : ஓட்டை எப்படி உபயோகப்படுத்திக் சொள்ளுகிறார்கள் என்று எனக்குத் தெரியும்.

THE HON. SRI R. VENKATARAMAN : அப்போது இருந்த நிலைமைக்கும் இப்பொழுது உள்ள நிலைமைக்கும் வித்தியாசம் என்னவென்றால் அப்போது எல்லா சட்ட சபைகளிலும் தீர்மானம் போட்டு வெள்ளைக்காரனே வெளியே போ என்றால்கூட போகமாட்டான். ஆனால் இப்பொழுது ஒரு அமெண்ட்மெண்ட் தோற்றுவிட்டால் கூட சர்க்கார் ராஜினமா செய்யும்.

SRI M. KALYANASUNDARAM : 1946–50-க்கு இடையே நடந்தவை 1950-க்கு பிறகு நடந்தவை. ஒன்றைச் சொல்லுங்கள். அரசியல் சட்டத்தை ஏற்றுக்கொண்டு பார்லிமெண்டரி முறை மூலம் சோஷியலிஸத்தை அமைக்க முடியும் என்ற காரணத்தினால் கம்யூனிஸ்ட் கட்சி பலாத்கார முறையில் அதிகாரத்தைக் கைப்பற்ற விரும்பாமல் இருக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. விவசாயி, நிலப்பிரபுக்கள், முதலாளி-தொழிலாளி என்றிருக்கும் வரை, இப்பொழுதுள்ள அரசாங்கக் கொள்கைப் பிரகாரம் விலைவாசிகள் ஏற ஏற தகராறுகள் வரத்தான் செய்யும், அரசாங்கத்திற்கு எதிர்ப்பு இருக்கத்தான் செய்யும். அரசாங்கத்தை எதிர்க்க ஜனநாயகத்தில் மக்களுக்கு உரிமையிருக்க வேண்டும். எப்படியும் எதிர்ப்பதற்கு உரிமையிருக்க வேண்டும். (கனம் ஸ்ரீ ஆர். வெங்கட்ராமன் : வோட்டளித்துச் செய்யலாமே.) கேரளாவில் வோட்டளித்தா செய்தீர்கள் ? அரசியல் சட்டப்படிதான் கம்யூனிஸ்ட் மந்திரி சபை கேரளாவில் அமைக்கப்பட்டது. அதை நீங்கள் அடக்கி ஒடுக்கிவிடவில்லையா ? கலகம் செய்தவர்கள் முறையாகவா செய்தார்கள் ? அங்கு அட்மினிஸ்ட்ரேஷன் நடத்த நீங்கள் இடையூறு விளைவிக்கவில்லையா ? நான் உங்களிடம் பிச்சை கேட்கவில்லை. கலகம் செய்ய எங்களுக்கு சக்தியில்லாமல் இல்லை. போலீஸை வைத்துக்கொண்டு, அமைதி இருப்பதாக நினைக்காதீர்கள். (கனம் ஸ்ரீ ஆர். வெங்கட்ராமன் : எவ்வளவு தவறான பாதையில் போக முடியும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்.) சக்தி

இல்லாததால் அல்ல. நீங்கள் ப்ரொவோக் செய்தாலும் நாங்கள் அதை வலியுறுத்தவில்லை. கம்யூனிஸ்ட் கட்சி பலாத்காரத்தில் இறங்க வில்லை. எங்களுக்கு தைரியம் இல்லாமலில்லை, நீங்கள் எவ்வளவுதான் எங்களை அடித்தாலும் நாங்கள் வளருவோம். உலகில் எங்கும், பலாத் கார முறையினால் கம்யூனிஸ்ட் இயக்கம் வளருவதை யாராலும் தடுக்க முடியவில்லை, தடுக்க முடியாது. அப்படி அதைத் தடுக்க, அதன் வளர்ச் சியைத் தடுக்க என்ன முயன்றும் ஒன்றும் வெற்றியடையவில்லை. கம்யூனிஸ்ட் கட்சியின் சிறந்த கொள்கைகள்தான் அதற்குக் காரணம், நாங்கள் தவறுகள் செய்யலாம், ஆனால் கம்யூனிஸ்ட் கட்சிக் கொள் கைகள் சிறந்தவை. கம்யூனிஸ்ட் கட்சி வளர்ந்து கொண்டுதான் வருகிறது, அதை யாராலும் அடக்க முடியாது.

**DEPUTY SPEAKER**: **The hon. member has already taken more time.**

**SRI M. KALYANASUNDARAM**: கம்யூனிஸ்ட் கட்சி எதைக் கோரு கிறதோ அதை இவர்கள் தீர்மானமாக ஏற்றுக்கொண்டு விடுகிறார்கள். அரசியல் ஜால வித்தையாக மட்டும் அது இருக்கக்கூடாது, நடை முறைக்கு அதைக் கொண்டு வரவேண்டும். பார்லிமெண்டரி முறைகள் மூலம் இன்று கம்யூனிஸ்ட் கட்சி இயங்குவது என்று முடிவு செய்து திட்டவட்டமாக வெளியிலே சொல்லியிருக்கிறோம். அதிலிருந்து பின்வாங் கப்போவதில்லை. இந்தக் குற்றங்கள் அரசியல் நோக்கத்தோடு செய்யப் பட்டவையென்று போலீஸ் சாட்டிய குற்றப்பத்திரிகையில் கூட சொல்லப் பட்டிருக்கிறது. அப்படியிருக்க அவர்களை அரசியல் கைதிகள் என்றோ அல்லது அவர்கள் செய்த குற்றம் அரசியல் குற்றம் என்றோ சொல்லாது சாதாரண குற்றம் என்று எடுத்துக்கொண்டாலும் அவர்களை எவ்வளவு வருடம் ஜெயிலில் வைத்திருக்கிறீர்கள். அரசியல் கைதியல்ல, அதனால் அம்னஸ்டி இல்லை என்று சொல்கிறார்கள். கொலைக்குற்றம் செய்தவர்கள் யாராவது எட்டு, ஒன்பது வருடங்களுக்கு மேல் சிறையில் இருக்கிறார்களா ? இன்று சிறையில் இருக்கும் கைதிகள், 302-ன் கீழ் கன்விக்ஷன் ஆனவர் கள் எவ்வளவு பேர்கள் இருக்கிறார்கள், அவர்களுக்கு எவ்வளவு வருடத் தண்டனை கொடுக்கப்பட்டிருக்கிறது. . . . . .

**THE HON. SRI M. BHAKTAVATSALAM**: நான் மறுபடியும் உறுதி யாகச் சொல்ல முடியும், சமீபத்தில் இது விஷயமாகக் கூட பரிசீலனை செய்து பார்த்தேன். ரெமிஷன் கொடுக்கிற விஷயத்தில் இதில் ஒன்றும் வித்தியாசம் இல்லை. மற்றவர்களுக்கு எப்படி எப்பொழுது ரெமிஷன் கொடுக்கப்படுகிறதோ அம்மாதிரி இவர்களுக்கும் கொடுக்கப்படும்.

**SRI M. KALYANASUNDARAM**: அப்படிக் கொடுக்கப்பட்டிருந் தால் இதற்குள் அவர்கள் விடுதலை அடைந்திருக்க வேண்டும். ஆனால் இதுவரை அப்படி விடுதலை செய்யப்படவில்லை, ஆகவே ரெமிஷன் கொடுக் கப்படவில்லை என்பது நன்றாகத் தெரியும். அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது தாரதம்மியம் இல்லை என்று கூறுகிறார்கள். இருக் கிறது என்று ஒப்புக்கொள்ளமுடியுமா ? அவர்களுக்கு சலுகை கொடுக் கப்பட்டிருக்கிறதா இல்லையா என்பதற்கு ரிக்கார்ட்ஸ் இருக்கின்றன. அவர் கள் அரசாங்கச் சிறைகளில்தான் இருக்கிறார்கள். சிறை ரிக்கார்ட்ஸ் இருக் கின்றன. கொலைக்குற்றம், சமூகத்துரோகம் செய்தவர்களுக்கும் கொடுக் கப்பட்டிருக்கிறது, ஆனால் இவர்களுக்கு, அரசியல் கைதிகளுக்கு ரெமிஷன் கொடுக்கப்பட்டிருக்கிறதா என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். இது பற்றி பலமுறை கேட்டாய் விட்டது. கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் அமைச்சர் அவர்களைப் பலமுறை சந்தித்து பணிவோடு கேட்டுப் பார்த்தாகி விட்டது. கம்யூனிஸ்ட் கட்சி மட்டும் கோருகிறதே என்றால் நியாயமாக இருந்தால் அதை ஒப்புக்கொள்ளக்கூடாதா ? எல்லோரும் சேர்ந்து கேட்டு நிர்ப்பந்தித்துச் சொன்னால்தான் ஏற்றுக்கொள்ளப்படுமா, அப்படியென்றால் அது சரியான பதிலாகாது. ஆக, அரசியல் கைதிகளை விடுதலை செய்ய வேண்டுமென்று மறுமுறை கேட்டுக்கொண்டு, இதைப் பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

28th March 1961]

**Sri T. L. SASIVARNA THEVAR :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த அப்ராப்ரியேஷன் பில் மீது நான் ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன. எனக்கு முன் பேசிய பல அங்கத்தினர்கள் ப்ரைஸ் பாண்ட்ஸ் சம்பந்தமாகப் பேசினார்கள். மதுரையிலிருந்து இதைப் பற்றி எனக்குப் பல புகார்கள் வந்திருக்கின்றன. அதிலும் மோசமான சில புகார்கள் கூட சொல்லப்பட்டிருக்கின்றன என்று அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ஜில்லா போர்டிலுள்ள உபாத்தியாயர்களை மாற்றக்கூடிய காலம், இது. இருநூறு, 300 ரூபாய்க்கு பாண்ட் வாங்கிக் கொண்டால் அவர்களுக்கு வேண்டிய இடத்தில் மாற்றல் செய்யப்படுவதாக என்னிடம் புகார் சொல்லப்பட்டது. ஆயிரம் ரூபாய்க்கு ப்ரைஸ் பாண்ட் வாங்கியவர் ஒருவருக்கு ஒரு உத்தியோகம் போட்டுக் கொடுக்கப்பட்டது என்ற தகவலும் எனக்கு கிடைத்திருக்கிறது. மதுரை ஜில்லா போர்ட் சம்பந்தப்பட்டவரை சொல்கிறேன். சிறு குழந்தைகள் முதற்கொண்டு 5, 10-க்கு பாண்ட் வாங்க வேண்டுமென்று வற்புறுத்தப் படுகிறது. ப்ரைஸ் பாண்ட்ஸ் பொறுத்தமட்டில் மக்களிடமிருந்து அதை ஆர்வத்தோடு வசூல் செய்யவேண்டியது அவசியந்தான். இல்லையென்று நான் சொல்லவில்லை. இதற்கு நிறைய உதவி செய்ய நான் தயார். ஆனால் இதை வற்புறுத்திச் செய்வதால் மக்களிடையே பெரும் அதிருப்தி நிலவி வருகிறது என்று அமைச்சர் அவர்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். மதுரை நகர் சம்பந்தப்பட்ட வரையில், சர்க்கார் இலாக்காக்கள் பூராவும் ப்ரைஸ் பாண்ட் இலாகாவாக மாறியிருக்கிறதென்று தெரிவித்துக் கொள்கிறேன். குறிப்பிட்ட காலம் கொடுத்து மக்களிடம் இதுபற்றி நல்ல பிரசாரம் செய்திருந்தால் வற்புறுத்தல் இல்லாமலேயே ஜாஸ்தியாக ப்ரைஸ் பாண்ட்ஸ் வாங்குவார்கள் மக்கள். ஆகவே, தவறான முறையில் ப்ரைஸ் பாண்ட்ஸ் விற்கக் கூடிய தன்மையை நிறுத்த வேண்டும்.

கல்வி மான்யம் சம்பந்தப்பட்ட மட்டில் ஒரு குறை, சென்ற ஆண்டே கூறினேன். மதிய உணவுத் திட்டத்திற்கு, அரசாங்கம் கொடுக்கக் கூடிய உதவி 6 நயாபைசா. இந்த 6 பைசாவிற்கு மேல் 4 நயாபைசா அங்குள்ள உபாத்தியாயர்கள், அல்லது கமிட்டியார் வசூல் செய்து பத்து நயா பைசாவிற்கு சாப்பாடு போடவேண்டுமென்றிருக்கிறது. இந்த நன் கொடையை வருடம் பூராவும் வசூல் செய்யவேண்டியிருக்கிறது. ஒரு சில சந்தர்ப்பங்களில்தான் மக்கள் நன்கொடை அளிக்கிறார்கள். வருடம் பூராவும் நன்கொடை வசூல் செய்யவேண்டியிருப்பதால் நன்கொடை வசூல் செய்வதை நிறுத்திவிட்டு ஆறு நயாபைசாவிற்குத்தான் சிலவிடங்களில் சாப்பாடு போடப்படுகிறது. நான் ஒரு பள்ளிக்கு நேரில் சென்று பார்த்தேன். ஆறு பைசாவிற்கு உள்பட்டு, ஒரு பாத்திரத்தில் வைத்து சாப்பாடு போடப்பட்டது. அந்த உபாத்தியாயரிடம் நான் கேட்டேன் இந்தப் பாத்திரத்தைக் கொடுங்கள், அமைச்சர் அவர்களிடம் காண்பிக்கவேண்டுமென்று கேட்டேன். அவர் அதற்குப் பயந்துகொண்டு தரமாட்டேன் என்று கூறிவிட்டார்கள். இரண்டு வாய் அளவிற்கு உள்ள சாதம்தான் கொடுக்கப்படுகிறது. அந்த உபாத்தியாயர் நல்லவர், தவறு செய்யக்கூடியவர் அல்ல. ஆறு பைசாவிற்கு, தயிர் ஊற்றிப் போடுகிறார்கள். எலுமிச்சங்காய் ஊறுகாய் தான் எப்பொழுதும் போடப்படுகிறது. இரண்டு கவளம் கூட கிடைப்பதில்லை. ஆனால் இதை வைத்துக்கொண்டு பெரிய பிரசாரம் செய்யப்படுகிறது, மதிய உணவு போடப்படுகிறதென்று. கொஞ்சமாவது திருப்தியளிக்கவேண்டாமா. ஆகவே, இதை 12 நயாபைசா என்று ஆக்கினால்தான் கொஞ்சமாவது பிரயோஜனப்படும். பின், பள்ளிகள் எங்கு பார்த்தாலும் ஆரம்பித்து வைக்கப்படுகிறது. ஓராசிரியர் பள்ளிகள் இருக்கின்றன. இவைகள், சரிவர செயல்படுகிறதா என்றால் இல்லை. பலவிடங்களில் இருந்து கொண்டு சம்பளம் வாங்குகிறார்கள். விரிவு ஏற்பட ஏற்பட ஜாஸ்தியான ஊழல்கள் ஏற்படுகின்றன. ஆகவே ஊழல்கள் ஏற்படாத வகையில் நல்லமுறையில் கண்காணிப்பு செய்யவேண்டும். அப்படிச் செய்தால்தான் நமக்கு நல்ல பலன் கிடைக்கும். திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் அரசியல் கைதிகள் சம்பந்தப்பட்ட ஒரு பிரச்னையைக் கிளப்பினார்கள். அது நியாயமான கோரிக்கை. கம்யூனிஸ்ட் கட்சி சம்பந்தப்பட்ட அரசியல் கைதிகளைப்பற்றி நான் ஆதரித்துப் பேசுவதால் நான் அக்கட்சியை ஆதரித்துப் பேசுவதாகவோ அல்லது

அவர்கள் செய்த செய்கையை ஆதரிப்பதாகவோ அர்த்தமல்ல. அரசியல் ரீதியில் செய்யப்பட்டவை அவை. மன்னிக்கத் தகாத குற்றங்களை அவர்கள் செய்திருக்கிறார்கள், ஆகவே அவர்களை விடுதலை செய்யமுடியாது என்று சொன்னால் அது நல்லதல்ல. ஆயிரத்து தொளாயிரத்து நாற்பத்திரண்டு ஆகஸ்ட்டு போராட்டத்தில் காங்கிரஸ்காரர்களாயிருந்த நாம் அதை விட மகத்தான குற்றங்கள் செய்திருக்கிறோம். அரசியல் ரீதியாக ஏற்படக் கூடிய போராட்டங்கள் ஏற்படத்தான் செய்யும். காசிராஜன், ராஜகோ பாலன் போன்ற தேசத் தியாகிகள் செய்த மகத்தான குற்றங்களை மன்னித்து விடுதலை செய்யப்பட்டதை நான் இங்கு நினைவூட்ட விரும்பு கிறேன், இந்த சந்தர்ப்பத்தில். இரண்டாவது அரசியல் கைதிகள் சம்பந்த மாக எனக்குக் கிடைத்த தகவல்களின்படி இவர்கள் பத்து வருடங்களுக்கு மேலாக சிறையில் இருந்துவிட்டார்கள். "லைப் ஸெண்டன்ஸ்" என்று சொல்லும்போது, 20 வருடம் இருக்கவேண்டும், அதில் விக்டோரியா மகாராணி தர்பார் காலத்திற்காக ஆறு வருடங்கள் போக பாக்கி 14 வருடங்கள் இருக்கவேண்டும். இதில் சிறையில் இருக்கின்ற நேரத்தில்
10–30 a.m. கிடைக்கின்ற மார்க்குகளை வைத்து ஒன்றிரண்டு வருடங்கள் குறைந்து விடுகிறது. அதனால் எட்டு அல்லது ஒன்பது வருடங்கள்தான் இப்போது அதிகமாகவும் சிறையில் இருக்கவேண்டியிருக்கிறது. இந்த முறையில் பார்த்தால் இதில் பெரும்பாலோரும் பத்து வருடங்கள் சிறையில் இருந்து விட்டார்கள். இன்னும் அவர்களை விடுதலை செய்யாமல் இருப்பது கட்சிக் கண்ணோட்டத்தோடு பார்ப்பதாகத்தான் இருக்கும். மாற்றுக் கட்சிக்காரர் கள் என்ற காரணத்திற்காக இவர்களை விடுதலை செய்யாமல் இருப்பது நல்லதல்ல என்பது என்னுடைய அபிப்பிராயம். ஆகவே சர்க்கார் இவர் கள் பேரில் கருணை கூர்ந்து விடுதலை செய்யவேண்டும். பத்து, 15 பேர் களை விடுதலை செய்வதால் காங்கிரஸ் கட்சிக்கோ, காங்கிரஸ் அரசாங்கத் திற்கோ எந்தவிதமான கெடுதலும் வந்துவிடப் போவதில்லை. ஆகவே சர்க்கார் பெருந்தன்மையோடு 10 வருடங்கள் வரை சிறையில் இருந்த இந்த அரசியல் கைதிகளை விடுதலை செய்யவேண்டும் என்று தாழ்மை யுடன் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக் கம்.

* **Sri K. ANBAZHAGAN** : சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, சட்டமன்றத்தில் கொண்டுவரப்பட்டிருக்கும் இந்த நிதி ஒதுக்கீடு மசோதாவின் மீது சில கருத்துக்கள் கூற வாய்ப்பு பெற்றதற்காக என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். சட்டமன்றத்தில் பல்வேறு தடவைகளில் திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்களும் மற்றும் பல உறுப்பினர்களும் பல அவசியமான கருத்துக்களை எடுத்துச் சொல்லு கிற பொழுது அவற்றை முழு அளவுக்கு கவனித்துச் செயல்படுவதில்லை என்பதை மிக வருத்தத்தோடு அமைச்சர் அவர்களுக்கு நினைவூட்ட விரும்பு கிறேன். குறைகளைப்பற்றி நாங்கள் சொல்லுகின்ற நேரத்தில் எதிர்க் கட்சி களினுடைய முகமூடியைக் கிழித்தே தீருவேன் என்று நிதி அமைச்சர் அவர் கள் கூறுகிறார்கள். எத்தனை எத்தனையோ முகமூடிகளைக் கிழித்துப் பழகியவர் நமது நிதி அமைச்சர் அவர்கள் என்பதை நாங்கள் கேள்விப் பட்டிருக்கிறோம். அரசியல் கட்சிகளுக்குள் முகமூடிகள் எங்கேயிருந்தாலும் அப்புறப்படுத்தப்பட வேண்டும் என்கிற கருத்தை நான் ஏற்றுக்கொள் கிறேன். ஆனால் அவ்விதம் சொல்லும்போது கருத்தாலா அல்லது செய லாலா கிழித்தெறியப்படும் என்று பார்க்க வேண்டும். கிழித்தெறியவேண் டும் என்று சொல்லும்போது அதில் பலாத்கார வாடையோ அல்லது மனிதத்தன்மைக்கு மாறான மனப்பான்மையோ இருக்கக்கூடாது என்று நான் கேட்டுக்கொள்கிறேன். அரசியல் கட்சிகளில் எந்தக் கட்சி யாவது அந்தரங்கமாக, ரகசியமாக கருத்துக்களை மூடிவைத்திருந்தால் அவைகளை வெளியில் கொண்டு வருவதற்கு மாற்றுக்கட்சியினர் முயற்சித் தால் அது வரவேற்கவேண்டிய காரியம் தான். ஆனால் வெளிப்படையாக எல்லா இடங்களிலும் கட்சிக்கொள்கைகளையும் கருத்துக்களையும் தெரிவிக் கின்ற நேரத்தில், அப்படிப்பட்ட மாற்று கட்சியின் முகமூடியைக் கிழித்தெறி வேன் என்று பேசுவது விவேகமாகாது. ஆனால் அதற்கான ஒரு மனக் நிலையில் அமைச்சர் அவர்கள் இருக்கிறார்கள் என்று எடுத்துகொள்ளலாம்.

முகமூடியைக் கிழித்தெறிவேன் என்று சொல்லுகின்ற அமைச்சர் அவர்கள் முகமூடியை நீக்கிவிட்டு உள்ளேயிருப்பதைப் பார்க்க இவ்வளவு முயற்சி எடுத்துக்கொள்ளக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். தெரியாத ஒன்றை உற்றுப்பார்ப்பது அவ்வளவு நல்லதல்ல. ஒரு கட்சியினருடைய கொள்கையை மாற்றுக்கட்சியினருக்கு அறிந்துகொள்வதற்கு உரிமையுண்டு. அந்த வகையில் அமைச்சர் முயற்சிப்பதானால் தடை எதுவுமில்லை.

அடுத்து கனம் அமைச்சர் அவர்கள் சட்டமன்றத்தில் இரண்டு பொருள்படப் பேசுகிறார்கள். ஒவ்வொரு பிரச்னை குறித்தும் இருபொருள் தோன்ற பேசப்படுகிறது. இந்தி இந்த நாட்டில் கட்டாய பாடமாக்கப்படவில்லை விருப்பப்பாடந்தான் என்று சொல்லுகிறார்கள். அதே நேரத்தில் இந்தி பரவுவதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்று யாராவது கேட்டால் அதற்கும் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன என்று அமைச்சர் அவர்கள் பதில் தருகிறார்கள். தத்துவ முறையில் இந்தி கட்டாயம் இல்லை என்று சொல்லுகிறார்கள். ஆனால் நடைமுறையில் செயலில் இந்தி கட்டாயமாகவே உள்ளது. இதே சட்டமன்றத்தில் இந்தி கட்டாயமாக்கப்படவேண்டியதில்லை, அந்த அளவுக்கு வற்புறுத்துவது முறையல்ல என்று பல தடவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் இந்தி கட்டாயமாக்கக்கூடாது எனில் வேறு மொழிகள் பயிலுவதற்கும் வசதி செய்து கொடுக்கவேண்டும் என்று சொல்லப்பட்ட நேரத்தில் அதற்கு வழிவகை செய்யப்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறார்களே தவிர பிற மொழிகள் பயில் இதுவரை எந்தவிதமான ஏற்பாடும் செய்யப்படவில்லை என்பதை அமைச்சர் அவர்களுக்கு எடுத்துக்காட்ட விரும்புகிறேன். பொதுவாக மாணவர்க்கு இந்தியைக் கட்டாயப்படுத்துவது இந்த நாட்டுக்கு நல்லதல்ல என்பதை மறுபடியும் வலியுறுத்திக் கூறிக்கொள்கிறேன். அதே நேரத்தில் இந்தி கட்டாய பாடம் ஆகும் முறையில் நடைபெற்று வருவதையும் நிறுத்தவேண்டும் என்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். இந்த முறையில் இரண்டு வித விளக்கம் தரும்படியாக கொள்கைகளை வகுத்துக்கொள்கிறார்கள், அரசினர். ஒரு பழமொழி சொல்வார்கள், "பாம்புக்குத் தலையும் மீனுக்கு வாலும்" என்று. அதே போல் மத்திய சர்க்காருக்கு தலையைக்காட்டுவதும் நாட்டு மக்களுக்கு வாலைக்காட்டுவதும் வழக்கமாகியுள்ளது. இத்தகைய இரட்டைக்கொள்கையை அமைச்சர்கள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

தமிழ்நாடு என்று பெயரிட வேண்டும் என்று கேட்கும்போது, இந்த நாட்டு மக்களுக்காக தமிழ்நாடு என்று பெயரிட்டுவிட்டு, மத்திய சர்க்காருக்கென "மட்ராஸ்" என்று பெயர் வைத்துக்கொண்டிருக்கிறது இந்த அரசாங்கம். இது இவர்களிடத்திலுள்ள இரட்டை மனப்பான்மையைக் காட்டுகிறது.

தமிழில்தான் பாடங்கள் எல்லாம் உயர்தர வகுப்புகளிலும் கல்லூரிகளிலும் நடைபெற வேண்டும் என்பதை ஏற்றுக்கொண்டிருக்கிற அமைச்சர் அவர்கள், மக்களுக்கு ஐயம் ஏற்படுகிற அளவுக்கு விஞ்ஞானத்தைத் தமிழில் கற்றுக்கொள்வது கடினமாயிருக்கும் என்று திரும்பத் திரும்பச் சொல்லுகிறார்கள். அவர் சொல்லாவிட்டாலும், காங்கிரசு கட்சியில் இருக்கின்ற முக்கியமானவர்களில் பலர், விஞ்ஞான பாடங்களைப்பற்றி இவ்விதமே தெரிவிக்கிறார்கள். இதைக் கல்வி அமைச்சர் கண்டிக்காமல் கல்வித்துறையினருக்குத் தலையைக் காட்டுகிற அமைச்சர் அவர்கள் கட்சிக்காரர்களுக்கு வாலைக் காட்டுகிறார்கள்.

அரசியலில் மாணவர்கள் பங்கெடுத்துக் கொள்ளக்கூடாது என்று முடிவு செய்துவிட்டு, மாணவர்களை அரசியலுக்கு அவர்களே அழைத்துக்கொள்கிறார்கள். இவ்விதம் சொல்லுவது ஒன்று, செய்வது ஒன்று என்ற நிலையை அனுசரித்துக்கொண்டிருக்கிறார்கள் என்கின்ற குற்றச்சாட்டை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அதேபோல் எல்லாக் குழந்தைகளும் ஆதாரக் கல்வி பெற வேண்டும் என்று சொல்லுகிறவர்கள் தம் குழந்தைகளைக் கான்வென்டுப் பள்ளிக்குத்தான் படிக்க அனுப்புகிறார்கள். ஆதாரப் பயிற்சி பெறுவதினால் தமிழ்நாட்டுக் கல்வியின் தரமும் பயனும் உயர்ந்து வருகிறது என்கிறார்கள் அமைச்சர்கள். ஆனால் தங்கள் குழந்தைகளுக்கு

கான்வென்ட் கல்வி அளித்து கிராமத்திலுள்ள குழந்தைகளுக்கும், ஊரார் குழந்தைகளுக்கும்தான் ஆதாரக் கல்வி என்ற முறையில் உள்ள நடைமுறை மாறுபாட்டை எண்ணிப்பார்க்கவேண்டும். அரசாங்கத்தைப் பொறுத்த வரையில் சமதர்ம சமுதாயத்தை, சோஷலிஸ சமுதாயத்தை அமைக்க வேண்டும் என்ற கருத்தைத் தெரிவிக்கின்றார்கள். அதே நேரத்தில் தொழில் அமைச்சரும் நிதி அமைச்சரும் சோஷலிஸ சமுதாயத்தை அமைக்க, தொழில் வளம் பெருகவேண்டும், அதற்காக "பிரைவேட் என்டர்பிரைஸஸ்" ஏராளமாக இருக்கத்தான் வேண்டும் என்ற அளவில் ஏராளமானவர்களுக்கு புதிய தொழிலுக்கு லைஸென்ஸ் கொடுக்கிறோம் என்று தெரிவிக்கிறார்கள். இதில் சமதர்ம சமுதாயத்திற்கே எதிரான ஒரு போக்கு இருப்பதை அமைச்சர் அவர்கள் சிந்தித்துப்பார்க்க வேண்டும்.

கதர் திட்டத்தைப்பற்றிச் சொல்லப்படுகின்ற நேரத்தில் இது ஏழை மக்களைப் பாதுகாக்கிறது என்று சொல்லப்படுகிறது. "கதர் வளர்ந்த கதை" என்று விரிவான ஒரு புத்தகம் வெளியிட்டுக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தப் புத்தகத்திற்கான தொகையைக் கூட கதர் திட்டத்திற்கு ஒதுக்கியிருந்தாலும் சிறிதளவு பயன் பட்டிருக்கும். "சென்னை ராஜ்யத்தில் கதர் வளர்ந்த கதை" என்று தான் பெயரிலேயே குறிப்பிட்டிருக்கிறார்களே தவிர "தமிழ்நாட்டில் கதர் வளர்ந்த கதை" என்றுகூடக் குறிப்பிடவில்லை. இதில் சொல்லப்பட்டிருக்கும் கதரின் கதை கதையாகத்தான் போய்விட்டதோ என்று நான் சந்தேகப்படுகிறேன். (கனம் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் : இது எந்தத் தேதியில் போடப்பட்ட புத்தகம் என்று பாருங்கள்) தேதி குறிப்பிடவில்லை என்று எண்ணுகிறேன், உண்மையிலேயே தமிழ் நாட்டில் பற்று இருக்குமானால் முன்னமேயே "தமிழ்நாட்டில் கதர் வளர்ந்த கதை" என்று கொண்டு வந்திருக்க முடியும். அல்லது சென்னை அரசு என்றாவது வெளியிட்டிருக்க முடியும்.

வறுமையில் வாடுகின்றவர்கள், வேலையில்லாமல் இருக்கின்றவர்கள் அதிகம் பேர்கள் இருக்கின்றார்கள் ஆதலின் கதர் நெசவில் ஏராளமான பேர் ஈடுபட்டிருக்கிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அகில இந்திய ரீதியில், 38 கோடியில் 24 கோடி பேர்களும் தமிழ்நாட்டைப் பொறுத்த வரை $3\frac{1}{4}$ கோடி மக்களில் 2 கோடி 10 லட்சம் மக்களும் வறுமைப் பிடியில் உள்ளார்கள். இவர்களுக்கு மாதம் 15 ரூபாய், 10 ரூபாய், $7\frac{1}{2}$ ரூபாய் என்ற அளவில்தான் வருமானம் வந்துகொண்டிருக்கிறது என்று இதில் கூறப்பட்டுள்ளது. மேலும் இந்தக் கதர் திட்டத்தின் மூலம் 15 லட்சம் பேர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில் ஈடுபட்டுள்ளவர் எண்ணிக்கையைவிட அவர்கள் வாழ்வில் முன்னேறுவது எவ்விதம் என்பதைத்தான் நாம் கவனிக்கவேண்டும்.

ஏழைகளுக்கு கஞ்சி காய்ச்சி ஊற்றிக்கொண்டிருப்பது ஓரளவுக்கு உதவியாய் இருக்கின்றது என்பது உண்மைதான். ஆனால் அவர்களுக்கு வாழ்வதற்கு வேறு வழி வேண்டாமா என்பதையும் நாம் எண்ணிப்பார்க்க வேண்டும். உடனே ஆளும் கட்சி அமைச்சர் அவர்கள் கேட்பார்கள், கைத்தறி நெசவாளருக்குக் கொடுக்கும் உதவியை இவர்கள் வேண்டாம் என்று சொல்லுவார்களா என்று ? வேண்டுமென்றால் அது ஒரு குற்றமென்றாலும் நாங்கள் அதை ஏற்றுக்கொள்கிறோம். இதில் வெறும் கட்சிச் சார்பு இல்லாமல் கருத்தளவில் எண்ணினால் கைத்தறியோ, கதரோ இரண்டும் நீண்ட காலத்திற்கு மக்களை முன்னேற்ற முடியாது. இப்போது தேவைக்கு ஓரளவு பயன்படுகிறது என்றாலும் அதையே தொழிலாகக் கொண்டவர்களுக்கு இது நீண்டகாலத்திற்கு உதவி அளிப்பதாக இருக்காது. வேண்டுமென்றால் இப்போது கஞ்சி காய்ச்சி ஊற்றுவதில் இருக்கின்ற அன்பு உணர்ச்சியை, இரக்க உணர்ச்சியைப் பாராட்டுவதைப்போன்று, கதர் திட்டத்தில் ஏழைகட்கு பிழைப்பு கிடைப்பதற்காக நாம் பாராட்ட முடியும். ஆனால் நீண்ட காலத்திற்கு கதர் திட்டம் உதவாது என்பதைத் தெரிவித்து கொள்கிறேன். அதே நேரத்தில் ஏழை மக்கள் கதர்த் தொழிலையோ கைத்தறியையோ மட்டும் நம்பிக்கிடக்கவேண்டிய நிலைமையை உண்டாக்காதீர்கள் என்று கேட்டுக்கொள்கிறேன். கதர் கைத்தறித் தொழிலில்

28th March 1961] [Sri K. Anbazhagan]

ஈடுபட்டிருக்கின்ற மக்கள் பட்டினி கிடக்க நேராமல், வாழ்க்கையை வீணுக்கிக் கொள்ளாமல் தங்கள் வாழ்க்கையில் நிச்சயமான முன்னேற்றத்தைக் காணக்கூடிய மாற்றத்தைச் செய்தாக வேண்டும். அகில இந்தியாவில் தொழில் வளர்ச்சி ஏற்படவேண்டும் என்று சொல்லுகின்ற நேரத்தில் சர்க்கரை தொழிலில், சர்க்கரை உற்பத்தி அதிகரித்து இன்றைக்கு 10 ஆயிரம் டன் சர்க்கரை கைவசம் தேங்கி இருக்கிறது என்று கேள்விப்படு கிறேன். ஆனல் வெளி நாடுகளுக்குக் விற்க முடியுமா என்றுலும் முடியவில்லே. சர்க்கரை வெளி நாடுகளுக்குக் கிடைக்கும் விலேயை விட நமது நாட்டில் உள்ள விலேயானது ஏறத்தாழ டன் ஒன்றுக்கு 300 ரூபாய் அதிகமாக இருக்கிற காரணத்தினுல் 150 ரூபாயாவது குறைத்து அனுப்ப வேண்டியிருக்கிறது. அப்படி வெளி நாடுகளுக்கு அனுப்புவதில் நஷ்டம் ஏற்படுகிறது. அப்படி நஷ்டம் ஏற்பட்டாலும் தொடர்ந்து வெளி நாடு களுக்கு அனுப்புவதற்கு முடியுமா என்று தெரியவில்லே. அதிக உற்பத்தி ஏற்பட்டும் உள்நாட்டிலே சர்க்கரை குறைந்த விலேக்குக் கிடைக்கிறதா என்றுல் இல்லே. விலே அதிகம். ஏழை மக்கள் வாங்க முடியாத அள வுக்கு விலே. சர்க்கரை மட்டுமா இப்படி என்றுல், மற்ற பொருள்களுங்கூட அதே நிலேயில்தான். மேலும் ஆலேத்துணி உற்பத்தி மிகுதியினுலும் ஒரு தேக்கம் ஏற்படும் என்று கருதவேண்டியுள்ளது. அதே போல இன்னும் இரண்டொரு உற்பத்தித் தொழில்களும் இருக்கின்றன. ஆலேயில் உற்பத்தி ஆகக்கூடிய துணியை நம் நாட்டை விட்டு ஏற்றுமதி செய்தாலொழிய இந்த நாட்டிலே விற்கப்படாமல் ஒரு தேக்கம் ஏற்படும் என்ற ஐயப்பாடு இருக்கிறது. ஆலேகள் அதிகமாகி, உற்பத்தியாகக்கூடிய துணியும் அதிகமாகி, வெளி நாடுகளுக்கும் அனுப்ப முடியாத நிலே ஏற்பட்டு மிகுதியான தேக்கம் ஏற்படுமானுல், கைத்தறி நெசவாளிகள் உற்பத்தி செய்கிற துணிகளே விற்பனே செய்வதற்கு எங்கே இடம் கிடைக்கும், எவ்வளவு காலம் வரை கைத்தறியில் ஈடுபட்டுள்ளவர்கள் அதை நம்பி வாழ முடியும் என்று பார்த்தால், கைத்தறித் தொழிலில் ஈடுபட்டிருக்கக் கூடியவர்களே வேறு தொழிலில் திருப்பிவிட வேண்டிய அவசியம் விளங்கும்.

கனம் அமைச்சர் அவர்கள் தந்திருக்கக்கூடிய புள்ளி விவரங்களேப் பார்த் தால் நமது மாநிலத்தில் பொதுவான சராசரி வருமானம் 304, 305 ரூபாயாக இருந்தாலும், விவசாயத் துறையில் ஈடுபட்டிருக்கக் கூடியவர்களின் சராசரி வருமானம் 178 ரூபாயாக இருந்தாலும், கைத்தறித் தொழிலில் ஈடு பட்டிருக்கக்கூடியவர்களின் சராசரி வருமானம் 115 ரூபாயாகத்தான் இருக் கிறது. மொத்தத்திலே அவர்களது வருமானம்தான் மிகவும் குறைவாக இருக்கிறது. எனவே நெசவாளிகள்தான் தாழ்ந்த நிலேயில், ஏறத்தாழ தாழ்த்தப்பட்ட மக்களேப் போலவும், ஏறத்தாழ பின் தங்கிய மக்களேப் போலவும் பொருளாதாரத் துறையில் மிகவும் பின்தங்கியிருக்கிறுர்கள். அப்படிப்பட்ட இவர்களுடைய வாழ்க்கைத்தரத்தை இந்த தொழிலின் மூலமே முன்னேற்றுவதானுல் அவர்களின் வருமானம் 115 ரூபாயாக இருப்பது 125 ரூபாயாகவோ, அல்லது 135 ரூபாயாகவோ ஆகுமே தவிர மேலும் விலேவாசி ஏறும் காரணத்தினுல் இந்த ஏற்றமும் பயன்படாமல் போகுமே தவிர அவர்களுடைய வாழ்க்கை வளம்பெற முடியாது. வறு மையும் வாட்டமும் நீங்காது. நெசவுத் தொழில் செய்கிற மக்கள் முன் னேறவேண்டும் என்று சொன்னுல் அவர்கள் கைத்தறி நெசவை விட்டு வேறு தொழிலில் ஈடுபடுவதற்கான வழிவகை காணவேண்டும். அதற் கென நான் சொல்லுவேன், நமது மாநிலத்திலுள்ள ஒவ்வொரு மாவட்டத் திலும் 1,000 கைத்தறி நெசவாளர்களின் குழந்தைகளேப் பொறுக்கி எடுத்து அவர்களுக்கு இண்டஸ்ட்ரியல் துறையில், டெக்னிக்கல் துறையில் இலவசமாகப் பயிற்சி கொடுத்து, அந்தத் துறைகளில் ஈடுபடுவதற்கான வழிவகைகளேத் தேடவேண்டும். அந்த முறையில் மாவட்டத்திற்கு 1,000 குழந்தைகள் வீதம் பொறுக்கி எடுத்து அவர்களே வேறு தொழில் துறை களில் ஈடுபடுத்தினுல், அடுத்த தலேமுறையிலாவது சிறு மாற்றம் ஏற்பட்டு கைத்தறி நெசவுத் தொழிலுக்குப் போகாமல் இருப்பார்கள். அதற்கான வழிவகைகள் அரசாங்கம் காணவேண்டும்.

[Sri K. Anbazhagan] [28th March 1961

ஒரு பக்கத்தில் ஆலைகள் பெருகிக்கொண்டே போகின்றன. கனம் அமைச்சர் வெங்கடராமன் அவர்களிடம் கேட்டால் நாங்கள் அதிகம் அனுமதிக்க வில்லை என்று சொல்லுகிறார்கள். அகில இந்திய அடிப்படையில் ஆலைகள் அதிகமாகிக்கொண்டு வருகின்றன என்பது உண்மை. அந்த ஆலைகளின் உற்பத்தியோடு நெசவாளிகள் போட்டியிட முடியாது. இந்தப் போட்டியில் நெசவாளர் பட்டினி கிடக்கின்றனர். இந்த நிலையில் அரசாங்கம் எடுத்துச் சொல்லுகிற சோஷலிஸ சமுதாயம் எந்த அளவு நிறைவேறும் என்று அவர்கள் எண்ணிப்பார்க்க வேண்டும்.

அதே போன்று கதரைப் பொறுத்த வரையில் நான் தெரிவித்துக் கொள்வேன், இன்றைய தினம் மக்கள் இதில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்றால், வேறு வழி இல்லாத காரணத்தினால் ஈடுபட்டிருக்கிறார்கள். காந்தியடிகள் கதர் தேவை என்பதற்குப் பல காரணங்கள் கூறியிருக்கலாம். கைகள் உள்ளவர்கள் எல்லாம் நூற்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டிருக் ருக்கலாம், ஆனால் ரயில் கூடாது என்ற கருத்தைக் கூறவில்லை, மின்சாரம் கூடாது என்ற கருத்தைக் கூறவில்லை. அவைகளும் கிராம மக்களுக்குக் கிடைக்கட்டும், அவைகளாலும் தொழிலை அதிகப்படுத்தவேண்டும் என்று தான் தெரிவித்தார். அமைச்சர்களும் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களும் இதனை எண்ணிப்பார்த்து கதர் தான் எதிர்காலத்தில் நிரந்தரமாக இருக்க வேண்டும் என்று எண்ணிவிடாமல், இந்தத் துறையில் ஈடுபட்டுள்ள மக்களை வேறு துறைக்குத் திருப்ப முடியுமானால், அவர்களை வேறு துறைக்குத் திருப்பத் தக்க வழிவகை காணவேண்டும் என்று இந்த நேரத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

அதற்கு அடுத்தபடியாக சமுதாயத்தில் ஜாதி வேற்றுமையில்லாத சூழ்நிலை வேண்டுமென்று சொல்லுகிறார்கள். நான் நல்ல எண்ணத்தோடு சொல்லுகிறேன். வேற்றுமை இல்லாமலிருக்கத்தான் அமைச்சரவையில் உள்ள எட்டு பேர்களும் எட்டு வெவ்வேறு ஜாதிகளைச் சேர்ந்தவர் களாகப் பொறுக்கியெடுத்து, ஒவ்வொரு ஜாதியையும் திருப்திப்படுத்துகிற நோக்கத்தில் சாதி உணர்ச்சி கொண்டவர்களுக்கு குறை இருக்காது என்ற நினைப்பில் இந்த அமைச்சரவை அமைந்திருக்கிறது. ஆனால் இன்று அவர்களுக்குள்ளேயே " ஜாதி " மோதுகிறதோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது.

பிற்பட்ட சமுதாயத்தினர் மாநாட்டில் நமது அமைச்சரவர்கள் கலந்து கொண்ட நேரத்தில் அவர்களையும் அறியாமல் அவர்களுடைய உணர்ச்சி வெளியிட்டிருக்கிறது. அமைச்சர்கள் எட்டு பேர்களும் ஒருவருக்கொருவர் கலந்து பேசி சாதி வேற்றுமையைப் போக்க என்னென்ன செய்யலாம் என்று எண்ணிப் பார்க்கவேண்டும்.

கலப்புத் திருமணம் செய்து கொண்டவர்கள் சமுதாயத்தில் ஒதுக்கப் படுகிறார்கள் என்று இன்று காலை சட்டமன்றத்தில் கூறியபோது ' இல்லை கௌரவிக்கப்படுகிறார்கள் ' என்று நம் நிதி அமைச்சர் தெரிவிக்கிறார்கள்—இதனால் அவர்களுக்கு கௌரவம் மிச்சம் ஆகிறது. ஆனால் நாட்டிலே பலர் கலப்புத் திருமணம் செய்து கொண்டதற்காக சமுதாயத்திலிருந்து ஒதுக்கப்படுகிறார்கள்—சொந்தக்காரன் சேர்க்க மாட்டேன் என்று சொல்லுகிறான். தாழ்த்தப்பட்ட ஜாதியைச் சேர்ந்த ஒருவன் உயர்ந்த ஜாதிப் பெண்ணை திருமணம் செய்து கொண்டால்கூட, தாழ்த்தப்பட்ட மக்களே இன்னொரு ஜாதியாரோடு தகராறு வருகிறது என்பதால், சமூகத்தில் சேர்க்க மாட்டோம் என்று சொல்லுகிறார்கள். இந்த மனப்பான்மை இருக்கிற காரணத்தினால் மிகப் பெரிய இடத்தில் இருப்பவர்களுக்கு கலப்புத் திருமணம் லாபமானதாகவும்—ஏழைகளுக்கு நஷ்டமானதாகவும் உள்ளது. இந்தச் சூழ்நிலையில் கலப்பு மணம் செய்கிறவர்களுக்கு ஏதாவது தொழில் வசதி செய்து தரவேண்டும், அரசாங்கத் துறையைத் தவிர, அரசாங்கத்தில் வேலை தருவதைத் தவிர வேறு இடங்களிலே தொழில் தருவதிலேகூட, இன்று தாழ்த்தப்பட்ட மக்களும், பிற்பட்ட மக்களுக்கும் பிரதிநிதித்துவம் கொடுப்பது போன்றே இவர்களுக்கும் கொடுக்கவேண்டுமென்று கருதுகிறேன்.

அடுத்து பிற்பட்ட மக்கள் இருக்கும் வரை, தாழ்த்தப்பட்ட மக்கள் இருக்கும் வரை, இந்த நிலை மாறிப் பொருளாதார வசதிகளை அனை வருக்குமே பங்கிடும் வரை ஏற்றத் தாழ்வினால் பாதிக்கப்படுகிற மக்கள் வாழ்வதற்கு பாதுகாப்பு அளித்துத்தான் ஆகவேண்டும். நேற்று முன் னாள் நடந்த பிற்பட்ட சமுதாயத்தினர் மாநாட்டில் பேசிய அமைச்சர் மீனவர்களுக்கு என்று மீன் வளத்துறை அலுவல்களில் 12 சத விகிதம் ஒதுக்கியிருந்தும்கூட அதில் 3 சத விகிதம் பேருக்குத்தான் கொடுக்கப்பட்டது என்று அந்த தொடர்பு உள்ளவர் என்ற முறையில் தெரிவித்தார். இன்னொரு அமைச்சர், இல்லை மீனவர்களுக்கு அதிகம் கொடுத்திருக்கிறது என்று தெரிவித்தார். மறுபடியும் முதலில் பேசிய அமைச்சர் இல்லை, இல்லை 3 சத விகிதம் தான் கொடுக்கப்பட்டுள்ளது என்று சொல்லியிருக்கிறார். இப்படி இருக்கிறது நிலைமை. அமைச்சர்களிடையில் விவாதம். மேலும் மீனவர் சமுதாயத்தை உயர்த்த ஒருவருக்கு அமைச்சர் வேலை கொடுத்தால் மட்டும் போதாது, மற்றொருவருக்கு கலெக்டர் வேலை கொடுத்துவிட்டால் மட்டும் போதாது, பெரும் பகுதியினர் அந்தத் துறையில் மட்டுமல்லாமல் வேறு தொழில்களில் ஈடுபடுவதற்கான வசதிகளைத் தேடித் தரவேண்டும்.

அதைப் போலவே பிற்பட்ட சமுதாயத்தினர் என்று ஜாதியின் பேரால் உள்ளவர்கள் ராமநாதபுரம் மாவட்டத்திலும் சரி, தென் ஆற்காடு மாவட்டத் திலும் சரி, மற்ற மற்ற மாவட்டத்திலும் சரி ஏராளமாக அவர்கள் இருக்கிறார் கள். அவர்கட்கு புதிய வேலை வாய்ப்புகளைத் தேடித் தருவதில் அரசாங்கம் கவனம் செலுத்தவேண்டும். நடைபெற்ற மாநாட்டில், பிற்பட்ட மக்கள் பற்றி அமைச்சர் திரு. மாணிக்கவேலு அவர்கள் ஒரு நல்ல கருத்தைத் தெரி வித்திருக்கிறார்கள். நீதிக் கட்சி தோன்றிய நாள் முதலாகத்தான் ஓரளவு பிற்பட்ட மக்களுக்கு அரசாங்கத்தில் வேலை வாய்ப்புகள் கிடைத்தன என்றும், இருந்தும் குறிப்பிட்ட லட்சியத்தை இன்னும் அடைய முடிய வில்லை என்றும் கூறியிருக்கிறார்கள். நீதிக் கட்சியில் இருந்த அவர் களுக்கு அந்த நல்ல நினைப்பு வந்திருக்கிறது—மற்ற அமைச்சர்களுக்கு வராது. பிற்பட்டவர்களுக்கு எப்படி எப்படி வாய்ப்பளித்து முன்னேறச் செய்வது என்று இன்றும் எண்ணிப்பார்க்கவேண்டும்.

உண்மையிலேயே பிற்பட்ட சமூக மாணவர்களுக்கு உதவித் தொகை அளிப்பது படிப்பதற்கு எல்லோருக்கும் வாய்ப்பு அளிக்க உதவுவதாகும். பிற்பட்ட வகுப்பினர் முன்னேற வேறு வழி காணாததால், அடுத்த 15 வருஷ காலத்திற்கு முற்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர்களையே வேலைக்கு எடுத்துக்கொள்ளக்கூடாது என்றுகூட பிற்பட்ட சமுதாயத்தினர் மாநாட்டிலே ஒருவர் தெரிவித்திருக்கிறார். அமைச்சர் ஒருவர் அப்படியெல்லாம் செய்வதற்கு அவசியமில்லை என்று தெரிவித்திருக்கிறார். மற்றொரு அமைச்சர் பின்தங்கிய வகுப்பினர் முன்னேற வழியில்லையே என்று வருந்தி இருக்கிறார்கள். நான் விரும்புவது, மத்திய சர்க்காருக்கு பிற்பட்ட சமுதாயத்தினரின் நிலைமையைக் காண்பித்து அவர்களை முன்னேற்றுவ தற்கு மேலும் சில வழிசெய்ய நம் சென்னை அரசாங்கம் முழு முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதாகும்.

அடுத்து நான் குறிப்பிட விரும்புவது, இன்றைய தினம் இருக்கிற ஆட்சியாளர்கள், அமைச்சர்கள் முதலானவர்கள் சுற்றுப் பயணம் நடத்து வதில் ஒன்றும் குறைவே கிடையாது. முதலமைச்சர் அவர்கள் கடந்த $1\frac{1}{2}$ ஆண்டு காலத்தில் சுற்றுப்பயணம் செய்த நாட்கள் 288, தலைநகரில் இருந்த நாட்கள் 260. அடுத்தபடியாக மின்சார அமைச்சர் அவர்கள் சென்னை நகரத்தில் இருந்தது 242 நாட்கள். சுற்றுப்பயணம் செய்தது 306 நாட்கள். அமைச்சர் திரு. கக்கன் அவர்கள்—சென்னை நகரத்தில் இருந்தது 240 நாட்கள், வெளியில் சுற்றுப் பிரயாணம் செய்தது 308 நாட்கள். ஓரள வுக்குச் சுற்றுப் பிரயாணம் தேவைதான். நாட்டின் நிர்வாகப் பொறுப் பில் இருக்கிறவர்கள், பெரிய பணியை ஏற்றுக்கொண்டிருக்கிறவர்கள் சுற்றுப்பயணம் செல்லும்போதுதான் அந்தந்த இடத்தில் கவனிக்க வேண்டியவைகளை நேரில் கண்காணிக்கமுடியும் என்பதாலேயே இந்த அளவுக்கு சுற்றுப்பயணம் செய்கிறோம் என்று சொல்லலாம். ஆனால்

இது கட்சியைப் பலப்படுத்தும் முயற்சியாகவே இருக்கிறது என்பது எங்கள் கண்ணுக்குத் தெரிகிறது. அது எங்கள் கண்ணின் குற்றமாக இருக்கலாம். அமைச்சர்கள் வெளியில் போகும்போது தேசீய வளர்ச்சித் திட்டம், கம்யூனிட்டி டெவலப்மெண்ட் ப்ராஜெக்ட்ஸ் சமுதாய நலத் திட்ட அதிகாரி களைப் பார்க்கும் நேரத்தில் மற்ற கட்சியினரைப் பற்றி எடுத்துச் சொல்லுகிற கருத்துக்கள், அந்த அதிகாரிகள் தங்கள் பணியைச் செய்கிற நேரத் தில்கூட அவர்களுடைய கடமையைச் செய்ய முடியாத நிலையை உண்டாக்கு கிறது. நண்பர் திரு. கோவிந்தசாமி அவர்கள் அப்படிப்பட்ட சமுதாய நலத் திட்டப் பகுதியில் பிரதிநிதியாக இருக்கிற காரணத்தினுல், அமைச்சர்கள் அதிகாரிகளுக்கு இடும் கட்டளைகளால் ஏற்படும் கஷ்டத்தைப்பற்றிப் பல தடவைகள் எடுத்துச் சொல்லியிருக்கிருர். அதற்காகவே இந்தச் சுற்றுப் பிரயாணங்கள் செய்வதாக இருந்தால், அதை மாற்றிக்கொள்ள வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, இன்றைய தினம் பொதுவாக கவனிக்க வேண்டிய ஒரு முக்கியமான விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். மாற்றுக் கட்சி யினர் ஆட்சி செலுத்துகின்ற நகராட்சி மன்றங்களைப் பற்றிச் சில கருத்துக் களைக்கூற விரும்புகிறேன். அது சென்னை மாநகராட்சி மன்றமாக இருந் தாலும் சரி, கோவை நகராட்சி மன்றமாக இருந்தாலும் சரி, அல்லது மதுரை நகராட்சி மன்றமாக இருந்தாலும் சரி, எங்கேயெல்லாம் மாற்றுக் கட்சியினர் பொறுப்பேற்று நடத்தி வருகிருர்களோ, அங்கேயெல்லாம் அரசாங்கத்தார் அதிக அக்கறை காட்டி வருகிருர்கள். அவர்களை எப்படி ஒடுக்க வேண்டுமோ, அலட்சியப்படுத்த வேண்டுமோ அதிலே அக்கறை காட்டிக்கொண்டு வருவதை நாம் இன்றைக்குப் பார்க்கின்ருேம். அண்மை யிலே, சென்னை நகரத்திலே, மாநகராட்சி மன்றத்தார் சிறிய வீடுகள் கட்டும் திட்டத்தை ஓரளவு நிறைவேற்றி அதிலே ஏறத்தாழ 100 வீடுகளை பங்கிட்டுக்கொடுத்தார்கள். அது கொடுக்கப்பட்ட செய்தி அறிந்ததும், அரசாங்கத்தின் சார்பிலே, பங்கிட்ட முறையே தவறு, உடனே நிறுத்தி வையுங்கள் என்று கூறியிருக்கிருர்கள். இப்படித்தான் அரசாங்கம் கூறி யுள்ளதாகக் கேள்விப்படுகிறேன். நான் கேள்விப்பட்டது தவருக இருந் தால், திருத்த வேண்டியது அமைச்சர் அவர்களின் கடமை. நான் பேசு வது முழு ஆதாரத்தோடு அரசாங்கம் எழுதிய கடிதத்தை வைத்துக் கொண்டு அல்ல. ஆனல் அரசாங்கம் எப்படியோ நிறுத்தி வைத்திருக் கிறது. அமைச்சர் அவர்கள் மாநகராட்சி மன்றத்தின்மீது ஒரு குற்றச் சாட்டைக்கூற வேண்டுமென்ருல், முறையான நடவடிக்கையை மேற் கொண்டிருக்கலாம். அப்படி மேற்கொள்ளப்பட்டிருக்கிறதா என்ருல், இல்லை. ஒரு குற்றச் சாட்டை செய்வதற்கு முன்னுல் அங்குள்ள ஆளும் கட்சியினரை அழைத்தோ அல்லது கமிஷனரை அழைத்தோ விசாரித்து காரணம் கேட்டு, அதற்குப் பின்னுல் அவர்கள் மீது குற்றம் சாட்டியிருக்க வேண்டும். ஆனல் முழு உண்மையும் தெரியாமலேகூட மாநகராட்சி குற்றம் புரிவதாக ஒரு நினைப்பு மக்களிடத்திலே ஏற்பட வேண்டுமென்ப தற்காக இதை உடனே தடுத்து நிறுத்தி இருக்கிருர்கள். ஆளும் கட்சி திராவிட முன்னேற்றக் கழகமாக இருப்பதால் இவர்கள் மேல் எப்படி எப்படிக் குற்றம் சாட்டுவது என்ற ஒரே நோக்கத்தோடு சற்று அதிகமான கவனம் அவர்கள் மேல் காட்டப்பட்டு வருகின்றது. அந்த முறையிலே தான் இன்றைக்கு இந்தத் தடை உத்திரவு போடப்பட்டிருக்கிறது. அதிகாரம் குறுக்கிட்டுள்ளது. இந்த அனுபவத்தைத் தான் நாம் இன்றைக்குக் காண்கிருேம். இதேபோல் எதிர்கட்சியினர் ஆட்சி செலுத்தும் ஒவ்வொரு மாநகர ஆட்சியிலும் ஏதாவது குற்றங்களைக் காண முயன்று எப்படி அவைகளைக் கலைத்து விடுவது என்பதில்தான் இன்றைக்கு அரசாங்கம் கண்ணும் கருத்துமாய் இருந்து வருகின்றது. அதே போல் பொருளாதார வரவு செலவுத் திட்டத்திலும் அவர்களுக்கு எவ்வித முழு சுதந்திரமும் கிடையாது. அவர்களுக்கு ஏதாவது வேண்டுமென்ருல், உடனே அவர்கள் மாநில அமைச்சரைத்தான் கேட்க வேண்டும். அப்படி கேட்கப்பட்டு தொகை ஒதுக்கப்பட்டாலும், இன்றைய தினம் அவர்கள் தாமாகவே அத்தொகையை செலவழிப்பதற்கும் உரிமை கொடுப்பதில்லை. அப்படி சென்னை மாநகர ஆட்சி மன்றத்தார் கேட்டு, ஒதுக்கப்பட்ட 30 லட்சம்

28th March 1961] [Sri K. Anbazhagan]

ரூபாய் தொகையைக்கூட அரசாங்கத் தலைமைப் பொறியாளர் மேற்பார்வையில் வைத்து, அவ்வப்போது நடைபெறும் வேலைகளைப் பரிசீலனை செய்து, அதன்பேரில் பணம் கொடுக்கக்கூடிய ஒரு முறையைத்தான் இன்று காண்கிறோம். ஆகவே எல்லாப் பொறுப்பும் இன்றைக்கு அரசாங்கத்திடம் வைத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. அப்படியல்லாமல் பணத்தை ஒதுக்கிக் கொடுத்து அவர்கள் செய்யக்கூடிய வேலைகளை யெல்லாம் செய்து முடித்த பின்னர், அவ்வேலை நல்ல முறையிலே ஒழுங்காகச் செய்யப்பட்டிருக்கிறதா என்பதைப் பரிசீலனை செய்து, அதற்கு மேல் குற்றம் கண்டால், அவர்கள் மேல் பழியைச் சுமத்தலாம். இதுதான் உள்ளாட்சி மன்றத்திற்கு மதிப் பளிக்கும் நேர்மையான முறை. அதைவிட்டு ஒவ்வொரு நிலையிலும் அவர்கள் வேலையைச் சரிபார்த்துப் பணம் கொடுப்பது என்பது அவர்களை நம்பாமலேயே நடந்துகொள்ளும் மனப்பான்மையைத் தான் காட்டுகிறது. ஆனால் அமைச்சர்களாக இருப்பவர்கள் கூடுமான வரையிலே சென்னை மாநகராட்சி மன்றத்தைப் பற்றி அண்மையில் குற்றங்கூறிப் பழி சுமத்தவில்லை. மேலும் சென்னை மாநகராட்சி மன்றத்தின் நிதிக்குழுத் தலைவர் இந்த வீடுகள் வழங்கிய முறையைப்பற்றி அறிக்கை வெளியிட்டுள்ளார். அதிலே இந்தக் குற்றச்சாட்டுக்குப் பதிலளிக்கும் முறையிலே இந்த வீடுகள் எந்த முறையின்படி வழங்கப்பட்டிருக்கின்றன என்பதைத் தெளிவாக வெளியிட்டிருக்கிறார்கள். அவர்கள் அதிலே மாநகராட்சியில் உள்ள சர்வ கட்சிகளின் யோசனை கேட்டும், அவர்கள் ஒப்புக்கொண்டுதான் இவ்வாறு செய்யப்பட்டிருக்கிறது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் அரசாங்கம் இதையெல்லாம் எண்ணிப் பாராது, திடீரென்று நடவடிக்கை எடுத்துக்கொண்டது குறித்து விளக்கம் கொடுக்குமாறு கனம் அமைச்சர் அவர்களை நான் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து குடிதண்ணீர் திட்டத்தை எப்போது மேற்கொள்ளப் போகிறார்கள் என்பதைப் பற்றி அறிவிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். அதேபோல் பக்கிங்ஹாம் கால்வாய் பற்றியும், கூவம் ஆற்றைச் சுத்தப்படுத்துவது பற்றியும் கனம் அமைச்சர் அவர்கள் 120 லட்சம் ரூபாய் செலவில் திட்டமிட்டிருப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள். அத்திட்டத்தை உடனடியாக எடுத்துக்கொண்டு நிறைவேற்றினால், சென்னை நகருக்கும் பெருமை ஏற்படுவதோடு பலவாறாகச் சொல்லப்படும் சுகாதாரக் கேடுகளும் நீங்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மதுரையிலும், கோயம்புத்தூரிலும் உள்ள நகர மன்றங்களை மாநகராட்சி மன்றங்களாக மாற்றியமைக்க வேண்டுமென்ற ஒரு கருத்து இப்போது இருந்து வருகிறது. அதோடு திருச்சியுங்கூட இணைக்கப்படலாம். அதேபோல் அந்த மாநகரங்களிலே விரைவில் பல்கலைக்கழகங்களும் ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக பிற்பட்ட வகுப்பு மாணவரைப் பற்றி ஒரு கருத்தைத் தெரிவிப்பது அவசியமாகிறது. பிற்பட்ட மக்கள் முன்னேற அந்த வகுப்பைச் சார்ந்த மாணவர்களுக்கு உதவித்தொகை வேண்டுமென்று கேட்கப்படுகிறது. அப்படி உதவித்தொகை கேட்டு விண்ணப்பிப்பதில் வகுப்புப் பெயரைக் குறிப்பிட்டு எழுதுவதில் சில சிறு தவறுகள் இருந்தாலும், அவர்களுக்கு அந்தச் சலுகைகள் கிடைக்க முடியாத ஒரு சூழ்நிலை ஏற்பட்டிருக்கிறது. அப்படிக் குறிப்பிடப்படுவதை அவர்கள் சாதிப் பெயராக ஏற்றுக்கொள்வதில்லை. " வன்னியன் " என்பதற்குபதில் " வன்னியர் " என்று குறிப்பிட்டால் தவறு. அதேபோல் " துளுவ வேளாளன் " எனபதற்குப் பதில் " துளுவ வேளாளர் " என்று குறிப்பிட்டாலும் தவறு. அவர்களுக்கு உதவித் தொகை கிடைப்பதில்லை. அதேபோல், " கள்ளன் " என்று குறிப்பதற்குப் பதிலாக, " கள்ளர் " என்று குறிப்பிட்டாலும் உதவி கிடையாது. அதேபோல் " பள்ளன், பறையன் " என்பதன்றி " பள்ளர், பறையர் " என்று குறிப்பிட்டாலும் உதவித் தொகை மறுக்கப்படுகிறது. இந்தச் சிக்கலான நிலையைப் போக்குவதற்கும் அதை மாற்றுவதற்கும் கனம் அமைச்சர் அவர்கள் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[Sri K. Anbazhagan] [28th March 1961

கடைசியாக ஒரு வேண்டுகோள். அமைச்சர்கள் நிர்வாகம் மிகத் திறமையாக இருக்கிறது என்று அடிக்கடி சொல்லிக்கொண்டு வருகிறார்கள். நான் ஏற்கனவே பல ஊழல்கள் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன். அந்த ஊழல்கள் மீது கனம் அமைச்சர் அவர்கள் இதுவரையில் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருப்பார்கள் என்று எதிர்பார்த்தேன். ஆனால் ஒன்றும் எடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. தூத்துக்குடியில் மீன் இலாகாவில் நடைபெற்ற குற்றங்குறைப் பற்றி ஏற்கனவே குறிப்புகள் சொல்லியிருக்கிறேன். மேலும் இப்போது சட்டமன்ற அங்கத்தினர் பலர் அங்கு போக இருக்கிறார்கள் என்பதால் அதற்கு முன்னாலே அந்த ஊழல் பற்றி விசாரணை செய்து தக்க முடிவு செய்தால் அது வரவேற்கத் தக்கதாக இருக்கும் என்று நம்புகிறேன்.

அதேபோன்று பஞ்சாயத்து நிர்வாகத் துறையிலும் சில குறைகள் ஏற்பட்டால், அதுபற்றி மாவட்ட கலெக்டருக்கு அறிவிக்கும் முறையில் திரும்பத் திரும்ப மனுக்கள் போட்டாலும், அவை பற்றி கவனிப்பதாகவே தெரியவில்லை. அதற்கு ஓர் உதாரணம் சொல்ல விரும்புகிறேன். இதை நிதி அமைச்சர் அவர்கள் நன்கு கவனித்து ஆவன செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள, திருப்பெரும்பூதூரில் 1957-ம் ஆண்டில் அப்போதைய பஞ்சாயத்து தலைவரிடத்தில் வெளிமாநிலத்திலிருந்து வந்த ஜுகுமோட்டோ என்பவர் அங்கே இருக்கிற மக்கள் நலனுக்காக மாவட்ட ஆட்சி மன்றப் பள்ளியில் ஒரு கட்டிடம் கட்டுவதற்காக 3,500 ரூபாய்க்கு ஒரு செக் கொடுத்திருக்கிறார். அந்தச் செக்கு என்ன ஆனது என்று இதுவரை தெரியவில்லை. அங்கு பள்ளிக் கட்டிடம் கட்டுவதற்காக அதுவும் அந்நகர் ஊராட்சி மன்றத் தலைவர் மூலமாக 1957 ஜூலை 26-ம் தேதி அன்று இந்த 3,500 ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தத் தொகை அந்த மக்களுக்கு குறிப்பிட்ட காரியத்திற்குப் பயன் பட்டதா என்றால், பயன்படவில்லை. அந்தத் தொகை கிடைத்தது குறித்தே தகவல் இல்லை. அந்த வட்டத்திலே வாழ்கின்ற ஒரு தனிப்பட்டவர் திருப்பித் திருப்பி மாவட்ட கலெக்டருக்கு எழுதியதற்கு, கடைசியாக 1960 நவம்பர் மாதம் 1-ம் தேதியன்று, தங்கள் கடிதங்கள் கிடைத்தன. அவை பரிசீலனையில் இருக்கின்றன என்று மாவட்ட கலெக்டர் அலுவலகத்திலிருந்து பதில் வந்திருக்கிறது. ஆனால் மூன்று நான்கு ஆண்டுகள் ஆகியும் இதுவரை எதுவும் திட்டவட்டமான நடவடிக்கை எடுக்கவில்லை. இதைக் குறித்து ஆளும் கட்சியிலுள்ளவர்கள் எந்தக் காரணத்தினால் இப்படி ஏற்பட்டிருக்கிறது என்பதை அறிந்துகொண்டு, இம்மாதிரி நடப்பதைத் தடுத்து நிறுத்துவதற்கு முயற்சி செய்து, நிர்வாகத் துறையை அந்த வழியில் சீர்திருத்தி அமைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இந்தக் குற்றச் சாட்டைப் பற்றிய விவரங்கள் தேவைப் பட்டால், அமைச்சர் அவர்களுக்குத் தருவதற்குத் தயாராக உள்ளேன். இதை அவசியம் அமைச்சர் விசாரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த ஆண்டு இந்த மசோதாவின் பேரில் நடந்த விவாதம் கொஞ்சம் விரிவாகவே நடைபெற்றிருக்கிறது. ஸ்ரீ கல்யாண சுந்தரம் அவர்கள் விரிவாகப் பேசியதிலே நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. அவர்களுக்கு இந்த சட்டசபை நடந்துகொண்டிருந்தபோது, இங்கே இருக்க முடியாது போனதால், இன்றைக்கு அவசர அவசரமாக வந்து நிறைய பேசினார் என்றால் நாம் புரிந்துகொள்ள முடிகின்றது. ஆனால் மற்றவர் களும் இதிலே இன்றைக்கு கொஞ்சம் அதிகமாகவே பங்கெடுத்துக்கொண்டதைப் பார்க்கும்போது, கடைசி நேரத்திலாவது இந்த பட்ஜெட்டிலே இன்னும் கொஞ்சம் அக்கறை காட்டி விவாதம் நடந்ததே என்று நான் ஓரளவு அதை வரவேற்கிறேன்.

திரு. ராமசாமி முதலியார் அவர்கள் ஒரு கருத்தை வெளியிட்டார்கள். அதிலே முக்கியமாக ரெவின்யூ இலாகாவிலே போடுகின்ற விண்ணப்பங்கள் சரிவர கவனிக்கப்படுவதில்லை. பதில் போடுவதற்கு அதிக காலதாமத மாகின்றது என்ற கருத்தைத் தெரிவித்தார்கள். அந்தக் குறைகள்

28th March 1961] [Sri C. Subramaniam]

முற்றிலும் இல்லையென்று சொல்ல முடியாது. பல இடங்களில் அவ்வாறு குறைகள் தென்படுகின்றன என்பதை பல சமயங்களில் நான் கவனித்து வருகின்றேன். அதை நீக்குவதற்கும் சர்க்கார் முயற்சி எடுத்து வருகிறது. பரவலாக இருக்கக்கூடிய இலாகாவிலே ஒரு தாலுகா ஆபீஸ் முதற் கொண்டு, ஏன், கிராமங்கள் முதற்கொண்டு, தலைமைக் காரியாலயம் வரை ஆங்காங்கு சில குறைகள் தென்படுகின்றன என்பது ஆச்சரியப் படுவதற்கே இல்லை. அந்தக் குறைகளை எவ்வாறு நீக்கவேண்டுமென்று பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. சமீபத்தில் கலெக்டர்கள் மகாநாடுகூட இருக்கிறது. அப்பொழுதும், இவற்றை மறுமுறை பரிசீலனை செய்து, மேலும் என்ன நடவடிக்கைஎடுக்க வேண்டுமென்று சர்க்கார் ஆராயும் என்ற உறுதிமொழியைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, முக்கியமாக, நகரப் புறங்களிலே இருக்கும் நெருக்கடி பற்றி திரு. ராமசாமி முதலியாரும், திரு. கலியாணசுந்தரமும் விரிவாகச் சொன்னார்கள். முக்கியமாக வீட்டு வசதிகள் குறைவாக இருக்கின்றன. அதன் காரணத்தால், இருக்கக் கூடிய சேரிகளோடு பல புதிய சேரிகளும் உருவாகின்றன. அதற்கு இன்றைக்கு திட்ட மிட்டு நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று சொன்னார்கள். முக்கிய மாக நகர்ப் புறங்களிலே வேலை வாய்ப்புகள் அதிகமாக ஏற்படும்போது, 11a.m. மக்கள் அதிகமாக அங்கே வந்து குடியேறும் நிலை ஏற்படுவதால், ஆங்காங்கே அவர்கள் குடிசைகளைப் போட்டுக்கொண்டு இருக்கிறார்கள். அந்த நிலைமை மட்டுமல்ல. அரசியல் கட்சிகள் கூட இன்றைக்கு அவர்கள் செய்யும் காரியங்களுக்கு ஊக்கம் கொடுக்கும் முறையிலே செய்கிறார்கள். சென்னை நகரிலும், மற்ற நகரங்களிலும் இருக்கக் கூடிய அரசியல் கட்சித் தலைவர்கள், இங்கே அவர்கள் குறிப்பிட்டு கவனப்படுத்திய காரணத் தினால் இதைப் பற்றி விளக்கவேண்டியது அவசியம், குறிப்பாகச் சொல்ல வேண்டியது அவசியம் என்று சொல்லுகிறேன். அரசியல் கட்சித் தலை வர்கள் இதில் மக்களை வேறு விதமாக நடத்திச் செல்கிறார்கள். பல சமயங் களிலே, இச்சேரிகள் திடீர், திடீர் என்று தோன்றுகின்றன. அவைகளை அகற்ற நடவடிக்கை எடுக்கும்போது, இந்தக் கட்சிகள், அதிலும் முக்கிய மாக கம்யூனிஸ்ட் கட்சி, திராவிட முன்னேற்றக் கட்சி, இதிலே ஏதோ அவர்கள்தான் ஏழைகளுக்காகப் பரிந்து பேசுவது போல், அவர்களைக் கொண்டு ஊர்வலங்கள் நடத்துவதும், கிளர்ச்சிகள் நடத்துவதுமாக நடந்து கொள்ளும் காரணத்தால், பல இடங்களிலே, அதை அவர்கள் கொள்கையாகக் கொண்டிருக்கிறார்களா என்றுகூட சந்தேகிக்க வேண்டி யிருக்கிறது. பல இடங்களிலே எதிர்க் கட்சிக்காரர்கள் இதற்குத் தூண்டுத லாகவும், உடந்தையாகவும் இருக்கிறார்கள் என்பதைத் தெரிவிக்கிறேன். இதிலே நாம் ஒரு கருத்தைத் தெளிவாக்கிக்கொள்ள வேண்டியது அவசியம். மக்கள் வேலை தேடுகிறார்கள். எல்லோருக்கும் வேலை வாய்ப்புகள் எங்கே இருக்கிறதோ அங்கே வீட்டு வசதிகள் இருக்கிறதா என்பதில் தெளிவு ஏற்பட்டால், அதற்குப் பிறகு இந்தச் சேரிகளை அப்புறப்படுத்து வதில் சீர்படுத்துவதில் இருக்கும் பல சிக்கல்கள் நீங்கும். ஆங்காங்கே வேலை செய்யும் மக்களுக்கு, வேலை செய்யும் இடத்திற்குப் பக்கத்திலேயே வீட்டு வசதி, குடியிருப்பு வசதி செய்து கொடுக்க வேண்டுமென்றால், முக்கியமாகப் பெரிய பட்டணங்களிலே, முடியாத காரியம். சேரிகளைச் சீரமைப்பது என்று சொல்லும்போது, எல்லா மக்களுக்கும் அங்கேயே வீடுகள் அமைத்துக் கொடுக்க வேண்டுமென்று சொன்னால் அது முடியவே முடியாது ; கால் பங்கு மக்களுக்கு அல்லது மூன்றில் ஒரு பங்கு மக்களுக்குத்தான் அந்த இடத்தில் சௌகரியமாக வீடுகள் அமைத்துக் கொடுக்க முடியும். மற்ற மக்களுக்கு வேறு இடங்களில் வசதி செய்து கொடுத்து, அந்த இடங்களில் குடியேறவேண்டும் என்று சொல்கிறபோது அந்த மக்களை அங்கேயிருந்து வெளியேற்றக் கூடாது என்று தூண்டிவிடப்பட்டால், சேரிகளைச் சீரமைப்பது என்றைக்குமே முடியாத காரியம் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். சேரிகளையே பார்க்காத வர்கள், சேரிகளுக்கே போகாதவர்கள் சொல்லலாம். ஆனால், அங்கே எவ்வளவு ரோடுகள் போட முடியும், கக்கூஸ்கள் அமைக்க முடியும், லைட்டுகள் போட முடியும் என்று பார்த்தால், பெரும் பகுதியினருக்கும்

செய்துவிட முடியாது. ஒரு சிறு பகுதியினருக்குத்தான் அப்படிச் செய்ய முடியும். ஆகவே, அவ்வாறு பெரும் பகுதி மக்கள் வேறு இடங்களுக்குச் செல்ல வேண்டுமானால், நகரத்திற்குள்ளேயே பரவலாக இடம் கொடுக்க முடியுமா என்று பார்க்க வேண்டும். அதே நேரத்தில், எவ்வளவு செல விட முடியும் என்றும் பார்க்க வேண்டும். ஆகையினால்தான், நகருக்கு வெளிப் புறங்களிலே புதிய புதிய நகரங்களை அமைக்க முயற்சிகள் செய்ய வேண்டியிருக்கிறது. தொழிலாளிகள் வேலை செய்யும் இடங்களி லிருந்து 2 மைல், 3 மைல் என்றால் பரவாயில்லை. ஆனால், 10 மைலுக்கு மேல் அதிக தூரமாக இருக்குமானால், அப்பொழுது போக்கு வரத்து வசதிகளும் கொடுக்க வேண்டிய அவசியம் இருக்கிறது. அப்படிச் செய்ய முடியுமே தவிர, வேலை செய்யும் இடத்திலேயே வீட்டு வசதி, குடி யிருப்பு வசதி வேண்டுமென்றால், அது இயலாத காரியம் என்று உணர வேண்டும். அது யார் திட்டமிட்டாலும் முடியாது என்பதை வலி யுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். எதிர்க் கட்சிக்காரர்களும் அதை சரி என்று ஒப்புக்கொள்வார்கள். திட்டம் வகுப்பதில் கஷ்டம் இல்லை. அமுல், நடத்துவதில்தான் கஷ்டம். முக்கியமான கஷ்டம் சேரி வாழ் மக்களை அப்புறப்படுத்துவதில்தான். அதுவும் கூட அதைக் கட்சிப் பிரச்னையாக ஆக்கி விடுகிறார்கள். உறுதிமொழிகளைக் கொடுக்கிறார்கள்; அரசியல் கட்சிக் காரர்கள் தேர்தல் நெருங்க, நெருங்க இதுவரை சேரி மக்களைப் பற்றிக் கவனிக்காதவர்கள் கூட, இப்பொழுது உறுதிமொழிகளைக் கொடுக்கிறார் கள். ஆகையினால் நான் மிகவும் தாழ்மையுடன் கனம் அங்கத்தினர்களைக் கேட்டுக்கொள்கிறேன், இந்தச் சேரி சீரமைப்பு விஷயத்தில், குடியிருப்பு வசதி செய்து கொடுப்பதில், அதை ஒரு கட்சிப் பிரச்னையாக ஆக்காமல், அந்த மக்களுக்கு எது செய்தால் நல்லது என்ற அடிப்படையை ஏற்றுக் கொண்டு பணியாற்ற முன்வர வேண்டும். முக்கியமாகப் பெரிய நகரங்களில் தொழில் வளர்ச்சியின் காரணமாக, பெரிய அளவில் வேலை வாய்ப்புகள் ஏற்படுகின்றன.

கோயம்பத்தூரைப் பற்றிச் சொன்னார்கள். மூன்றாவது திட்ட காலத் தில் திருச்சி போன்ற இன்னும் பல நகரங்களிலே அம்மாதிரி நெருக்கடி ஏற்படும் என்பதில் சந்தேகமில்லை. ஆகவே இன்றைக்கு தொழில் வளர்ச்சி ஏற்படக் கூடிய எல்லா நகரங்களிலும், ஒரு நீண்ட கால திட்டம் அமைத் தாக வேண்டும் என்ற கருத்தை திரு. கலியாணசுந்தரம் வெளியிட்டார். அதை வரவேற்கிறேன். அந்த அடிப்படையில்தான் சர்க்காரும் யோசனை செய்கிறது.

போக்குவரத்து வசதிகள் ஏற்பாடு செய்ய வேண்டுமானால், இன்றைக்குப் போக்குவரத்து நெருக்கடி இருக்கும் அளவுக்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்றால், சாலைகளை விசாலப்படுத்த வேண்டும். ஆனால், இரண்டு மூன்று வருஷங்களுக்குப் பிறகு புதிய நெருக்கடிவேறு ஏற்படும். ஆகவே, இன்றைக்கு 15 ஆண்டுகளுக்குப் பிறகு 20 ஆண்டுகளுக்குப் பிறகு நகரங்களிலே நிலைமை எப்படி இருக்கும் என்று ஊகித்து அறிந்து சாலைகளை விரிவாக்க வேண்டும், அல்லது புதிய சாலைகளை அமைக்க வேண்டும். அவ்விதமாகப் போக்குவரத்து வசதிகள் செய்ய வேண்டும். அந்த முறை யில் திட்டமிட்டு வேலை செய்ய முயற்சி செய்யப்பட்டு வருகிறது.

மக்கள் எண்ணிக்கை உயரும்போது, குடி தண்ணீர் வசதி செய்வதில் கஷ்டம் ஏற்படுகிறது. இப்போது, சிறுவாணி திட்டம் கோயம்பத்தூருக்குப் போதுமானதாக இல்லை. இது சாக்கில் திரு. கலியாணசுந்தரம் ஒரு வார்த்தை சொன்னார்; நிதி அமைச்சர் அவர்கள் அங்கே நிற்காவிட்டாலும், அதில் அக்கறை எடுத்துக்கொண்டு செய்ய வேண்டும் என்று சொன்னார்கள். அப்படி தேர்தலில்தான் நிற்கும் தொகுதியில்தான் செய்வது என்றால், இவ்வளவு பெரிய திட்டங்கள் தமிழ்நாடு முழுதுக்கும் வந்து இருக்கவே முடியாது. எந்த இடத்தில் யார் நிற்பதற்காகப் பார்க்கிறார்கள் என்பது எனக்குத் தெரியும்; எந்த நகரத்தில் நிற்பது, சேலத்திலா, அங்கேயா, இங்கேயா என்று ஊசலாடிக்கொண்டிருப்பதை நான் அறிவேன்; இன்றைக்கு சேலத்தைப்பற்றி பிறகு திருச்சியைப்பற்றி என் வற்புறுத்து

28th March 1961] [Sri C. Subramaniam]

கிறார்கள் என்பதை அவர்களே ஒப்புக்கொள்வார்கள், அது என் என்று யோசிக்கவேண்டும் ? (ஸ்ரீ எம். கலியாணசுந்தரம்: கோயம்பத்தூரைப்பற்றிக் கூடத்தான் சொன்னேன்). ஆம், இன்றைக்குக் கோயம்பத்தூர் பற்றி புதிய நட்பு அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. அது ஏனென்றால், ஏதோ எதிர் பாராமல் கம்யூனிஸ்ட் சேர்மேன் அங்கு வந்திருப்பதால்தான் அப்படிச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறார்கள். நான் குறையாகச் சொல்லவில்லை. அதுமாதிரி சிறுவாணித் திட்டத்தை நோக்கும்போது கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் சேர்மனாக இருக்கிறார் என்பதால் அவர்கள் சொல்லுகிறார்கள் என்றுசொன்னால் கூட அது தவறாகவே இருக்காது என்றாலும், அதைச் சொல்ல விரும்பவில்லை.

சிறுவாணித் திட்டத்தை உடனடியாக ஏன் தொடங்கவில்லை என்பது பற்றி திரு. கலியாணசுந்தரம் ஓரளவுக்குத் அறிந்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். கம்யூனிஸ்ட் சேர்மேன் இருக்கக்கூடிய பல்வேறு சிக்கல் களையும் எடுத்துச் சொல்லி இருப்பார்கள். சிறுவாணி நதியானது கேர ளாவில் ஒரு பகுதியும், நம் ராஜ்யத்தில் ஒரு பகுதியும் இருக்கும் காரணத் தினால், இருக்கும் தண்ணீர் யாருக்குச் சொந்தம், கேரளாவுக்குப் பங்கு உண்டா என்ற பிரச்னை சில காலம் வரை இருந்து வந்தது. இப் பொழுது தண்ணீரைப் பொறுத்த வரை, கேரளாவுக்குப் பங்கு இல்லை என்று ஆகிவிட்டது. இப்பொழுது தண்ணீரை எப்படி உபயோகப்பது என்று முடிவு செய்ய வேண்டும். அது ஒன்று.

இரண்டாவதாக சிறுவாணி திட்டத்தை யொட்டி ஒரு அணைக்கட்டு கட்ட வேண்டுமென்று சொன்னால், கேரளப் பகுதியில் அதைக் கட்ட வேண்டியதாக இருக்கிறது. இந்தத் திட்டத்திற்கும் சரி, இன்னும் பல் வேறு நீர்த் தேக்கத் திட்டங்களுக்கும் சரி நாம் பேச்சு வார்த்தை நடத்தி ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளக்கூடிய நிலைமை இருக்கிறது. இந்தச் சமயத்தில் திடீரென்று ஒரு சொட்டுத் தண்ணீர்கூடக் கொடுக்க முடியாது என்று அவர்கள் பேசுகின்றதும், அந்த நிலைக்குக் காரணமாக இவர்கள் ஏதாவது குறுகிய மனப்பான்மையில் பேசுவதும் காரியத்தை வெற்றிகர மாக நிறைவேற்றுவதற்குப் பயன்படாது என்று தெரிவித்துக்கொள்ளு கிறேன். நமது முதல் அமைச்சர் அவர்கள் கூடச் சமீபத்தில் நம் இரு பகுதிக்கும் லாபகரமாக இருக்கக்கூடிய வகையில் இத்திட்டங்களை நிறை வேற்ற முடியும் என்று சொல்லியிருக்கிறார்கள். இன்றைக்கு நானும் உறுதியாகச் சொல்ல விரும்புவது கேரளத்திற்கு உபயோகமாகக் கூடிய ஒரு சொட்டுத் தண்ணீரைக் கூட எடுத்துக் கொள்ள விரும்பவில்லை என்பது தான். அதே சமயத்தில், தண்ணீர் வீணாகப் போகும் நிலைமை இருந் தால் அதை நல்ல விதமாக இங்கே உபயோகப்படுத்திக் கொள்ள வாய்ப்பு இருக்கிறது என்று சொன்னால், அப்படிப் பயன்படுத்திக்கொள்வதனால் நம்முடைய ராஜ்யத்திற்கு மட்டுமல்ல, நாட்டுக்கே நன்மை உண்டென்று சொன்னால், தனிப்பட்ட ராஜ்யங்கள் என்ற நிலைமையில் பார்க்காமல் ஐக்கிய இந்தியா, ஐக்கிய தேசம், என்ற அடிப் படையில் வீணாகப் போகக் கூடிய தண்ணீரை உபயோகப்படுத்திக் கொள்வ தற்கு யாரும் தயங்காத முறையில் ஒரு சூழ்நிலையை ஏற்படுத்த வேண்டும். இதிலே நம்முடைய குறுகிய மனப்பான்மை குறுக்கே நிற்கக் கூடாது. நாம் செய்கின்ற மொழிக் கிளர்ச்சி, வடக்கு, தெற்கு கிளர்ச்சி, கிழக்கு மேற்கு கிளர்ச்சி—(ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி : கிழக்கு மேற்கா ?) கேரளா சென்னை என்பதைத்தான் சொன்னேன். (ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி :— அப்படி யார் சொன்னார்கள் ?) கனம் கோவிந்தசாமி வடக்கு தெற்கு என்றால், இன்னொருவர் கேரளம் சென்னை என்கிறார்—எப்படியிருந்தாலும் இத்தகைய குறுகிய பிரிவினை மனப்பான்மை வளர்வது பெரிய திட்டங் களை ஒரு ராஜ்யமும், இன்னொரு ராஜ்யமும் சேர்ந்து நிறைவேற்ற வேண் டிய திட்டங்களை பெரும் அளவு பாதிக்கிறது என்பதை நான் இந்தச் சந்தர்ப் பத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். தமிழ் நாட்டில் அக்கறை உள்ளவர்கள் குறுகிய மனப்பான்மையுடன் இயங்குவார்களானால், அதுவும் தங்கள் அரசியல் கட்சியின் கொள்கை என்ற அடிப்படையில் அமைத்துக்

கொள்வார்களானல், அது எவ்வளவு தூரம் அவர்களுக்கே நன்மை அளிக்கும் என்பது எனக்குத் தெரியாது.—பொதுவாகத் தமிழ் நாட்டு மக்களுக்கு பெரும் அளவு பாதகம் விளைவிப்பதாகும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். உண்மையில் அவர்களுக்குத் தமிழ் நாட்டின் மீது பற்று இருக்குமானல், தமிழ் நாடு எல்லா வகையிலும் வளர்ச்சி அடைய வேண் டும் என்ற உண்மையான நோக்கம் இருக்குமானல், இதை ஒரு தேர்தல் மாதிரி வைத்துப் பரீட்சை செய்து பார்க்க வேண்டுமென்று சொன்னல் அந்தக் குறுகிய பிரிவினைக் கொள்கைகளை அவர்கள் விட்டுவிடத் தயாராய் இருக்கிறார்கள் என்று சொன்னல் தான் உண்மையிலேயே அவர் களுடைய நல்லெண்ணத்தை ஒப்புக்கொள்ள முடியும் என்கிற கருத்தை அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இல்லாவிட்டால் ஏதோ இந்தப் பிரிவினைக் கொள்கையை வைத்து நாமும் ஏமாந்து, மக்களையும் ஏமாற்றி, செல்வாக்கைப் பெற்றுவிடத் தடுமாறத்தான் வேண்டியிருக்கும் என்கிற கருத்துத்தான் பரவலாக ஏற்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆகவே சிறுவாணித் திட்டமாக இருந்தாலும் சரி, மற்ற திட்டங்களாக இருந்தாலும் சரி, இந்தச் சர்க்கார் எல்லாவற்றையும் நிறைவேற்றத்தான் முயற்சி செய்கிறது. இந்த முயற்சிக்குத் தடங்கலாகப் பிரிவினைக் கொள்கையை, குறுகிய சுயநலக் கொள்கையைப் பரப்ப வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன். அப்படியின்றி குறுகிய பிரிவினைக் கொள்கையை அடிப்படையாக வைத்துப் பிரசாரம் செய்வது ஒரு புறம், சிறுவாணித் திட்டம் வரவில்லையே, இன்னொரு திட்டம் வரவில்லையே என்று பேசுவது இன்னொரு புறம் என்று இருப்பதானது குழந்தையையும் கிள்ளி விட்டு தொட்டிலையும் ஆட்டிவிடுவது போலத்தான் ஆகும் என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அதற்கடுத்தபடியாகக் கல்வித் துறையைப்பற்றி ஸ்ரீ ராமசுவாமி முதலியார் குறிப்பிட்டார்கள். ஸ்ரீ கலியாணசுந்தரமும் குறிப்பிட்டார்கள். ஸ்ரீ ராம சுவாமி முதலியார் ஆங்கிலத்தின் தரம் குறைந்து வருகிறது என்று தெரிவித்தார்கள். இன்றைக்கு ஒன்று மட்டும் சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன். இந்த மொழிப் பிரச்னையைப் பற்றி நமக்குத் தெளிவான கருத்து இருக்க வேண்டியது அவசியம். இன்றைக்கு ஆங்கிலம் பயில வேண்டுமா, வேண்டாமா என்று சொன்னல், என்னுடைய உறுதியான கருத்துப் பயிலத்தான் வேண்டும் என்பது. ஒரு அன்னிய மொழியைப் பயில வேண்டுமென்று சொன்னல், அது போதன மொழியாக இருந்தால் தான் பயில முடியும் என்றால் வேறு மொழியையே யாரும் பயின்று இருக்க முடியாது. இன்றைக்கு ஆங்கிலம் படிக்க வேண்டுமென்பதற்கும், ஆங்கிலம் போதன மொழியாக இருக்க வேண்டுமென்பதற்கும் வித்தியா யாசம் உண்டு. இன்றைக்கு ஆங்கிலம் தெரிந்திருக்க வேண்டும் என்ப தற்காக ஆங்கிலம் போதன மொழியாக இருக்க வேண்டுமென்றால், நாளைக்கு ரஷ்ய மொழி தெரிந்திருக்க வேண்டுமென்றால், ரஷிய மொழி போதன மொழியாக வேண்டும். ஆகவே ஒரு மொழி பயில்வதற்கு அது போதன மொழியாகத்தான் இருக்க வேண்டுமென்ற அவசியம் இல்லை. இதில் நமக்கு ஒரு கருத்துத் தெளிவு இருந்தால் நாம் இப் போது எடுத்துக்கொள்கிற நடவடிக்கைகளை எல்லாம் ஓரளவுக்குப் புரிந்துகொள்ள முடியும். ஆங்கிலம் போதன மொழியாக இருக்க வேண் டாம் என்று சொல்லுகிறோமே தவிர, ஆங்கிலத்தைச் சொல்லிக் கொடுப்ப தற்கு எல்லாவிதமான முயற்சிகளும் எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது. ஆகவே, ஆங்கிலம் பயில்வதில் தரம் குறைகிறது என்கிற புகாருக்கு இடமில்லை.

கல்வித் துறையில் மதிய உணவுத் திட்டம், சீரமைப்புத் திட்டம் இவற் றில் பலாத்காரம் இருக்கிறது, ஆசிரியர் நிர்ப்பந்திக்கிறார்கள் என்பதாகப் பெரும் குறை சொல்லப்பட்டது. ஆசிரியர்கள் சார்பாக கனம் கல்யாண சுந்தரம் அவர்கள் சொன்னார்களோ என்னமோ தெரியாது. ஆனல், ஆசிரியர்கள் வெகு உற்சாகத்துடன் பணியாற்றுகிறார்கள் என்பதை நான் சென்ற இடங்களில் எல்லாம் பார்க்கிறேன். இன்றைக்கு அவர்கள் பலவந் தப்படுத்தப்படுகிறார்கள் என்பது கொஞ்சமாவது உண்மையாக இருந்தால்

28th March 1961] [Sri C. Subramaniam]

இந்த அளவுக்கு எங்கும் வேலை நடந்திருக்காது. அதில் சந்தேகமே இல்லை. இவ்வளவு நல்ல பலனை என்றைக்கும் பெற்றிருக்க முடியாது. ஆனால் இவ்வளவு நன்றாக நடைபெற்று வருவதைக் கண்டு ஒரு சிலருக்குச் சந்தேகம். அதுவும் தமிழ் மக்கள் பேரிலேயே சந்தேகம். தமிழ் மக்களாவது இவ்வளவு தாராளமாக தாங்களே மனமுவந்து உதவி செய்ய முன்வருவதாவது என்கிற அடிப்படைச் சந்தேகத்திலேயே "ஓ, அவர்கள் பலவந்தப்படுத்தப்படுகிறார்கள்" என்கிற குறைபாட்டை எழுப்பி இருக்கிறார்கள். தமிழ் மக்கள் பேரிலேயே சந்தேகம் இருந்தும் அதை அப்படியே வெளியில் சொல்லத் தைரியம் இல்லை. அதை வேறு விதமாகச் சொல்கிறார்கள். இதை இன்னும் கொஞ்சம் யோசித்துப் பார்த்தால், ப்ரைஸ் பாண்டு பற்றி நிர்ப்பந்தம் செய்யப்படுகிறது, ரெவின்யூ அதிகாரிகள் பலவந்தப்படுத்துகிறார்கள் என்று சொல்வதை முதலில் நம்பினேன். ரெவின்யூ இலாகா பலவந்தப்படுத்துகிறது, போலீஸ் இலாகா பலவந்தப்படுத்துகிறது என்று சொன்னாலும் ஓரளவு நம்பலாம். ஜனங்களுக்கு அவ் விலாகாவிடத்தில் பயம் இருக்கலாம். ஆனால் கல்வி இலாகா பலவந்தப்படுத்துகிறது என்றால் இவ்விலாகாவைக் கண்டு யாரும் பயப்பட மாட்டார்கள். இவர்களது பலவந்தத்திற்கும் யாரும் பணிய மாட்டார்கள். ஆகவே இதை எவ்வளவு தூரம் நம்பலாம் என்பது யோசிக்க வேண்டியதாக இருக்கிறது. அதுவும் எனக்கு நேரிடையாகத் தெரியும், இந்தப் பள்ளிச் சீரமைப்புத் திட்டத்திலே, மதிய உணவுத் திட்டத்திலே இத்தகைய குறைபாடு சொல்வது நிச்சயமாகத் தவறு என்று தெரிகிறது. ஆகவே இதை வைத்துத்தான் மற்ற இலாகாவைப் பற்றி, ப்ரைஸ் பாண்டைப் பற்றி இவர்கள் சொல்லுவதும் கூடத் தவறாக இருக்குமோ என்று இப்போது சந்தேகப்பட வேண்டியதாக இருக்கிறது. சில சமயங்களில் ப்ரைஸ் பாண்டு விஷயத்தில் தாங்கள் அதிகமாக வசூல் செய்துவிட்டால் அதனால் தங்களுக்கு அதிக மதிப்பு ஏற்படுமோ என்னமோ என்கிற எண்ணத்தில் சில அதிகாரிகள் நடந்து கொண்டிருக்கலாம். அதுவும் அதைப் பற்றி எனக்கு இரண்டே இரண்டு கடிதம்தான் வந்தது.

SRI M. KALYANASUNDARAM: நம் ராஜ்யத்திற்கு எவ்வளவு கோட்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: கோட்டா என்பதே கிடையாது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் நல்ல முறையில் நிறைவேறுவது எந்த அளவு சேமிப்பு ஏற்பட வேண்டுமென்பது பற்றி யோசித்து ஒரு முடிவு செய்திருக்கிறோமே, தவிர, கோட்டா என்று ஒன்றும் இல்லை. ஒவ்வொரு ராஜ்யத்திற்கும் இவ்வளவு என்று மத்திய சர்க்காரோ அல்லது நாமோ கோட்டா என்று ஒன்று எடுத்துக்கொள்ளவில்லை. எந்த அளவு செய்ய முடியுமோ, அந்த அளவு செய்ய வேண்டுமென்பதுதான் சர்க்காரின் நோக்கம். இவ்வளவு கோட்டா செய்துதான் தீர வேண்டும் என்று ஒரு நிர்ப்பந்தமும் கிடையாது. தவறான முறையில் ஏதாவது நடந்திருந்தால் அதை அரசாங்கம் கவனித்து அப்படி நடக்காதிருப்பதற்கு ஏற்பாடு செய்யப்படும். இன்று திட்டங்கள் நிறைவேற வேண்டும் என்று சொல்லும்போது, மக்களிடம் எந்த அளவு சேமிப்பு ஏற்படுத்த முடியுமோ அந்த அளவு திட்டங்கள் நிறைவேற்றப்படும், பரவலாகவும் எடுத்துக்கொள்ள முடியும். எந்த விதமான நஷ்டமும் இல்லாமல் இதைப் பெறுவதற்கு வாய்ப்பு இருப்பதால், இந்த ப்ரைஸ் பாண்ட் விஷயத்தில் மக்கள் ஈடுபட முடியும் என்ற அடிப்படையில் இந்தத் திட்டம் வகுக்கப்பட்டது. ஒரு சிலர் மனம் நொந்திருந்தாலும் நாளை இதில் ப்ரைஸ் வந்து அந்தத் தொகையைப் பெறும்போது இதில் மக்களுக்கு உண்மையான ஊக்கம் ஏற்படும் என்பதில் சந்தேகம் இல்லை. இடைக்காலத்தில் மனத்தாங்கல் இருந்தாலும், பரிசு கிடைக்கும்போது, அதிகப்படியான பரிசுகள் வர வாய்ப்பு இருக்கிறது என்று மக்களுக்குப் புரியும்போது இது பற்றியுள்ள தப்பர்த்தம் நீங்கிவிடும். வற்புறுத்தி வசூல் செய்ய வேண்டுமென்பதைச் சர்க்கார் என்றைக்குமே ஒப்புக்கொள்ளவில்லை. அப்படி எங்கேயாவது இருந்தால் அதைக் கண்டித்து இனி அப்படி நடக்காதபடி பார்த்துக்கொள்ளவும் சர்க்கார் தயாராயிருக்கிறது என்பதையும் தெரிவித்துக்கொள்ள விரும்பு

கிறேன். திரு. கலியாணசுந்தரம் அவர்கள் கல்வி இலாகாவின் நிர்வாக அமைப்பை மாற்றி அமைக்க வேண்டுமென்ற கருத்தைச் சொன்னார்கள். கல்வி நிர்வாக அமைப்பை மட்டுமல்ல, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் பல்வேறு துறைகளில் நாம் பணிகளை ஏற்றெடுத்து நடத்துவதன் பொறுப்பு நமக்கு ஏற்பட்டிருக்கிறது. பொறுப்புகளும், வேலை வாய்ப்பு களும் அதிகமாக ஏற்படுகிற காலத்தில் வேலைத் திட்டங்கள் அதிகமாக ஏற்படும்போது எந்தெந்த இலாகாக்களில் எந்த முறையில் இந்த நிர்வாக அமைப்பை மாற்றி அமைக்க வேண்டுமென்பதைப் பற்றி பரிசீலனை நடந்து கொண்டிருக்கிறது. ஆகவே, ஒரு இலாகா மட்டுமல்ல, எல்லா வற்றையும் பற்றி பரிசீலனை செய்து நமது திட்டங்கள் நல்ல முறை யில் நிறைவேற தாமதம் ஏற்படாமலும், குறைகள் ஏற்படாமலும் இருக்க அவைகளைத் தவிர்க்க என்ன மாறுதல் செய்ய வேண்டுமென்பதைப் பற்றி பரிசீலனை செய்து அதன்பேரில் வரக்கூடிய முடிவுகளை நிறைவேற்ற சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளும் என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். திரு. கலியாணசுந்தரம் அவர்கள் நீர்ப்பாசனத் திட்டங் களைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். இதைப் பற்றிய கருத்தை நான் இரண்டு தடவைகள் குறிப்பிட்டிருக்கிறேன். இன்றைய நிலையில் எந்தத் திட்டத்தை வேண்டுமானாலும் எந்தச் செலவில் வேண்டுமானாலும் எடுத்துக்கொள்வதா, நீர்ப்பாசனத் திட்டங்கள் என்ற காரணத்திற்காக என்பது பற்றி முடிவு செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம். விவசாயத் துறை ஒன்றுதான் இருக் கிறது என்று இருக்கும்போது அதற்கு எவ்வளவு செலவாகிறது, இதி லிருந்து என்ன வருமானம் வருகிறது, எவ்வளவு விளைச்சல் உயரும் என்று கவனிக்க வேண்டிய அவசியமேயில்லை, அதைச் செய்துதான் தீர வேண்டுமென்ற முறையில். இன்று விவசாயத் துறையில் மட்டுமல்ல, தொழில் துறையிலும் முன்னேற்றம் அடைய வேண்டுமென்று விரும்பு கிறோம். ஆகவே, ஒரு கோடி செலவு செய்து, .01 சத விகிதம்தான் நமக்கு அதில் வருமானம் வரும் அல்லது .1 சத விகிதம் அல்லது 1 சத விகிதம்தான் வரும் என்கிற நீர்ப்பாசனத் திட்டங்களை எடுத்துக்கொள்ள லாமா அல்லது 5 சத விகிதம், 10 சதவிகிதம் வருவாய் வருகிற தொழில் திட்டங்களை அந்தப் பகுதிகளில் ஆரம்பித்து அவைகளை எடுத்து நடத்துவதா என்று இந்தச் சபை முடிவு செய்ய வேண்டிய கட்டம் ஏற்படும் என்று தெரி வித்துக்கொள்ளுகிறேன். தேர்தலுக்காக ' உங்களுக்கு நீர்ப்பாசனத் திட்டங்கள் வரவில்லையே ஆகவே, காங்கிரஸுக்கு வோட்டுப் போடாதீர்கள்' என்று பிரசாரத்திற்காக இந்த சின்ன காரியங்களை பயன்படுத்திக்கொள்வ தானால் எனக்கு ஆட்சேபணை இல்லை. நாட்டின் நல் வளர்ச்சிக்கு எவ்வாறு திட்டங்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்பதை அவர்களே ஒப்புக்கொள்வர். தேர்தலைக் கொஞ்சம் ஒதுக்கி வைத்துவிட்டுப் பார்த்தால், அது நல்ல திட்டம், நல்ல காரியம் என்று முடிவு செய்ய அவர்களே முன்வருவார்கள். இந்த இந்த திட்டங்களை எடுத்துக்கொள்ளலாம், இந்த இந்தத் திட்டங்களை ஒதுக்கி வைக்கலாம் என்பது பற்றி சரியான முடிவுகளை அவர்களே சொல் வார்கள். அவர்களுக்கும், இந்தச் சபை அங்கத்தினர்களுக்கும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன், இன்று நீர்ப்பாசனத் திட்டங்கள் எவ்வளவு இருந் தாலும் சரி, இந்த அடிப்படையில் பரிசீலனை செய்து, பார்த்து இந்தத் திட்டங்களை எடுத்துக்கொள்ள வேண்டுமென்ற முடிவுக்கு வரும் காலத்தில் நிதி இல்லை என்ற காரணத்தினால் அவைகளை ஒத்திப் போட மாட்டோம் என்ற உறுதியை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அதற்கு முன் முடிவு எடுக்க வேண்டியது, கோடிக் கணக்கில் முதலீடு செய்ய வேண்டிய திட்டமா என்பது பற்றி தனிப்பட்ட ஒரு பகுதியை மட்டும் வைத்துக்கொண்டு பார்க்காது, அங்குள்ள நிலப் பிரபுக்களை மட்டும் வைத்துக்கொண்டு பார்க்காது, நாட்டின் பொதுப் பொருளாதார வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்டு, முடிவு எடுக்கவேண்டும். 200, 300 ஏக்கர் போகக் கூடியதாக இருக்கும். 800 ஏக்கர் பாசன வசதி ஏற்படக் கூடியதாக இருக்கும், 800 ஏக்கர் அளவு வரவேண்டுமென்று நினைப்பது மட்டு மல்ல, இது பற்றி பேசுகிறவர்கள் 10,000 ஏக்கர் பாசன வசதி ஏற்படும் என்ற முறையில் பேசிவிடுகிறார்கள். அதனால் அங்குள்ளவர்கள், அணை கட்டினால் நமக்கு நிறையத் தண்ணீர் வரும் என்று நினைக்கிறார்கள்.

28th March 1961] [Sri C. Subramaniam]

எந்த அளவு நீர்ப்பாசன வசதியை விரிவாக்குவது, எந்த அளவு இருக்கக் கூடிய நிலங்கள் நன்மையடையும், இப்பொழுது அந்தத் தண்ணீர் வேறு எங்கேயாவது பயன்படுகிறதா என்று பார்த்து முடிவு செய்தால், திட்டங்களுக்கு நிதி ஒதுக்க சர்க்காருக்கு வசதியிருக்கிறது, மத்திய அரசாங்கத்திலிருந்து பணம் கொடுத்தாலும் சரி, எப்படியானாலும் அந்தப் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்ளத் தயார் என்று உறுதி கூற விரும்புகிறேன். திரு. அன்பழகன் அவர்கள் விரிவாகப் பேசினார்கள். மறு படியும் முகமூடியை இங்கு கொண்டுவந்தார்கள். முகமூடியைப் பற்றிச் சொல்லும்போது, அரசியல் முகமூடி என்று சொல்லும்போது அதைக் கிழித்தெறிவேன் என்று சொல்லும்போது, அரசியலில் அவர்கள் போட்டுக்கொண்ட முகமூடியைப் பற்றிச் சொல்கிறேனே தவிர, அவர்கள் தலைவர் கூட அப்படிச் சொல்லவில்லை, அவர்கள் சொன்னது, அரசியல் கட்சி விவகாரங்களை, உள்ளே நடக்கிற விவகாரங்களை, மற்ற கட்சியினர் வந்து அதை எட்டிப் பார்க்கக் கூடாது என்ற கருத்தைத் தெரிவித்தார் கள். அவர்கள் உபமானமாக முகமூடி என்று சொன்னார்கள். அவர்கள் வேறு முகமூடி பற்றிச் சொல்வது, அதிலே அவருக்கு இன்பம், வேறுமுக மூடியைப் பற்றிச் சொன்னார்கள். அது வேறு விஷயம். அரசியல் முகமூடி யைக் கிழித்தெறிவேன் என்று சொன்னால், அது தவறு? திரு. அன்பழகன் முகத்தை உற்று நோக்கக் கூடாது என்று சொன்னால் உற்று நோக்கவில்லை மற்றவர்கள் முகத்தை உற்று நோக்கக் கூடாது என்று சொன்னால் அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. அது அவரவர்கள் அபிப்பிராயம். இன்னொரு வர் முகத்தை உற்று நோக்க வேண்டுமென்ற ஆசை எனக்கில்லை. ஆனால் அரசியல் முகத்தைப் பார்க்க வேண்டிய அவசியமிருக்கிறதா, இல்லையா என்று யோசித்துப் பார்க்க வேண்டும். அரசியல் முகம் என்று சொல்லும் போது அரசியல் கொள்கைகள், அரசியல் கொள்கைகளை நிர்வகிப்பதில், நிறைவேற்றுவதில் கட்சியில் இருக்கக் கூடியவர்களுக்குத் தகுதி இருக் கிறதா, போதுமான பயிற்சி இருக்கிறதா, எந்தவிதமான பழக்க வழக்க கள் இருக்கின்றன என்று பார்ப்பதற்கு, அரசியல் கட்சி என்று யார் ஏற் படுத்திக்கொண்டாலும், அதைப் பார்ப்பதற்கு மற்றவர்களுக்கு இன்று உரிமை இருக்கிறதென்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். இது அவரவர் தனிப்பட்ட விவகாரமல்ல. திராவிட முன்னேற்றக் கழகம் ஒரு அரசியல் கட்சியாக விளங்குகிறது என்று சொன்னால் அப்படி அது ஒரு அரசியல் கட்சியல்ல என்றால், வேறு சமாசாரம், விட்டுவிடத் தயார். ஆனால் அர சியல் கட்சி என்று சொல்வார்களேயானால், அது முகமூடி போட்டுக் கொண்டிருக்கிறதென்றால்,—கக்கன், காமராஜ் இருக்கக்கூடிய இடத்தில் நான் என் வந்து உட்காரக் கூடாது என்று இருவர்களை மட்டும் குறிப்பிட்டு கூறியிருக்கிறார்கள். மந்திரி சபையில் உட்கார வேண்டுமென்று சொல்லும் போது—அந்த முகத்தைப் பார்த்துத்தான் ஆகவேண்டும். அப்படி அர சியல் முகமூடி போட்டுக்கொண்டிருந்தால், அதைக் கிழித்துத்தான் ஆக வேண்டும், திரையிருந்தால் அதை எடுத்துத்தான் தீரவேண்டும். மறைத்து வைத்திருப்பதை நான் மட்டும் பார்ப்பதல்ல, மக்களுக்கும் அதைக் காண்பிக்க வேண்டும். இது அரசியல் முகமூடி, பெண்கள் முகமூடியைப் பற்றிப் பேசுவதை திராவிட முன்னேற்றக் கழகத்தினர்களுக்கு விட்டுவிடு கிறேன். அதில் நான் போய் போட்டியிட உத்தேசம் இல்லை. கிழித் தெறிவேன் என்று நான் சொன்னது, அரசியல் முகமூடியாக இருந்தால், அரசியல் திரையாக இருந்தால், அரசியல் விஷயங்களை மழுப்ப ஆரம்பிப்பார் களானால், அதை நான் பார்ப்பது மட்டுமல்ல, மற்றவர்களுக்கும் காட்டி வைப்பேன், என்னால் இயன்ற அளவுக்கு அதைச் செய்துதான் தீர்ப் பேன்.

SRI K. ANBAZHAGAN: நான் எதை வர்புறுத்திச் சொன்னேனோ அதை விட்டுவிட்டு மற்றவைகளுக்குப் பதில் சொல்லுகிறார் கள். திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு அரசியல் முகமூடி கிடையாது. எல்லாம் வெளிப்படையாக நடைபெறுகிறது. ஆகவே கிழித்தெரிய என்ன அவசியம் என்று கேட்டேன். அப்படி ஏதாவது இருந்தால் தெரிவிக்கட்டும்.

11-30 a.m. THE HON. SRI C. SUBRAMANIAM: இன்னும் நான் விளக்கம் சொல்ல வேண்டிய அவசியம் இருக்கிறது. நான் சொல்லு வதைத்தவருக நினைத்துக் கொள்ளக் கூடாது. நான் ஏதாவது தவருகச் சொல்லியிருந்தால் அதற்காக என்னை மன்னிப்பார்கள் என்று நம்பு கிறேன். (குறுக்கீடு) இன்றைக்கு ஒரு அரசியல் கட்சி என்று சொன்னுல், அதிலும் தேர்தலில் ஈடுபட வேண்டிய அரசியல் கட்சி என்று சொன்னுல், அதிலும் இப்போது இல்லாவிட்டாலும், இனிமேலாவது இங்கே வந்து உட் கார வேண்டும். மந்திரிகளாக இங்கே வந்து உட்கார வேண்டும் என்று நம்பிக்கை வைத்துக் கொண்டிருக்கும் அரசியல் கட்சி என்று சொன்னுல், அதற்கும் பொதுப் பணத்தை நிர்வகிக்கின்ற பொறுப்பு இருக்கிறது. ஆகவேதான் இதை அலசிப் பார்ப்பது அவசியம் என்று சொன்னேன். பொதுவாக பொது மக்களிடமிருந்து வசூல் செய்கின்ற நிதி எவ்வாறு பயன்படுத்தப்படுகின்றது என்பதை வைத்துக்கொண்டுதான் பின்னுல் இந் தக் கட்சி எந்த அளவுக்கு ஆட்சியில் வந்து பொது நிதியைப் பயன்படுத்தும் என்பதை பார்த்துதான் ஓரளவுக்கு நாம் முடிவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. ஒரு கட்சி என்று சொன்னுல், அதற்குள் இருக்கின்றவர் கள் எவ்விதம் அவர்களுக்குள் என்ன பண்புடன் நடந்து கொள்கிருர்கள் என்பதைப் பார்க்க வேண்டியிருக்கிறது. இன்றைக்குத் திராவிட முன்னேற் றக் கழகத்தைப் பொறுத்த மட்டில் அங்கு பல வன்முறைகள் காணப்படு கின்றன. இது திராவிட முன்னேற்றக் கழகத்திற்குள் வந்ததல்ல, முத லில் மற்றவர்களிடம் தான் வெளியில் ஏற்பட்டது. அதன் பின்னுல் உள் ளுக்குள்ளேயும் வன்முறை உபயோகிக்கப்பட்டது. அதன் காரணமாக திராவிட முன்னேற்றக் கழகத்திற்குள்ளேயே கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டபொழுது வெளியில் மற்றவர்களிடம் உபயோகித்த அதே அஸ்தி ரத்தை தங்களுக்குள்ளேயே செலுத்துவதற்கு ஆரம்பித்து விட்டார்கள். இவ்விதமான வன்முறை இருக்கக் கூடாது என்று சொல்லும்போது அவர் கள் கட்சிக்கு மட்டுமல்ல, மற்ற கட்சிகளிலும் இவ்விதம் ஏற்படக் கூடாது என்பது ஒருபுறம் இருந்தாலும், இவ்வாறு அரசியல் கட்சிகளுக்குள் இருக்கின்றனவா என்று பார்ப்பதற்கு எல்லா அரசியல் கட்சிகளுக்கும் உரிமை என்பது மட்டுமல்ல, இந்த நாட்டிலுள்ள ஒவ்வொரு குடிமகனுக் கும் உரிமை உண்டு. அவ்விதம் ஏதாவது நடக்கும்போது, அதை எங்கள் வீட்டுக்குள் நடக்கும் விவகாரம் அல்லது எங்களுக்குள் நடக்கின்ற விவ காரம் என்று எந்த அரசியல் கட்சியேனும் சொல்லுவதாக இருந்தால் அது உண்மையிலேயே அரசியல் கட்சியாக இருக்க முடியாது. அரசியல் கட்சி என்று வந்து விட்டால், இவற்றை எல்லாம் பார்த்துத் தான் தீர வேண்டும். அரசியல் கட்சி என்று வெளியே வந்துவிட்டால், அந்தக் கட்சிக் குள், அதன் விவகாரங்களில் ஏதாவது முகமூடி இருந்தால், அல்லது அதில் ஏதாவது திரை போடப்பட்டிருந்தால் அதைக் கிழித்தெறிய வேண்டிய கடமை எல்லோருக்கும் இருக்கிறது என்பதை இப்போதும் நான் வலியுறுத்தித் தெரிவித்துக்கொள்ளுகிறேன். வன்முறை உபயோகிக்கப்படுகிறது என்று சொல்லும்போது அது எங்கும் இருக்கக் கூடாது என்பதுதான் எனது கருத்து. ஆனுல் இவைகள் எங்களுக்குள் நடக்கின்ற காரியம், அதைப் பற்றி மற்றவர்கள் அறிந்துகொள்வதற்கு என்ன இருக்கின்றது என்று யாராவது கேட்பார்கள் என்ருல் அது உண்மையிலேயே அரசியல் கட்சி என்ருல் என்ன என்று தெரியாதவர்கள்தான் அவ்விதம் கூறிக் கொண்டு இருக்க முடியும். இவர்கள் அவ்விதம்தான் நினைக்கின்ருர்கள் என்று நினைக்கிறேன். என்னைக் கூடச் சொன்னுர்கள், திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள், முதலில் ராஜாஜி மந்திரி சபையில் இருந் தேன், அதன் பின்னுல் காமராஜ் மந்திரி சபையில் வந்துவிட்டேன் என்று. இதில் தனிப்பட்ட முறையில் யாரையும் நினைக்கக் கூடாது. இவர்கள் இவ் வாறு நினைக்கின்ற காரணத்திலுல்தான் இவ்விதம் கூறினுர்கள் என்று நினைக்கிறேன். ராஜாஜி வெளியே போகும்போது அந்தக் கட்சியில் அப் போது மந்திரி சபையில் இருந்தவர்கள் எல்லோரும் போய்விட வேண்டும் என்று அர்த்தமல்ல. அதே சமயத்தில் காமராஜ் மந்திரி சபையில் வரும் போது அவர்களுக்குப் பிடித்தமானவர்கள்தான் வர வேண்டும் என் கின்ற அடிப்படையில் மட்டும் சர்க்கார் இயங்கவில்லை. காங்கிரஸ் கட்சியில் இருக்கின்ற ஊழியன் என்கின்ற முறையில், காங்கிரஸ் கட்சியில் பணி

28th March 1961] [Sri C. Subramaniam]

புரிகின்ற ஒரு நபர் என்கின்ற முறையில்தான், காங்கிரஸ் கட்டளைக்குட் பட்டு, ராஜாஜி மந்திரி சபையாக இருந்தாலும் சரி, காமராஜ் மந்திரி சபை யாக இருந்தாலும் சரி, பணியாற்ற முடியும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதைத் தவிர எந்தவிதமான வித்தியாசமும் இருப்ப தற்கில்லை. அதற்கான முறையில் காங்கிரஸ் கட்சி இயங்கிக் கொண்டிருக்க வும் இல்லை. இன்றைக்கு அவர்கள் நினைப்பது ஒரே கருத்தைக் கொண்டு மட்டும் தான் கட்சியை நடத்த வேண்டும் என்று. அப்படிச் சொல்லப்படு கின்ற கருத்தை ஒருவர் ஏற்றுக் கொள்ளவில்லை என்றால், உடனடியாக அந்தக் கட்சியைவிட்டே வெளியே போய்விட வேண்டும் என்ற அடிப் படையைத் தான் திராவிட முன்னேற்றக் கழகம் கூறுகின்றது. அவர் களுடைய கட்சியில் அந்த அடிப்படை இருந்து வருவதை நான் அறிவேன். ஆனால் ஜனநாயகம் என்பது அப்படியல்ல. இந்தச் சபையிலும் சரி, வெளியே போனாலும் சரி, கருத்து வேற்றுமைகள் இருந்தாலும் பெரும் பாலோரிடையே என்ன அபிப்பிராயம் இருக்கின்றதோ அதை ஏற்றுக் கொள் வதுதான் ஜனநாயகம். கட்சியில் என்னதான் அபிப்பிராயங்கள் இருந் தாலும் நான் ஒருவர் சொல்வதைத்தான் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லுவது ஜனநாயகத்திற்கு உதவுவதாக இராது. நம்முடைய கருத்து மாறுபாடாக இருந்தாலும், பெரும்பாலான மக்கள் எதை ஏற்றுக் கொள்ளுகிறார்களோ அதை நிறைவேற்றி வைப்பதுதான், ஜனநாயக அடிப் படையை வளர்ப்பதாக இருக்குமே தவிர, தனி நபருடைய கருத்தை ஒப்புக் கொள்ளாவிட்டால், கட்சியை முறித்துக்கொண்டு வெளியே வந்து விட வேண்டும் என்று சொல்லுவது தவறான கருத்து என்பதை இப் போதும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். திராவிட முன்னேற்றக் கழ கத்தில் இந்தக் கருத்து இருந்து வருவதினால்தான் அவர்களிடையே இந்த விதமான குழப்பங்கள் எல்லாம் வருகின்றன என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. இதே அடிப்படையில் போய்க் கொண்டிருந்தால், நாட்டில் ஒரு நல்ல அரசியல் கட்சியாக வளர முடியாது. தனிப்பட்டவர் களுக்கு அடங்கி, ஒடுங்கிதான் அரசியல் கட்சிகள் நடக்க வேண்டும் என்ற அடிப்படையை வைத்துக் கொண்டிருந்தால், எப்படி திராவிட முன்னேற்றக் கழகம் திராவிடக் கழகத்திலிருந்து பிரிந்து வெளியே வந்ததோ அதே நிலை இதற்குள்ளும் ஏற்படத்தான் செய்யும். அதோடு ஜனநாயக அடிப் படையில் எந்த அரசியல் கட்சியியும் நாட்டில் வளர்ந்து கொண்டிருக்க முடியாது. ஜனநாயக அடிப்படையில்தான் நாம் வெளியில் மட்டுமல்ல, சட்ட சபையிலும் ஒரு முடிவைச் செய்கின்றோம், அதை நாம் ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். அப்போதுதான் ஜனநாயகம் நன்றாக நடை பெறுமே ஒழிய வேறு விதங்களினால் நடைபெறாது. ஆகையால்தான் திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்களுக்கு நான் பணிவாகத் தெரிவித்துக் கொள்ளுகிறேன், எந்தக் கட்சியாக இருந்தாலும் ஒளிவு மறைவுக்கு இடமிருக்கக் கூடாது. ஆனால் அவ்விதம் எந்தக் கட்சியில் இருந்தாலும் அதைப் பார்ப்பதற்கு உரிமையிருக்கிறது என்று சொல்லும் போது, அடுத்த வீட்டில் இருப்பதைப் பார்க்க என்ன உரிமை இருக்கிறது என்று கேட்கப்படுகிறது. அவ்விதம் அடுத்த வீட்டில் நடப்பதை யாரும் பார்க்க விரும்ப மாட்டார்கள். அவ்விதம் பார்க்க வேண்டிய அவசியம் எனக்கில்லை. அடுத்தவருடைய முகத்தையும் பார்க்க வேண்டிய தேவை யில்லை. ஆனால் அரசியல் கட்சி என்று வெளியில் வந்துவிட்டால், அதில் உள்ள விவகாரங்களைப் பார்ப்பதற்கும், அதைப் பற்றி பொது மக்களிடத் தில் சொல்லுவதற்கும் எல்லோருக்கும் உரிமை இருக்கிறது. அதோடு இம்மாதிரிப்பட்ட கட்சிகளில் ஏதாவது ஊழல்கள் நடந்தால் அதை வெளிப் படையாக எடுத்துக் கொள்வதற்கு எல்லோருக்கும் உரிமைஇருக்கிறது. அப்போதுதான் அரசியல் கட்சி என்று தன்னைச் சொல்லிக்கொள்ள முடியும்....

**Sri K. ANBAZHAGAN** : கனம் அமைச்சர் அவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்திலுள்ள உள் நடவடிக்கைகளைத் தெரிவிக்க வேண்டும் என்று சொன்னார்கள். நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அங்கு நடக்கக்கூடிய வரவு செலவு கணக்குகள், அங்கே நடைபெறுகின்ற உள் நடவடிக்கைகள் எல்லாம் எழுதப்பட்டு வைக்கப்பட்டிருக்கின்றன. அதை கனம் அமைச்சர் அவர்களின் அதிகாரம் பெற்று யாராவது, அல்லது

அவர்களே வந்து பார்க்க வேண்டும் என்றாலும் அந்த ஏடுகளை எல்லாம் பார்வையிடலாம். இதைத் தெரிவிக்கும் நேரத்தில் கனம் அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன், காங்கிரஸ் கட்சியினுடைய வரவு செலவுக் கணக்குகள், காங்கிரஸ் கட்சிக்குத் தரப்படுகின்ற நன்கொடை விவரங்கள், அவை எப்படி எப்படி செலவு செய்யப்படுகிறது என்கிற விவரங்கள் ஆகியவற்றை நாட்டுக்குத் தருவார்களா என்பதைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : எங்கள் கட்சியில் இவ்விதமான ஒளிவு மறைவு ஒன்றும் கிடையாது. இதைப் பற்றி நான் முன்பே குறிப்பிட்டிருக்கிறேன். வெளியில் என்ன பேசிக் கொண்டாலும் உள்ளில் என்ன நடக்கிறது என்பதையும் நாம் பார்த்துத்தான் தீர வேண்டும். திராவிட முன்னேற்றக் கழகம் சம்பந்தப்பட்டவரை, திருச்சியில் நடந்த சம்பவம், ஒருவருக்கொருவர் பூமாரி பொழிந்து கொண்டது இவைகளை எல்லாம் மக்கள் பார்த்துக்கொண்டுதான் இருக்கிறார்கள். இவர்கள் எல்லாம் எப்படி நடந்துகொள்கிறார்களோ, அதே அளவில்தான் மந்திரிகளாக வந்தாலும் நடந்து கொள்வார்கள். வெளியில் எதையோ சொல்லி விட்டு, உள்ளே மட்டும் நடப்பதை மறைத்து வைத்துக் கொண்டிருப்பதால் எந்தவித நன்மையும் ஏற்பட்டுவிடப் போவதில்லை. இதைப் பற்றிச் சொன்னவுடன்தான் உங்கள் தலைவருக்குக் கோபம் வந்துவிட்டது, அன்று அவர்கள் அதைப் பற்றி சொன்னதினால்தான் நானும் சொல்ல வேண்டியதாயிற்று. அதே போன்று இன்றும் இதைப் பற்றிக் கேட்டதின் காரணமாகத் தான் இப்போது இதைப் பற்றி வலியுறுத்திச் சொல்ல வேண்டியதாயிற்று.

இந்தி பாடத்தைப்பற்றி, கனம் அன்பழகன் அவர்கள் இப்போது கட்டாய பாடமாக இருக்கிறது, இதை மாற்றி அமைக்க வேண்டும் என்றும் சொன்னார்கள். இப்போது மாற்ற வேண்டிய எந்த அவசியமும் வந்துவிடவில்லை. இதைப் பற்றி நன்றாகப் பரிசீலனை செய்து பார்த்து மூன்று மொழிகளையும் பயில வேண்டும் என்று முடிவு எடுக்கப்பட்டது. இது காங்கிரஸ் கட்சியே எடுத்துவிட வில்லை. எல்லாக் கட்சிகளும் சேர்ந்து உட்கார்ந்து இருந்து இதைப்பற்றி நன்றாகப் பரிசீலனை செய்து பார்த்து அன்றைக்கு இருக்கக்கூடிய சூழ்நிலைக்கு ஏற்றவாறு முடிவு எடுக்கப்பட்டது. அன்றைக்கு செய்த இந்த முடிவை, திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்கள் உடனடியாக ஏற்றுக் கொள்ளவில்லை என்றாலும்கூட, பின்னால் அதை ஒப்புக்கொண்டதை நாடு அறியும். எல்லோரும் சேர்ந்துதான் இந்தத் திட்டம், அல்லது இந்தக் கொள்கை வகுக்கப்பட்டது. ஆகவே இதைப்பற்றி திரும்பத் திரும்ப குற்றம் சொல்லிக் கொண்டிருப்பதில் எந்த விதமான பிரயோசனமும் இல்லை. இந்தத் திட்டத்தின்படி மூன்று மொழிகளும் கற்றுக் கொள்ளலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சில பேர்களுக்கு இந்தியையே படிக்கக் கூடாது என்று மனசாட்சி சொல்லலாம். அப்படிப் பட்டவர்கள் ஒதுங்கி இருந்து கொள்ளலாம். விரும்புகிறவர்கள் படித்துக் கொள்ளலாம் என்ற அடிப்படையில் இந்தக் கொள்கை வகுக்கப்பட்டிருக்கிறது. இன்றைக்கு நாம் போட்டிருக்கும் திட்டத்தின் அடிப்படையிலேயே 100-க்கு 99 பேர்கள் இந்தியை படிக்க முன் வருகிறார்கள். அதற்கு நாம் என்ன செய்வது ? அப்படி முன்வருகின்றவர்களை நீங்கள் இந்தி படிக்கக் கூடாது என்று சொல்லி வெளியே அனுப்பிவிட முடியுமா ? விரும்பி படிக்கின்ற மக்களை நாம் ஒன்றும் செய்ய முடியாது. ஆகவே இந்தி பாடம் கட்டாயமாக இல்லை. இஷ்ட பாடமாக வைக்கப்பட்டிருக்கிறது. நூற்றுக்கு 99 பேர்கள் இந்தியை படிக்க முன்வருகிறார்கள் என்றால் அதற்காக நாம் அவர்களைத் தடுக்க முடியாது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். தமிழ் போதனமொழியாக இருப்பதைப்பற்றி சொன்னார்கள். இதைப்பற்றி நான் முன்னாலேயே சொல்லிவிட்டேன். இப்போதும் அதைத் திரும்ப சொல்ல வேண்டிய அவசியம் இல்லை என்று நம்புகிறேன்.

இன்னும் பல அறிய கருத்துக்களை கனம் அன்பழகன் அவர்கள் சொன்னார்கள். அவர்கள் சொன்ன கருத்துக்களில் ஒன்று என்னுடைய கருத்துத்தான் என்பதை அவர்கள் அறிந்திருந்தார்களோ இல்லையோ

28th March 1961] [Sri C. Subramaniam]

எனக்கு தெரியாது. இந்தக் கருத்து நிதி அமைச்சர் அவர்களுடைய கருத்து என்று தெரிந்திருந்தால் அவர்கள் சொல்லியிருக்க மாட்டார்கள் என்று நம்புகிறேன். 'நிதி அமைச்சர் அவர்கள் ஆற்றிய உரை' என்கின்ற புத்தகத்தில் 43-வது பக்கத்தை எடுத்துப் பார்த்தால் கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்ன கருத்தை நான் முன்கூட்டியே சொல்லியிருப்பது நன்கு தெரியவரும். இப்போது அவர்கள் சொன்னதைத்தான் நான் அதில் தெரிவித்து இருக்கிறேன். கைத்தறி, கைத்தறியாக இருக்க முடியாது, எல்லாமே மாறிக் கொண்டுவரும் காலத்திலே என்று சொல்லியிருக்கிறேன். அவர்கள் இன்னொரு கருத்தைச் சொன்னார்கள். அதாவது கைத்தறி நெசவாளர்களின் குழந்தைகளை வேறு தொழில்களில் ஈடுபடச் செய்ய வேண்டும் என்று சொன்னார்களே, அதே கருத்தையும் நான் எனது பட்ஜெட் பிரசங்கத்தில் வெளியிட்டிருக்கிறேன். எனது கருத்து என்று தெரிந்திருந்தால் அந்த மாதிரி சொல்லியிருக்க மாட்டார்களென்று நினைக்கிறேன்—அதற்கு மாறாக எதிர்த்திருந்தாலும் எதிர்த்திருப்பார்கள். எனது கருத்து என்று தெரியாமல் அவர்கள் அந்தக் கருத்தை தெரிவித்திருக்கிறார்கள். அந்த இரண்டும் ஒன்றாகப் பொருந்தி விட்ட காரணத்தினால் அந்தக் கருத்தை முழுக்க முழுக்க ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். அதை நடைமுறைக்குக் கொண்டுவருவதில் அவர்கள் ஒத்துழைக்க வேண்டும். நாங்கள் அதை நடைமுறைக்குக் கொண்டுவரும் போது கைத்தறி நெசவாளர்களை அழிக்க முன் வந்து விட்டார்கள் என்று அவர்கள் கட்சி பிரசாரம் செய்தாலும் அவர்களாவது அந்த மாதிரி பிரசாரம் செய்யாமல் இருப்பார்களோ என்னவோ தெரியாது. அவர்கள் கட்சிக்கு உப-தலைவராக இருப்பதால், இதை அவர்களுடைய கட்சி தன் கொள்கையாக ஏற்றுக்கொள்ளும் என்று கருதுகிறேன்.

கதர் திட்டத்தைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அவர்களுக்கு என்னவோ கதர் என்றாலே கசப்பாக இருக்கிறது. கதர் போட்டதால் தான் நாங்கள் ஓட்டு வாங்கி விட்டோம் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். குறைவாக வரும்படி வருகிறதே என்று சொன்னார்கள். ஆம் குறைவாகத்தான் வருகிறது. யார் நூற்கிறார்கள், எந்த அடிப்படையில் நூற்கிறார்கள் என்று அவர்கள் தெரிந்து கொண்டிருந்தால் 15 ரூபாய்தான் வருமானம் வருகிறது என்று குறை கூறியிருக்க மாட்டார்கள். வேறு விதத்தில் வேண்டுமானால் குறை கூறலாம். இன்றைக்கு இதையே எல்லோரும் முழு நேர வேலையாகச் செய்வதில்லை. குடியானவனாக இருப்பவன் வேலைகளைச் செய்த பிறகு ஓய்வு நேரத்தில் நூற்கிறான். மற்ற தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களும் வேலை நேரம் போக ஓய்வு நேரத்தில் நூற்கிறார்கள். அவர்களுக்கு வரக் கூடிய வருமானத்திற்கு மேலாக இந்த வருமானம் வந்து உதவுகிறது என்ற அடிப்படையில் தான் கதர் திட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்த முறையில்தான் இப்போது நடந்து வருகிறது. ஒரு சிலர் ரொம்ப கிழ வயதினராக இருக்கிறார்கள். வேறு வேலை செய்ய முடியாதவர்கள்கூட நூல் நூற்று குடும்பச் செலவுக்குத் தங்களாலான தொகையைக் கொடுக்கிறார்கள். குடும்பம் முழுவதும் நூற்று, வருஷம் முழுவதும் நூற்று அதிலிருந்து வரக் கூடிய வருமானத்தைக் கொண்டு குடும்பம் நடத்துகிறார்கள் என்பது அல்ல—இது ஒரு உப தொழிலாக நடக்கிறது. அந்த அடிப்படையில்தான் இதை யோசித்துப் பார்க்க வேண்டியிருக்கிறது. சிறிய அளவில் ஊதியம் பெறத்தான் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதே தவிர இதைக் கொண்டு வாழ்க்கையை நடத்த வேண்டும் என்றல்ல. இவர்கள் வாழ்க்கைத் தரம் உயர வேண்டும். அதற்காகத் தான் முதலாவது, இரண்டாவது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டங்கள் போட்டு நிறைவேற்றி இருக்கிறோம்—நிறைவேற்றவும் போகிறோம். மந்திரத்தினால் ஒரே நாளில் யாராவது செய்து காட்ட முடியும் என்று சொல்ல முடியாது. இது அவ்வாறு அல்ல. படிப்படியாக நிறைவேற்றுவதன் மூலமாகத்தான் இன்றைக்கு புதிய வேலை வாய்ப்புகள் ஏற்படுவதன் மூலமாகத்தான், புதிய தொழில்கள் ஏற்படுவதன் மூலமாகத்தான் மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்த முடிகிறது. பின்னால் வரப்போகிற காலத்தில் பெரிய தொழில் வாய்ப்புக்கள் ஏற்படும் என்றாலும்கூட இன்றைக்கு, இடைக் காலத்தில், இப்போது இருக்கும் நிலைமையில் கைத்தறி அவசியமாக

இருக்கிறது. அதே மாதிரி வருமானத்தை ஓரளவு பெருக்கிக் கொள்ள கதர்த் திட்டமும் அவசியமாக இருக்கிறது. ஆகையால் தான் கைத்தறியை ஆதரிக்கிறவர்கள் கதர்த் திட்டத்தை எதிர்க்க முடியாது என்று நான் அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கிறேன். கதர்த் திட்டம் மூலமாக லட்சக் கணக்கான மக்களுக்கு வேலை வாய்ப்பு கிடைத்திருக்கிறது என்பதை நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

கடைசியாக, ஸ்தல ஸ்தாபனங்கள் இயங்குவதைப் பற்றியும் எதிர்க் கட்சிக்காரர்கள் அங்கு பதவியில் இருப்பார்களானால் அவர்களுக்கும் உதவி அளிக்க வேண்டும் என்ற கருத்தை வெளியிட்டார்கள்—அது தான் இந்த சர்க்காருடைய கொள்கை. அதன் காரணமாக எதிர்க் கட்சிக்காரர்கள் இருக்கிறார்கள் என்ற காரணத்தினால் எந்தக் குறை இருந்தாலும் ஒப்புக் கொள்ளவேண்டும் என்று தெரிவித்தால், அதை இந்தச் சர்க்கார் என்றைக் கும் ஒத்துக் கொள்ள முடியாது. ஆகையால்தான் ஏதாவது தவறுகள் நடைபெறுமானால் அதை எடுத்துக் காட்ட வேண்டியது சர்க்கார் பொறுப் பாக இருக்கிறது. சிலர் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் சில நட வடிக்கைகள் எடுப்பது அவசியமாக இருக்கிறது. இன்றைக்கு முக்கியமாக ஸ்தல ஸ்தாபனங்கள் ஆங்காங்கு இருக்கக் கூடிய நகரங்களில் நல்ல முறையில் பணியாற்றுவதன் மூலமாகத்தான் வளருகிற பகுதிகளில் வசதி கள் அமைய முடியும் என்பதை உணர வேண்டும். கட்சி அடிப்படையில் அல்லாது எல்லோருடைய நன்மைக்காகவும் நல்ல திட்டங்கள் விரைவாக நடைபெற நாம் முயற்சி செய்ய வேண்டுமென்று இங்கே தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்றைக்கு பஞ்சாயத்துக்களும், பஞ்சாயத்து யூனியன்களும் வந்து கொண்டிருக்கின்றன. இடைக் காலத்தில் சில குறைகள் இருக்கலாம். ஃபாரம்கள் கிடைக்கவில்லை என்று கனம் அங்கத்தினர் கல்யாணசுந்தரம் சொன்னார்கள். இது சில இடங்களில் உண்மையாக இருக்கலாம். இதைச் சீக்கிரத்தில் தவிர்ப்பதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வரு கின்றன என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஒரு வருஷத்திற்குள் —ஏன், அக்டோபருக்குள்—எல்லாப் பகுதிகளிலும் பஞ்சாயத்து யூனி யன்கள் வர இருக்கின்றன. இவைகள் நன்றாக இயங்குவதன் மூலமாக கிராம மக்களுக்குப் புதிய வசதிகள் வருவது மாத்திரமல்ல, உணவு உற்பத்தி அதிகரிக்க முடியும். சிறு சிறு தொழில்கள் ஆங்காங்கு ஏற்பட முடியும் என்ற காரணத்தினால், இந்த அமைப்பு நல்ல முறையில் நடை பெறுவதற்கு எல்லாக் கட்சிகளும் கட்சி வேறுபாடு இல்லாமல் ஒத்துழைக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு இப்போது இவ்வளவு விரிவான விவாதத் திற்குப் பிறகு இந்த மசோதாவை சபை ஏகமனதாக ஏற்றுக்கொள்ள வேண்டும் இந்த நிலையை நல்ல முறையில் அடுத்த ஆண்டு பயன்படுத்து வதற்கு நல்ல யோசனைகளை யார் சொன்னாலும் ஏற்று நடத்த சர்க்கார் தயாராக இருக்கிறது என்று தெரிவித்துக் கொண்டு எனது உரையை முடித்துக் கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : அரசியல் கைதிகள்பற்றி . . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆம். அரசியல் கைதிகள் பற்றி கனம் அங்கத்தினர் கல்யாணசுந்திரம் அவர்கள் சில கருத் துக்களை வெளியிட்டார்கள். முன்பே உள்துறை அமைச்சர் அவர்கள் இதைப்பற்றி விரிவாகக் கூறியிருக்கிறார்கள். ரெமிஷன்ஸ் வேறு வித மாகக் கொடுக்கப்படுகிறது என்று சொன்னார்கள். ரெமிஷன்ஸிலே இரண்டு வித ரெமிஷன்ஸ் இருக்கின்றன—ஒன்று ஆர்டனரி ரெமிஷன்ஸ், மற்றொன்று ஸ்பெஷல் ரெமிஷன்ஸ். ஆர்டினரி ரெமிஷன் அவர்களுக் கும் கொடுக்கப்படுகிறது என்று தெரிகிறது. ஸ்பெஷல் ரெமிஷன் என்பது அவர்களுடைய நன்னடத்தையைப் பொறுத்து இருக்கிறது. அரசியல் கைதிகள் என்று சொல்லக்கூடிய இவர்கள் எடுத்ததற்கெல்லாம் தொந் திரவு கொடுப்பது, எடுத்ததற்கெல்லாம் பட்டினி, எடுத்ததற்கெல்லாம் சிறையிலுள்ளவர்களைத் தூண்டிவிடுவது என்ற முறையில் இருக்கும்போது

28th March 1961] [Sri C. Subramaniam]

நன்னடத்தைக்கு இந்த முறையில் ரெமிஷன் கிடைக்கும் என்று நான் நம்பவில்லை. அந்த முறையில் அவர்களுக்கு ஸ்பெஷல் ரெமிஷன் கிடைக்காமல் இருக்கிறது. ஸ்பெஷல் ரெமிஷன்ஸ் கிடைத்தால் 10 ஆண்டுகளில் சிறையிலிருந்து வெளி வர முடியும். இல்லாவிட்டால் 14, 14½ ஆண்டுகள் கழித்துத்தான் வர முடியும். வெளியில் எப்படி வேண்டுமானாலும் நடந்து கொள்ளலாம். ஆனால் சிறையில் இருக்கும்போது சிறை விதிகளுக்கு உட்பட்டு நடக்க வேண்டும் என்று எல்லோரும் ஒப்புக்கொள்வார்கள். சிறையிலும் அவைகளை மீறுவதற்குச் சுதந்திரம் இருக்கலாம். அப்படி மீறினால் கிடைக்கக்கூடிய சலுகைகள் கிடைக்காமல்தான் போகும். சிறை அதிகாரிகளுக்குத் தொந்தரவு கொடுக்கும் முறையில், பட்டினி கிடக்கும் முறையில், கைதிகளைத் தூண்டிவிடும் முறையில் இருந்தும் அவர்களுக்கு நன்னடத்தைக்கு ரெமிஷன் கொடுக்க வேண்டும் என்று சொன்னால் சிறையே நடக்க முடியாது. கம்யூனிஸ்ட் சர்க்கார்கள் இருக்கக்கூடிய இடத்தில் இப்படி நடக்கிறது என்று சொன்னால் அதைப் பார்த்துவிட்டு வேண்டுமானால் அதன் பிரகாரம் நடத்த ஆட்சேபணை இல்லை.

Sri M. KALYANASUNDARAM : சமீப காலத்தில் நீங்கள் சொன்னவைகளுள் என்னென்ன தவறுகளைச் செய்திருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : நான்கு வருஷங்களிலே விசேஷமாக நன்னடத்தைக்காக ரெமிஷன் கிடைத்து விடாது. ஒவ்வொரு வருஷமும் வாங்கிக் கொண்டு வந்தால் சேர்ந்து 10 வருஷத்தில் வர முடியும். இரண்டு வருஷம் நன்றாக நடந்திருக்கிறார்கள் என்பதற்காக எட்டு வருஷங்களாக நடந்ததை மறந்து, 10 வருஷத்திற்குள் வர முடியும் என்று எதிர்பார்ப்பது முடியாத காரியம். இதிலே விதிகளுக்குப் புறம்பாக ஒன்றும் செய்யப்படவில்லை. ரெமிஷன் கொடுப்பதற்கு அதிகாரிகளுக்கு உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. நன்னடத்தை இருந்தால் ரெமிஷன் கொடுக்கலாம் என்று இருக்கிறது. அவர்கள் நடத்தையைப் பொறுத்த மட்டில் ஸ்பெஷல் ரெமிஷன் கொடுக்க முடியாது என்று ஏற்படுமானால் இப்போது சொல்லிக் கொண்டிருப்பதில் பிரயோசனம் இல்லை. கனம் அங்கத்தினர் கல்யாணசுந்திரம் அவர்கள்கூட, சமீப காலத்தில் ஏதாவது தவறாக நடந்திருக்கிறார்களா என்று உணர்ந்து சொன்னார்கள். முன்பு நடந்திருக்கிறது என்று ஒப்புக் கொண்டு சொன்னார்கள். அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். முன்பு இல்லாத ரெமிஷன் இப்போது வராது. அரசியல் கைதிகள் என்ற முறையில் இவர்களை வெளியே விட வேண்டுமென்று சொல்லுகிறார்கள். இன்னும் தேர்தலுக்காக வெளியே விடவேண்டுமென்று சொன்னார்கள். அதே சமயத்தில் ஒரு புறத்தில் தேர்தலுக்காக ஒன்றும் செய்யக் கூடாது என்று வேறு சொல்லுகிறார்கள். அவர்களுடைய சரித்திரத்தைப் பரிசீலனை செய்து பார்த்திருக்கிறேன். எப்படிப்பட்ட குற்றங்களைச் செய்திருக்கிறார்கள் என்று பார்க்கும்போது, அவர்களுக்குத் தனியாக சலுகைகள் கொடுத்து எப்படி வெளியே விடுவது என்பது தயக்கமாக இருக்கிறது. அவர்கள் செய்துள்ள குற்றங்களைப் பார்க்கும்போது செய்துள்ள காரியங்களைப் பார்க்கும்போது, அதுதான் தடங்கலாக இருக்கிறது என்று தெரிவித்துக் கொள்கிறேன். தங்களுடைய சகாக்கள், தங்கள் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்ற காரணத்தினால் இதை மூடி வைப்பதில் பிரயோசனம் இல்லை.

இன்னொரு கருத்தைச் சொன்னார்கள். வெள்ளைக்காரன் காலத்தில் உங்கள் கட்சி செய்யவில்லையா என்று கேட்டார்கள். இந்த மனப்பான்மை தான் குறுக்கே நிற்கிறது. அன்னியர் ஆட்சியில் செய்ததை யெல்லாம் சுய ஆட்சியில் செய்யலாம் என்று நினைப்பதில்தான் இந்த முரண்பாடு வருகிறது. அன்னிய ஆட்சி இருந்தபோது நடந்ததற்கும், சுய ஆட்சியில் நடப்பதற்கும் வித்தியாசம் இருக்கிறது என்று உணராத நிலையில் கஷ்டங்கள் இருக்கும், சிக்கல்கள் இருக்கும். அப்புறம் 1950க்கு பிற்பாடு என்று சொன்னார்கள். 1947-ம் வருஷம் ஆகஸ்ட் 15-ம் தேதி நமக்கு சுதந்திரம் வந்தபோது கம்யூனிஸ்ட் கட்சியானது இதெல்லாம் மாயை, இன்னும்

[Sri C. Subramaniam] [28th March 1961

ஏகாதிபத்தியத்தின் பிடிப்பு இருக்கிறது என்று 1950–51 வரையில் நினைத்துக் கொண்டிருந்தார்கள். அதன் விளைவாகத்தான் இதெல்லாம் வந்திருக்கிறது. மாயையில் செய்திருக்கும் காரியங்களுக்கு ஏற்ற தண்டனையை ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்க வேண்டும் என்று சொல்லிக் கொள்கிறேன். இதிலே கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்பதற்காக சலுகைகள் கொடுப்பதற்குத் தயாராக இல்லை. அதேபோல் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்பதற்காக அவர்களுக்குக் கொடுக்கக் கூடிய எந்தச் சலுகைகளையும், தவிர்க்க வேண்டுமென்று இந்தச் சர்க்கார் கருதவில்லை. மற்ற கைதிகளுக்கு அளிக்கப்படும் உதவிகள் இவர்களுக்கும் அளிக்கப்படும். விதிகளின்படி என்னென்ன சலுகைகள் மற்றவர்களுக்கு வழங்கப்படுகின்றதோ, அவைகளைப் பொருத்த மட்டில் இவர்களுக்கும் வழங்கப்படும். ஆகவே இவர்களுக்கு மட்டும் தனிச் சலுகைகள் வேண்டுமென்று சொன்னால், அப்படிக் கொடுப்பதற்கில்லை. மற்றக் கைதிகளுக்குக் கொடுக்கப்படும் சலுகைகளே இவர்களுக்கும் கொடுக்க வேண்டுமென்பதுதான் சர்க்காருடைய கருத்து என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMI : திராவிட முன்னேற்றக் கழகத்தின் தேர்தல் நிதிக் கணக்கைப் பார்க்க வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். தினமும் எங்கள் பத்திரிகையில் அதைப்பற்றி பட்டியல் வந்து கொண்டிருக்கிறது. அதேபோல் காங்கிரஸ் கட்சி இது வரையிலும் எவ்வளவு வசூல் செய்திருக்கிறது, மாவட்ட வாரியாக எவ்வளவு தொகை வசூல் செய்திருக்கிறது என்ற கணக்கை நாளது முதல் பத்திரிகையில் வெளியிட கனம் நிதி அமைச்சர் அவர்கள் முன்வருவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : பத்திரிகையிலே வருவதையெல்லாம் கணக்கில் எடுத்துக் கொள்ள முடியாது. அது வேறு விஷயம். அப்படிப் பார்க்கப் போனால், ஒவ்வொரு கட்சியிலேயும் இருக்கும் எல்லா விஷயங்களையும் நீங்கள் பார்க்கக் கூடாது என்று சொல்லக் கூடாது. நிதி கொடுப்பது தேர்தல் நடத்த மட்டுமல்ல. அதேபோல் கட்சி எப்படி நடைபெறுகிறது, எந்த முறையிலே அடித்துக் கொள்கிறார்கள், எந்த முறையிலே கூடிக் கொள்கிறார்கள் என்பதை மற்றவர்கள் தெரிந்து கொள்வதைக் கூடாது என்பதும் தவறான கருத்து. அதையும் பார்ப்பதற்கு உரிமையுண்டு என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Appropriation (No. 3) Bill, 1961 (L.A. Bill No. 20 of 1961) be taken into consideration.'

The motion was put and carried, and the Bill was taken into consideration.

Clause 2 with the Schedule was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

'That the Madras Appropriation (No. 3) Bill, 1961 (L.A. Bill No. 20 of 1961) be passed.'

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Appropriation (No. 3) Bill, 1961 (L.A. Bill No. 20 of 1961) be passed.'

The motion was put and carried and the Bill was passed.

(5) THE MADRAS VILLAGE COURTS (AMENDMENT) BILL, 1961 AS PASSED BY THE COUNCIL (L.A. BILL NO. 2 OF 1961)

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

'That the Madras Village Courts (Amendment) Bill, 1961, as passed by the Council, be taken into consideration.'

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த சென்னை வில்லேஜ் கோர்ட் ஆக்ட் 1888-ம் ஆண்டிலே நிகழ்த்தப்பட்ட சட்டமாகும். அது பழைய சட்டம். ஆனால் நாம் இந்த மன்றத்திலே பஞ்சாயத்துச் சட்டம், கிராமப் பஞ்சாயத்துச் சட்டம் நிறைவேறுகின்ற வரையிலும் கிராமப் பஞ்சாயத்துக்களுக்குக்கூட இது நீதி பரிபாலனத்திற்கு உதவியாக இருந்தது. இப்போது இது எடுக்கப் பட்டிருக்கிறது. இப்போது பழைய சட்டத்திலே 13-வது செக்ஷன்படி ரூ. 50 வரையிலும் கிராமக் கோர்ட்டுகள் வசூலிக்கலாம் என்று சட்ட மிருக்கிறது. மற்றொரு பிரிவு அதாவது 14-வது பிரிவில் கட்சிக்காரர்கள் சம்மதப்பட்டு, அவர்கள் ஒப்புக் கொண்டால் ரூ. 200 வரையிலும்கூட வசூலிக்கலாம் என்று சட்டமிருக்கிறது. இப்போது இதை இந்தக் கட்சிக் காரர்களைக் கேட்காமலேயே 200 ரூபாய் வரை வசூலிக்கலாம் என்பதுதான் ஒரு திருத்தம். இப்போது இந்த 200 ரூபாய் வரை வசூல் செய்யலாம் என்று போட்டிருக்கும் சட்டம் கிராமங்களிலே மிக நல்ல முறையில் நடந்து கொண்டு வருகிறது. இதை கட்சிக்காரர்களின் சம்மதம் இல்லா மலேயே செய்யலாம் என்று சொல்வது கட்சிக்காரர்களுக்கும் சவுகரியமாக இருக்கும். அவர்கள் இதை வரவேற்பார்களென்றே நம்புகிறேன். அதனால் அவர்களுக்கு முன்சீப் கோர்ட்டுக்கும் போக வேண்டியதில்லை. அதனால் கோர்டு செலவும் அவர்களுக்குக் குறையும். ஆகவே தான் இந்த 200 ரூபாய்க்கு உயர்த்துவதற்கு ஒரு திருத்தம் முக்கியம் என்று கொண்டு வந்திருக்கிறோம்.

மற்றொன்று இப்போது வெயிட்ஸ் அண்டு மெஷர் வந்த பிறகு மெட்ரிக் சிஸ்டம் வந்திருப்பதாலே, அந்த அளவுக்கு அதைத் திருத்த வேண்டுமென்பதற்கு ஒரு திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இது 40-வது செக்ஷனில் போடப்பட்டு இருக்கிறது. மற்றொரு திருத்தம் என்னவெனில், இந்தச் சட்டம் கன்யாகுமரி மாவட்டம், செங்கோட்டை தாலூகா ஆகிய இந்த இரண்டு இடங்களிலும் அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்பது. இவைகள் முன்பு திருவாங்கூர்-கொச்சியில் சேர்ந்திருந் ததால், அங்கு அந்தச் சட்டம் அமுலில் இருந்தது. இப்போது அதை ரத்து செய்து, இந்தச் சட்டத்தை நிறைவேற்ற வேண்டுமென்பது. அந்த நோக்கத்தோடு ஒரு திருத்தம் கொண்டு வரப்பட்டுள்ளது. ஆனால் அந்த பழைய சட்டத்திலே நியமிக்கப்பட்டவர்கள் இருப்பார்கள். அதற் குரிய வகையிலேதான் திருத்தங்கள் கொண்டு வரப்பட்டிருக்கிறன்றன. ஆகவே இந்தத் திருத்தங்கள் அடங்கிய இந்த மசோதாவை கனம் அங்கத் தினர்கள் ஏற்றுக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டு, என்னுடைய வார்த்தை களை முடித்துக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : Motion moved—

That the Madras Village Courts (Amendment) Bill, 1961, as passed by the Council, be taken into consideration.'

The motion is before the House for discussion.

SRI S. M. ANNAMALAI : கனம் சட்ட மன்றத் தலைவர் அவர் களே, இது ஒரு நல்ல மசோதா. இதை நான் உண்மையிலேயே வர வேற்கிறேன். கிராமங்களில் பஞ்சாயத்து கோர்ட்டுகளில் 50 ரூபாய் வரை யிலே அவர்களே வசூலிக்கலாம். ஆனால் அதற்கு மேல் 200 ரூபாய் வரை என்றால், அவர்கள் வாதிப் பிரதிவாதிகளின் சம்மதத்தைப் பெற வேண்டும். இப்போது பஞ்சாயத்து கோர்ட்டே 200 ரூபாய் வரையிலும்

* Printed as Appendix VI on page 336-339 infra.

வசூலிக்கலாம் என்ற திருத்தத்தைக் கொண்டு வந்திருப்பது கிராம மக்களுக்கு மிகவும் நல்லது. காரணம் என்னவென்று கேட்டால், ஐம்பது ரூபாய்க்கு மேல் என்றிருந்தால், வாதிப் பிரதிவாதிகளின் சம்மதத்தைப் பெற்று 200 ரூபாய் வரையிலும் வசூலிக்கலாம் என்று முன் இருந்தது. ஆனல் இப்போது இப்படி இருப்பது அனுவசியமாக அவர்கள் முன்சீப் கோர்ட்டுக்குப் போவதைக் கட்டுப்படுத்தும். கிராமப்புறங்களில் அடிக்கடி இப்படிக் கோர்ட்டுக்குப் போய் வருவது என்பது மிகவும் கஷ்டமான காரியம். இப்படிப் போவதால் அவர்களுடைய வேலையும் கெட்டுவிடும். பணமும் செலவாகும். அந்தக் காரணத்தை ஒட்டித்தான் சர்க்கார் இந்தத் திருத் தத்தைக் கொண்டு வந்திருக்கிருர்கள். ஒரு சில சமயங்களில் அவர்கள் சரிவர இணங்கவில்லை என்று சொன்னலும் கூட, கிராமப்புறத்திலே உள்ள மக்கள் அவர்களை எப்படியாவது சமாதானப்படுத்தி, பஞ்சாயத்து கோர் டுக்கே வராமல் செய்துவிடுகிருர்கள். நீங்கள் இப்படி ஒத்துக் கொள்ள வேண்டுமென்று அவர்களிடத்திலே ஒரு சமாதானத்தைச் சொல்லி, அதிகம் செலவாகாத முறையிலே காரியத்தை முடித்து வைப்பார்கள். கிராமப் புறத்திலே அதிகமாக அவர்கள் கோர்ட்டுக்குப் போவதையே விரும்புவ தில்லை. ஆகவே அந்த அபிப்பிராயத்தை யொட்டி அவர்கள் முன்சீப் கோர்ட்டுக்கு மேலும் போகாது இருக்கிற வழியிலே இந்தச் சட்டம் கொண்டு வந்து, 200 ரூபாய் வரையிலும் வாதிப் பிரதிவாதிகளின் சம்மதம் இல்லாமலேயே செய்யலாம் என்று செய்திருப்பதைக் கண்டு நான் உண்மையிலேயே பாராட்டுகிறேன். ஆனல் ஒன்றை மட்டும் சொல் லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். சமுதாய நலத் திட்டப் பகுதிகளில் 1958-லே ஒரு சட்டம் இருக்கிறது. அந்தச் சட்டம் வந்த இடங்களிலே, பஞ்சாயத்து போர்டுகளுக்கு இனிமேல் இப்படிப்பட்ட வழக்குகளை விசாரிக்கும் அதிகாரம் கிடையாது. அதற்குக்கூட பதில் சொல்கின்றபோது, இனிமேல் ரெவினியூ இலாகா கவனிக்குமென்று சொன்னர்கள். அதன்படி பஞ்சா யத்து கோர்ட்டுகள் தனியாக நியமிக்கப்பட்டு, சமுதாய நலத் திட்டப் பகுதிகளில் இயங்க வேண்டியிருந்தது. அதனல் பஞ்சாயத்து கோர்ட்டும், பஞ்சாயத்து போர்டும் தனியாக இயங்கிக் கொண்டிருந்தது. பஞ்சாயத்து போர்டு வசூலிக்கலாம் என்று ஒரு உத்தரவு போட்டதன் காரணமாக, பஞ்சாயத்து போர்டு வழக்குகளை விசாரணை செய்து வந்தது. ஆகவே இதற்கு முன்பு பஞ்சாயத்து கோர்ட்டுகள் இருந்ததுபோல் தனியாக இருந்து இயங்க வேண்டுமா, அல்லது வேறு ஏதாவது ஒரு கோர்ட்டு சமுதாய நலத் திட்டப் பகுதிகளிலே உள்ளதுபோல் நியமிக்கப்படுமா அல்லது நான் கேள்விப்பட்டதுபோல் சப்-ரிஜிஸ்த்திரார் ஆபிசிலேயே இதை விசாரிக்கலாம் என்று இருக்குமா என்பதை அறிய விரும்புகிறேன். சப்-ரிஜிஸ்த்ரார் ஆபீசில் விசாரிப்பதற்கான ஒரு ஜீ.ஒ.-வை நான் பார்த்திருக்கிறேன். அதற்கு பிறகு அந்த யோசனையை ஜ.ஜீ. அவர்கள் கைவிட்டு விட்டார்கள். இதற்கு முன்னல் சப்-ரிஜிஸ்த்திரார் ஆபீசில் ஒரு பென்ச் கோர்ட்டு இருக்கும். ஆகவே அதைப்போல் ஏதாவது செய்து விசாரிக்கச் சொல்வார்களா என்பதையெல்லாம் கனம் அமைச்சர் அவர்கள் இந்தச் சபையிலே நன்கு விளக்க வேண்டும். இப்போது இது ஒரு பெரிய குழப்பமாக இருக்கிறது. சமுதாய அபிவிருத்தித் திட்டப் பகுதிகளில் இனிமேல் எப்படிச் செய்யப் போகிருர்கள் என்பதை யெல்லாம் கனம் அமைச்சர் அவர்களை விளக்கு மாறு கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* **SRI R. SRINIVASA IYER** : ஸார், இந்த மசோதா மேல் சபை யிலிருந்து பாஸ் ஆகி வருகிறது. நல்ல மசோதா. ரொம்ப நாளாக கிராம கோர்ட்டுக்கு அதிகார வரம்பு 50 ரூபாய் என்றிருந்தது. இப்போது 200 ரூபாய் என்றுக்குவது அவ்வளவு பிரமாதம் ஒன்றுமில்லை. ஏனென்றல் விலைவாசி உயர்வை உத்தேசித்து 50 ரூபாய் என்று முன் பிருந்தது இப்போது 200 ரூபாய்க்குச் சமமாகும். இதிலே உள்ள சில அம்சங்களைப்பற்றிச் சொல்ல விரும்புகிறேன். ஆக்ட் 10/50-ல் கூட பஞ்சா யத்து கோர்ட் ஏற்பட்டாலும், அதிலே கட்சிப் பிரதிகட்சிகள் ஏற்பட்டு, முன்சீப் கோர்ட்டில் ட்ரான்ஸ்பர் பெடிஷன்கள், தீர்மானத்திற்குப் பிறகு ரத்து பண்ண வேண்டும் என்று பெடிஷன், இம்மாதிரி இருந்தது. பிற்பாடு Act of 35 of 1958 பாஸான பிறகு பஞ்சாயத்து யூனியன்

28th March 1961] [Sri R. Srinivasa Iyer]

கவுன்சில் ஏற்பட்ட பிறகு பஞ்சாயத்துக் கோர்ட்டாக இருந்ததும் போச்சு. கிராம கோர்ட்டும் போச்சு. ஐம்பது ரூபாய்க்குக்கூட பழைய வில்லேஜ் கோர்ட் ஆக்ட்படிக்கு எலெக்ஷன் மூலம் செய்ய வேண்டுமென்று இருந்தது. ஐம்பதாம் வருஷத்திலிருந்து அது அடியோடு போய், கிராம முன்சீப்பே பஞ்சாயத்துக் கோர்டாக இருக்கிறார்கள். பிராது யாரிடம், எப்படிக் கொடுப்பது என்பதில் கஷ்டம். தபாலில் அனுப்பினால், காலாவதி ஆகிவிடுகிறது. இந்த பஞ்சாயத்துக் கோர்ட்டுகள் இல்லாதபோது, கிராம முன்சீப்பே கோர்ட்டாக இயங்குவது இருக்கக் கூடாது. இந்த ஆக்ட் போட்டு, ரூல்ஸ் போட்டு, கோர்ட்டு அமைக்க உடனடியாக கவனம் செலுத்த வேண்டும். ஸ்ரீ அண்ணாமலை இதை வரவேற்றார்கள். கோர்ட்டு பீ ஸ்டாம்ப் இல்லாமல் கிராம மக்களுக்கு பிராது செய்வது நல்லதுதான். ஆனால், செக்ஷன் 73-ல் முன்சிப் கோர்ட்டுக்கு "question of fact"-ல் revision-க்கு போக முடியாது. கிராம கோர்ட்டிலே ஜட்ஜ்மெண்ட் எழுத வேண்டியதில்லை ; வாக்கு மூலம் விசாரிக்க வேண்டியதில்லை ; தான் ஏதோ கேள்விப்பட்டாலும் போதும். "In Small Cause Court, notes of evidence போதும். No judgment need be written" என்ற முறையிலே, செக்ஷன் 73-ஐயும் சேர்த்து திருத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இருநூறு ரூபாய் என்றாலும், அதிலேயே அழிந்துவிடும் குடும்பங்களும் கிராமத்தில் உண்டு. ஆகவே கட்சிப் பூசல்களால், மெஜாரிடி, மைனாரிடி பேரில் தீர்மானம் செய்துவிட்டால், தீர்ந்து போச்சு. "question of factலும் ரிவிஷனுக்கு போக முடியாது. Question of factலும் டிஸ்ட்ரிக்ட் முன்சிப்புக்கு ரிவிஷன் பவர் இருந்தால் நல்லது; பவர் இல்லாவிட்டால், 'no question of law rejected, no question of corruption rejected, no question of injustice rejected ; என்றாகிவிடும். ஆகவே செக்ஷன் 73-ம் சேர்த்து உடனடியாகத் திருத்தம் செய்ய வேண்டும். இந்த மசோதா மேல்சபையில் நிறைவேறி இங்கே வந்திருக்கிறது. இப்பொழுது புதுத் திருத்தம் செய்ய முடியாமல் இருக்கும். மேல் சபை எல்டர்கள் சபை, அவர்கள் கொண்டு வந்திருக்கிறது என்று இருந்தாலும் இதிலே "Question of fact" உடன் கூட பவர் ஆப் ரிவிஷன் இருக்க வேண்டும். அதே நேரத்தில் ஒரு குழுவை நியமித்து இந்த வில்லேஜ் கோர்ட்டுகள் எத்தனை பிராதுகளை விசாரித்திருக்கிறது, எத்தனை பேரில் தீர்மானம் எடுத்திருக்கிறார்கள், அப்பீல் பண்ணின கேசுகள் எத்தனை என்பதை யெல்லாம் கணக்கெடுத்து, நல்ல முறையிலே ரிபோர்ட் தயார் செய்ய வேண்டும். உண்மையிலேயே நடப்பதை கட்சிப் பாகுபாடு இல்லாமல், நல்ல முறையிலே நடத்த வேண்டும். இப்படிச் செலவில்லாமல், கிராம மக்களுக்கு நலம் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு 200 ரூபாய் வரை ஜுரிஸ்டிக்ஷனை உயர்த்தியிருப்பதை வரவேற்கிறேன். கோர்ட்டுகள் நல்ல முறையிலே பணியாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, செக்ஷன் 73-ஐயும் சேர்த்துத் திருத்தம் செய்ய முடியுமா என்று பார்க்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு என் உரையை முடிக்கிறேன். 12 noon.

**SRI T. SAMPATH :** உதவி சபாநாயகர் அவர்களே, இந்த திருத்த மசோதாவை முழு மனதோடு ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த திருத்த மசோதாவின் அவசியம்பற்றி அமைச்சரவர்கள் குறிப்பிட்டார்கள். செக்ஷன் 13-ல் 50 ரூபாய் என்ற பெக்யூனியரி ஜுரிஸ்டிக்ஷனை, 200 ரூபாய் ஆக்க வேண்டும் என்பதுதான் ஸ்ரீ ஸ்ரீனிவாச அய்யர் சொன்னது போலவும், மற்ற அங்கத்தினர்கள் சொன்னது போலவும், கிராம பஞ்சாயத்துக் கோர்ட்டிலே கட்சிப் பூசல்கள் ஜாஸ்தியாக இருக்கிறது. சில சந்தர்ப்பங்களிலே, நியாயம் இருக்கிறதா என்று கூட ஐயப்பாடு எற்படுகிறது. இந்த சந்தர்ப்பத்திலே ரூபாய் 50 ஜுரிஸ்டிக்ஷனை 200 என்று திருத்தம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. அதைச் சரியான முறையில் நடத்த கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும். கனம் அங்கத்தினர் ஸ்ரீ ஸ்ரீனிவாச அய்யர் சொன்னது போல டிஸ்ட்ரிக்ட் முன்சீப் கோர்ட்டில் பல ட்ரான்ஸ்பர் பெடிஷன்கள் வருகின்றன. இந்தக் குறையை நீக்க அரசாங்கம் வழிவகை செய்ய வேண்டும்.

[Sri T. Sampath] [28th March 1961

மற்ருெரு விஷயத்தையும் சொல்ல விரும்புகிறேன். ஸ்ரீ ஸ்ரீனிவாச அய்யர் சொன்னதுபோல, செக்ஷன் 73-ஐயும் சேர்க்க வேண்டும். முன்சீப் கோர்ட்டுக்கு அப்பீலுக்கு பவர் கொடுக்க வேண்டும். "க்வெஸ்சின் ஆப் லா-வில்" தவறு இருந்தால், ரிவிஷன் மனு செய்து கொள்ளலாம் என்று இருக்கிறது. முன்சீப் கோர்ட்டுக்கு ரிவிஷன் செய்தால், லா இல்லை என்று தள்ளுபடி செய்துவிடுகிருர்கள். பெக்யூனியரி ஜூரிஸ்டிக்ஷன் அதிகப்படுத்தும்போது, அப்பீல் பவரும் கொடுத்தால்தான் சரியாக இருக்கும்.

திரு அண்ணுமலை ஒன்றைக் குறிப்பிட்டார்கள், இப்பொழுது ஒரு சங்கடமான நிலைமை இருக்கிறது என்று. அது உண்மை. பஞ்சாயத்து யூனியன் கௌன்சில் பார்ம் ஆன இடங்களில், வில்லேஜ் கோர்ட்டுகள் இல்லை. கிராம முன்சீப்புக்கு அதிகாரம் இல்லை. இப்பொழுது முன்சீப் கோர்ட்டுக்குப் போவதா, எங்கே போவது என்ற இக்கட்டான நிலை இருக்கிறது. நான்கூட முன்சீப்களுக்குச் சொல்ல, புள்ளி விவரங்கள் வேண்டும், எங்கெங்கே யூனியன் கௌன்சில்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பது பற்றி எழுதியிருக்கிறேன். பஞ்சாயத்து யூனியன்கள் அமைந்து கோர்ட்டுகள் இல்லாத இடங்களில் முன்சீப் கோர்ட்டுக்கே அந்த பவர் அளிக்கப்பட வேண்டும் என்று செய்ய வேண்டும். இந்த மசோதாவை ஆதரிக்கிறேன். இந்த வார்த்தைகளுடன் என் பேச்சை முடிக்கிறேன்.

SRI S. NAGARAJA MONIGAR : ஸார், அமைச்சரவர்கள் கொண்டு வந்திருக்கும் மசோதாவை ஆதரிக்கிறேன். மூன்று திருத்தங்களைக் குறிப்பிட்டார்கள். ஐம்பது ரூபாய் என்றிருந்த வரம்பை 200 ரூபாய் வரை உயர்த்துவது. அன்றைக்கே சம்மதத்தின் பேரில் 200 ரூபாய்க்குக் கீழே அவர்கள் விசாரிக்க அதிகாரம் இருந்தது. இந்த திருத்தத்தை யாரும் வரவேற்பார்கள். நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். ஐம்பதிலிருந்து 200 என்று ஆக்கும் நேரத்தில், கொஞ்சம் அதிகமான தொகையை நிர்ணயித்து சம்மதத்தின்பேரில் செய்யலாம் என்று ஏற்படுத்தினல் நலமாக இருக்கும். ஆகவே, இன்றைக்கு 200-க்கு மேற்பட்ட ஒரு தொகையை அதற்காக நிர்ணயித்தால் நல்லது. அங்கே கட்சிப் பூசல்கள் இருக்கின்றன, அவர்கள் நல்ல முறையிலே நீதி வழங்க மாட்டார்களா என்று தெரிவிக்கப்பட்டது. நாம் இன்றைக்கு மக்களை நம்பி மக்கள் ராஜ்யம் ஏற்பட வேண்டும் என்று சொல்லும்போது, நீதி வழங்குவதில் தவருக இருப்பார்கள் என்று நினைப்பது அவ்வளவு சரியாக இல்லை. பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்கனவே சில இடங்களில் ஏற்பட்டுவிட்டன. அடுத்த ஏப்ரலில் மேற்கொண்டு இன்னும் மற்ற இடங்களில் ஏற்பட இருக்கின்றன. ஆகையினுல் அந்த இடங்களிலே, பஞ்சாயத்து கோர்ட்டுகளாக, க்ளாஸ் 1 பஞ்சாயத்துகளாக நடந்து வந்தன.

இப்போது இவைகளை எல்லாம் பஞ்சாயத்து யூனியன்களிடமே ஒப்படைக்கலாம். அப்படி இல்லையானுல் கிராம கோர்ட்டுகள் என்று ஏற்படுத்துவோமானுல் மூன்று நான்கு கிராமங்களை ஒன்ருகச் சேர்த்து கிராம கோர்ட்டு என்று ஏற்படுத்தி இந்த அதிகாரங்களை அவர்களிடத்தில் ஒப்படைக்க வேண்டும். பஞ்சாயத்துகளிடமோ, பஞ்சாயத்து யூனியன்களிடமோ ஒப்படைப்பது வரவேற்கத் தக்கது. சரியான நீதி வழங்கப்படவில்லை என்ற குறை கட்சிக்காரர்களிடையே ஏற்படுமானுல் அப்பீலுக்குப் போவதற்கும் வழிவகை லகுவாகச் செய்யப்பட வேண்டும். முன்சீப் கோர்ட்டில் இருந்து ஜில்லா கோர்ட்டுக்கும், ஜில்லாக் கோர்ட்டில் இருந்து ஹைக்கோர்ட்டுக்கும் போவதற்கு எந்த எந்த வகையில் லகுவான முறைகளை வைத்திருக்கிருேமோ அதைவிட லகுவான முறையில் கிராமக் கோர்ட்டுகளில் இருந்து ஜில்லா முன்சீப் கோர்ட்டுக்கு அப்பீல் செய்துகொள்வதற்கு வழி செய்ய வேண்டும். அப்போதுதான் ஏழை மக்களுக்கு வசதி ஏற்படும் என்று தெரிவித்துக்கொண்டு இந்த மசோதாவை வரவேற்கிறேன்.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, விவாதத்தைத் துவக்கி வைத்த கனம் அண்ணுமலை அவர்கள் பொதுவாக இந்தத் திருத்தத்தை வரவேற்ருர்கள். கிராம

28th March 1961] [Sri S. Nagaraja Monigar]

கோர்ட்டிலே 50 ரூபாய் வரையில் என்பதற்கு பதிலாக 200 ரூபாய் வரையிலும் விசாரணை செய்யலாம் என்று வைப்பது திருப்திகரமாக நடைபெறுகிறது என்றும் சொன்னார். அவர்கள் இதையெல்லாம் கூர்ந்து கவனிக்கிறவர்கள். ஆகவே அவர்கள் சொல்வதை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்கிறேன். 1958-ம் வருஷம் கொண்டு வந்த பஞ்சாயத்து சட்டத்திலே இதை எடுத்துவிட்டோம். கிராமத்திலே கட்சிகள் இருக்கலாம். இன்றைய தினம் கிராம பஞ்சாயத்துகள் என்று ஏற்படுத்தி பெரிய பெரிய பொறுப்புகளை எல்லாம் கிராம மக்களிடத்திலே ஒப்படைத்திருக்கிறோம். அப்படி எல்லாம் இருக்கிறபோது அனுவசியமாக ஜில்லா கோர்ட்டுக்கு எல்லாம் போய் வீணுகப் பணச் செலவு, காலதாமதம் இவை எல்லாம் ஏற்படுவதைத் தவிர்க்க வேண்டும் என்றுதான் கிராம கோர்ட்டுகள் என்று ஏற்படுத்த வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. கனம் அண்ணுமலை கூறியது போல கிராமக் கோர்ட்டுகள் தீர்ப்புக் கொடுப்பது என்ற ரீதியில் இல்லாமல் இரண்டு கட்சிக்காரர்களுடைய விஷயத்தையும் விசாரித்து கிராமத்திலேயே இரண்டு பேர்களுக்கும் ஒரு சமரசம், நல்லதொரு உடன்பாடு காணும் வகையில் தீர்வு காண வேண்டும் என்பதுதான் லட்சியம். இப்படிச் செய்தால்தான் ஊரிலும் ஒரு கட்சிக்காரருக்கும், இன்னொரு கட்சிக்காரருக்கும் மனஸ்தாபம் வளராமல் இருக்கும். பெரிய கோர்ட்டுகளிலேகூட இப்படித்தான் இரண்டு பேர்களும் ராசியாகப் போகும்படி சில சமயங்களில் சமரசம் செய்து வைக்கிறார்கள். கிராமப் பஞ்சாயத்துகளிடம் இருந்து அந்த அதிகாரத்தை எடுத்த பிறகு ஒரு குழப்பம் இருப்பது உண்மை. யாரிடத்தில் போகிறது, யார் தீர்த்து வைப்பது என்பது நம் முன்புள்ள ஒரு கேள்வி. ஒரு கேள்விக்குப் பதில் அளித்தபோதே நான் சொன்னேன். கிராம கோர்ட்டுகள் இல்லாத இடத்தில் கிராம முன்சீப்தான் கோர்ட்டாக இருந்து சமாசம் செய்து வைக்கிறார், தீர்ப்பு கொடுக்கிறார். ரெவின்யூ போர்டார் அதற்குத் தகுந்த நடவடிக்கை எடுத்துக்கொள்வார்கள் என்று சொன்னேன். இந்தக் கோர்ட்டு எப்படி நடக்கிறது என்பதைப்பரிசீலனை செய்வதற்கு அகில இந்திய ரீதியில் ஒரு கமிட்டி அமைக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் இதை பரிசீலனை செய்து இன்னும் என்ன மாறுதல் செய்யப்படலாம் என்று சொல்வார்கள். அதற்குத் தக்க ஏற்பாடும் செய்யப்படும்.

கனம் அங்கத்தினர் சீனுவாசய்யர் அவர்களும், கனம் சம்பந்தம் அவர்களும் 73-வது செக்ஷன் மாற்றப்பட வேண்டியதைப்பற்றிச் சொன்னார்கள். கிராம கோர்ட் கொடுக்கிற தீர்ப்புகள் எல்லாவற்றின் பேரிலும் ஒரு கட்டுப்பாடு இன்றி அப்பீல் செய்ய வசதி இருக்குமானால் அப்புறம் கிராம கோர்ட் என்று இருப்பதற்கே அவசியம் இல்லை. எல்லோரும் மேல் கோர்ட்டுக்குப் போவார்கள். அங்கும் வேலை அதிகம். இங்கே நடைபெறுகிற காரியங்கள் வீணுகப் போகும். கிராமக் கோர்ட்டின் லட்சியமே அப்போது பாதிக்கப்படும். ஜில்லா கோர்ட்டுக்கு என்று போனால் செலவும் ஆகிறது.

SRI T. SAMPATH : Because the pecuniary jurisdiction is sought to be raised to Rs. 200.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 50 ரூபாய் போதாது 200 ரூபாய் வரையிலும் என்றுவது இருக்கவேண்டும் என்கிற நோக்கத்தோடுதான் இவ்வாறு கொண்டுவரப்பட்டிருக்கிறது. யாருக்கும் தொல்லை கொடுக்காமல் இது கொண்டுவரப்பட்டிருக்கிறது. ஆகையால் இதை அப்படியே இந்த மன்றம் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Village Courts (Amendment) Bill, 1961, as passed by the Legislative Council, be taken into consideration.'

The motion was put and carried and the Bill was taken into consideration.

[28th March 1961

Clauses 2 to 9 were put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

'That the Madras Village Courts (Amendment) Bill, 1961, as passed by the Legislative Council be passed.'

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Village Courts (Amendment) Bill, 1961, as passed by the Legislative Council be passed.'

The motion was put and carried and the Bill was passed.

(6) THE MADRAS HINDU RELIGIOUS AND CHARITABLE ENDOWMENTS (AMENDMENT) BILL, 1961, AS PASSED BY THE COUNCIL (L.C. BILL NO. 3 OF 1961).

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

'That the Madras Hindu Religious and Charitable Endowments (Amendment) Bill, 1961, [a] as passed by the Council, be taken into consideration.'

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, பழைய சட்டங்களை எல்லாம் திருத்தி புதிதாக சென்ற ஆண்டிலேதான் அறநிலைய பாதுகாப்புச் சட்டம் கொண்டுவரப்பட்டது என்பது கனம் அங்கத்தினர்களுக்கு நினைவு இருக்கும். அதற்கு முன்பு இருந்த சட்டத்தில் பல திருத்தங்கள் இருந்தன. அதையெல்லாம் ஒன்றாகவே சேர்த்து சட்டமாகக் கொண்டுவந்தோம். இப்போது நிறைவேற்றப்பட்ட சட்டத்திலும்கூட அறநிலைய பாதுகாப்பு இலாகா கமிஷன் நியமனம் செய்வதைப்பற்றி, டெபுடி கமிஷனர் நியமனம் செய்வதைப்பற்றி ஒன்றும் இல்லை. விதிகளில் வைத்திருந்தோம். பொதுவாக முன்பு இருந்த சட்டத்திலும்கூட அரசாங்கம் அவர்களை நியமிக்கலாம் என்று இருந்தது. ஆனால் அப்படி நியமிக்கிறபோது என்ன என்ன வகையில் நியமிக்கலாம் என்பது சட்டத்தில் இல்லை. முக்கியமாக கீழே இருக்கிறவர்களை அசிஸ்டெண்டு கமிஷனராக நியமிக்கலாம், அசிஸ்டெண்டு கமிஷனர்களை டெபுடி கமிஷனராக நியமிக்கலாம், டெபுடி கமிஷனரை கமிஷனராக நியமிக்கலாம் என்று ப்ரமோஷன் அடிப்படையில் நியமனம் செய்வதற்கு வகை இருந்தால்தான் அவ்விலாகாவில் வேலை செய்கிறவர்களுக்கே ஒரு ஊக்கம் இருக்கும். மற்ற எல்லா இலாகாக்களிலும் அப்படித்தான் இருக்கின்றன. குறிப்பாக கமிஷனர் லீவில் போனால் கீழே உள்ளவரை கமிஷனராகப் போட வசதி இருக்க வேண்டும். இப்போதுள்ள சட்டப்படி தற்காலிகமாகக்கூட அப்படி நியமிக்க வழியில்லை. அதற்காகத்தான் இந்தத் திருத்தம்.

அதுதான் இதிலுள்ள முக்கியமான தவறு. அப்பொழுது அது கவனிக்கப்படவில்லை. இப்படி ஏற்படுமென்று நினைக்கவில்லை. இப்பொழுது இந்த திருத்தமெல்லாம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. டயரக்ட் ரிக்ரூட்மென்ட்க்கு இடம் இருக்கிறது. நிரந்தரமாக போடவேண்டுமென்றில்லை. குறிப்பிட்ட காலத்திற்குப்போடலாம். இந்த இலாகாவில் தகுதி முக்கியமானது. தகுதியில்லையென்றால் நிர்வாகத்தைச் சரிவர நடத்த முடியாது. படித்திருக்கிறார்கள், ஆகவே செய்து விடுவார்கள் என்று சொல்ல முடியாது. அறநிலையங்களைப்பாதுகாப்பதற்கு ஒரு தகுதி வேண்டும். மத நம்பிக்கை மட்டும் போதாது, பக்தியிருந்தால் போதாது, மூட பக்தியிருந்தால் பிரயோசனமில்லை. நம்பிக்கையிருந்தால் போதாது,

[a] Printed as Appendix VII on pages 339–340 infre.

28th March 1961] [Sri M. Bhaktavatsalam]

திறமையும் வேண்டும். ஆற்றல் வேண்டும், அக்கறை வேண்டும், உற்சாகம் வேண்டும். ஒழுக்கம் எல்லோருக்கும் வேண்டும். இதில், அஸிஸ்டெண்ட் கமிஷனர், டெப்டி கமிஷனர் இவர்களை டெப்டி கமிஷனர், கமிஷனர் ஆக ப்ரொமோட் செய்ய வகை செய்யப்பட்டிருக்கிறது. ப்ரோமோஷன் செய்தாக வேண்டுமென்றல்ல, அதற்கு அப்படிச் செய்ய இடமிருக்க வேண்டும். ப்ரொமோஷன் கொடுப்பது, டயரக்ட்டாக ரெக்ரூட் செய்வது என்றிருக்கிறது. ஆகவே, டெப்டி கமிஷனர், கமிஷனர் நியமனங்கள் குறித்து இருப்பது இந்த திருத்த மசோதா. இதை கனம் அங்கத்தினர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்று நினைத்து முடித்துக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: **Motion moved—**

'That the Madras Hindu Religious and Charitable Endowments (Amendment) Bill, 1961, as passed by the Legislative Council, be taken into consideration.'

**Sri A. GOVINDASAMY:** கனம் உதவித் தலைவர் அவர்களே, இந்த மசோதாவிற்கு அவசியமில்லையென்று நான் கருதுகிறேன். சர்வீஸ் கமிஷனிலுல் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் அல்லது யாரோ வேண்டியவர்களுக்கு வசதி செய்ய எடுத்துக் கொள்ளப்படுகிற முயற்சியோ என்று ஊகிக்க இடமிருக்கிறது. அதற்கு அமைச்சர் அவர்கள் இடம் கொடுக்காமல் ஏற்கெனவேயிருந்த முறைப்படியே இருக்க அனுமதிக்க வேண்டும். தகுதி, நம்பிக்கை அவசியம் இருக்க வேண்டுமென்ற காரணத்தையெல்லாம் சொன்னார்கள். ஹிந்து மதத்தை சார்ந்தவர்கள்தான் வரவேண்டுமென்ற நோக்கத்தோடு ஹிந்து ரிலிஜியஸ் என்டௌமெண்ட் போர்டில் வேறு மதத்திலிருந்து வரக்கூடாது என்பதற்காக அமைச்சர் அவர்கள் தகுதியிருக்க வேண்டுமென்று சொல்லியிருப்பார்களேயானால் அதற்கு ஆட்சேபனை கிடையாது. திரு உத்தண்டராமன் அவர்கள் இப்பொழுது கமிஷனராகயிருக்கிறார்கள். அவரைப்பற்றி குறை கூற முடியாது. அமைச்சர் அவர்கள் எதிர்பார்ப்பதைவிட அதற்கு மேல் நம்பிக்கையுடையவர்கள், அவர்கள். அப்படிப்பட்டவர்கள் வருவதில் எனக்கு ஆட்சேபனையில்லை. அவர், காப்பாற்றும் அளவிற்கு காப்பாற்றட்டும். ஜுடீஷியரியிலிருந்துகூட எடுக்கலாம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதில்தான் சந்தேகம் இருக்கிறது. எதற்காக, "டயரக்ட் ரெக்ரூட்மெண்ட்" / ஏன் சர்வீஸ் கமிஷனுக்கு போகக்கூடாது? தகுதியுள்ளவர்களுக்கு ப்ரொமோஷன் கொடுப்பதில் எனக்கு ஆட்சேபனையில்லை. ப்ரோமோஷன் கொடுப்பதில் தகுதியுள்ளவர்களை பின்னல் தள்ளும் நிலைமை சிற்சில சந்தர்ப்பங்களில் ஏற்படுகிறது, ரிக்கார்ட் பார்த்து தெரிந்துகொள்ள முடியாத அளவிற்கு அமைச்சர் அவர்கள் மனதில் அல்லது நியமிக்கிறவர் மனதில் இந்தத் தகுதி இவருக்கில்லை, இந்தத் தகுதி அவருக்கில்லை என்ற நிலை இருக்கக்கூடாது. ரிக்கார்ட் ஷீட்டைப் பார்க்கும்போது தெரியும் நிலை இருக்க வேண்டும். இன்றையதினம் ரிலிஜியஸ் என்டௌமெண்ட் போர்டுக்கு வருகிற அதிகாரிகள் தெய்வ பக்தியுள்ளவர்கள் என்று காட்டிக்கொள்ள நாமம் அல்லது விபூதி பட்டை அணிந்து கொண்டிருக்க வேண்டும், அதை ஒரு அளவுகோலாக வைக்கக்கூடாது. (குறுக்கீடு). மனது சரியாகயிருந்தால் போதும், என்றால் மன சாஸ்திரம் தெரிந்தவர்களாகயிருக்க வேண்டும். அமைச்சர் அவர்களுக்கு தெரியுமோ என்னவோ தெரியாது, கோவிலுக்கு போய் வரலாம், உண்மையில் கோவிலுக்கு போய் வருகிறவர்கள் தெய்வ பக்தியோடு போகிறார்களா அல்லது தெய்வ பக்தியுள்ளவர் என்று காட்டிக் கொள்ள போகிறார்களா என்பதைப்பற்றி எப்படி தெரிந்துகொள்ள முடியும். ஆகவே, ரிக்காட் ஷீட்டைப் பார்த்து அவர் திறமையுள்ளவரா நல்லபடியாக நடத்துவாரா என்று பார்க்க வேண்டும். தகுதி என்று வைத்து அதை மூடமந்திரமாக வைத்திருக்கக்கூடாது. அது பல அதிகாரிகளை

உயர்த்துவதற்கு தடையாகயிருக்கலாம். ஆகவே, டயரக்ட் ரெக்ரூட்மெண்ட் வேண்டாம், சர்விஸ் கமிஷனுக்குத்தான் விடவேண்டுமென்று வலியுறுத்திக் கூறிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**Sri A. R. SUBBIAH MUDALIAR :** இந்த மசோதாவை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். எனக்கு முன் பேசிய நண்பர் அவர்கள் " ஸ்டேட்மென்ட் ஆப் ஆப்ஜெக்ட்ஸ் அன்ட் ரீஸன்ஸை " சரியாக படித்துப் பார்த்திருந்தால் அப்படிச் சொல்லியிருக்க மாட்டார்கள். அஸிஸ்டென்ட் கமிஷனர், டெப்டி கமிஷனர் இரண்டு பேர்களை ப்ரொமோட் செய்வதற்கு இலாகாவில் இருப்பவர்கள் நன்கு உற்சாகத்தோடு வேலை செய்வதற்காக வேண்டி இந்த திருத்தம் கொண்டுவரப்பட்டுள்ளது. உற்சாகத்தோடும், உணர்ச்சியோடும் இந்த இலாகாவில் வேலை செய்து கொண்டிருப்பவர்களுக்கு, ஒரு உற்சாகம் கொடுக்கத்தான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. இதைத் தெரிந்துகொண்டிருந்தால் இப்படி குறுக்கு வழியில் சர்க்கார் கொள்கையை தவறுதலாக புரிந்து கொள்ளக்கூடிய நிலைக்கு போய் இருக்கமாட்டார்கள். அடுத்தபடியாக, இந்தச் சட்டத்தில் முக்கிய கோட்பாடு ஜுடீஷியரியில், அந்த சர்வீஸில் இருப்பவர்களை, கண்டிப்பாக நியமிக்கவேண்டுமென்ற கோரிக்கை இருந்துகொண்டிருக்கிறது. அது ரொம்பவும் அவசியம் என்று அழுத்தமாக சொல்ல விரும்புகிறேன். அறநிலைய பாதுகாப்பு சம்பந்தமாக பல சிக்கல்கள் ஏற்பட்டு அநேக வழக்குகள் இருந்துகொண்டிருக்கின்றன. ரிட் பெட்டிஷன்ஸ்கூட அதிகமாக இருந்துகொண்டிருக்கிறது. ஆகவே, ஜுடீஷியல் சர்வீஸில் உள்ளவர்களை நியமனம் செய்வது என்பது மிகவும் பொருத்தமான தாகும். இதில் ஒரு வார்த்தை கூடுதலாகயிருக்கிறது. " or any other service " என்றிருக்கிறது. மற்ற டிப்பார்ட்மெண்ட்களிலிருந்தும் வரலாம் என்றால் இதிலுள்ள சிக்கல்கள் தெரிந்து கொள்வதற்கு கஷ்டப்படும் ஆகவே நாம் விதி போடும்போது " or any other service " என்பதை, ப்ரொமோஷன் அல்லது டயரக்ட் ரெக்ரூட்மெண்ட் இரண்டிலும் ஆள் கிடைக்காமல் இருந்தால் " any other service " என்று இருந்தால் நல்லது. ஆகவே, இந்த திருத்தம் மிகவும் அவசியம், இதன் மூலம் இலாகாவில் இருப்பவர்களுக்கு உற்சாகம் கிடைக்க வழியிருக்கிறது என்று தெரிவித்துக்கொண்டு நான் இந்த திருத்த மசோதாவை வரவேற்கிறேன்.

* **Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** சபை முன் வந்திருக்கக் கூடிய இந்த மசோதாவை ஆதரித்து சில வார்த்தைகள் கூறவிரும்புகிறேன். அறநிலையப் பாதுகாப்பு ஹிந்து மதத்திற்கு மிக மிக அவசியமானது. இப்பொழுது கொண்டு வந்திருக்கக்கூடிய முறையில் நேரடியாகவே டெப்டி கமிஷனர் அல்லது கமிஷனரை தேர்ந்தெடுக்க வேண்டுமென்பது சரியானமுறை. திரு கோவிந்தசாமி அவர்கள் சொல்லுகிற மாதிரி சர்விஸ் கமிஷனுக்கு போனால் இதற்கு தகுதியில்லாதவர்களும் வரக்கூடும். அவர்களுக்கும் செலக்ஷன் கிடைக்கக்கூடும். அப்படி செலக்ஷன் கிடைப்பவர் இந்த மதத்தில் நம்பிக்கையில்லாதவராக, தெய்வ நம்பிக்கை இல்லாதவராக யிருக்கலாம் அல்லது வேறு மதஸ்தர்களாக இருந்தால் அவர்கள் மதத்தை இந்த மதத்தில் ஒதுக்க வேண்டுமென்ற நோக்கமுடையவர்களாக யிருக்கலாம் அப்படிப்பட்டவர்கள் சர்வீஸ் கமிஷனால் தேர்ந்தெடுக்கக்கூடிய ஒரு சந்தர்ப்பம் ஏற்படலாம். அப்படி வரும்போது, ஹிந்து மதத்தில் நம்பிக்கையில்லாதவர்கள் அறநிலையங்களை பாதுகாக்கக் கூடிய முறையில் இருந்தால் நல்ல முறையில் இது செயல்பட முடியாத நிலை ஏற்படும். ஆகவே சர்வீஸ் கமிஷனுக்கு விடாது நேரடியாகவே
12-30 p.m. தேர்ந்தெடுக்க வேண்டுமென்று இப்பொழுது கொண்டு வந்திருக்கக் கூடிய திருத்தத்தை நான் மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன். அதோடு கூட அறநிலைய பாதுகாப்பு அதிகாரிகள் சம்பந்தமாக ஒருசில கருத்துக்களை அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். இந்த மசோதாவின் திருத்தத்தில் இந்தப் பிரச்னைகளுக்கு இடம் இல்லாவிட்டாலும் அதிகாரிகளுக்கு அமைச்சர்கள் தனியாக யோசனை சொல்லக்

கூடிய அளவில் ஒரு சில வார்த்தைகளை சொல்ல விரும்புகிறேன். அறநிலையங்களின்கீழ் பல ஏக்கர் நிலங்கள் பல இடங்களில் இருக்கின்றன. சில இடங்களில் அவை நல்ல முறையில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. சில இடங்களில் வெறுமனே தரிசாக கிடக்கின்றது. எங்களுடைய தொகுதியில் நடக்கின்ற ஒரு அனுபவத்தை சொல்ல விரும்புகிறேன். இதைப் பற்றி மின்சார அமைச்சர் அவர்கள் அங்கு வந்திருந்தபோது நேரில் பார்வையிட்டிருக்கிறார்கள். இதைப்பற்றி நாங்களும் சொல்லியிருக்கிறோம். அங்குள்ள ஈசுவரன் கோவிலுக்கு சொந்தமாக ஆறு, ஏழு ஏக்கர் நிலம் இருக்கிறது. அதோடு பக்கத்தில் ஆறு, ஏழு ஏக்கர்களில் 100, 200 ஆண்டுகளாக பல நெசவாளர்கள் பாவடியாக உபயோகித்துக் கொண்டிருக்கிறார்கள். நெசவாளருக்கு தேவையாக இருக்கின்ற பாவை அதில் போடுவதற்கு அந்த நிலங்களை உபயோகித்துக் கொண்டிருக்கிறார்கள். இப்போது அதிலிருந்து எவிக்ஷன் செய்ய வேண்டுமென்று டெப்டி கமிஷனர் கலெக்டர் அவர்களுக்கு உத்தரவு போட்டிருக்கிறார்கள். தேவஸ்தானங்கள் நல்ல முறையில் நடக்க வேண்டும் என்பதில் எங்களுக்கு எந்தவிதமான கருத்து வித்தியாசமும் இல்லை. நூறு, இருநூறு ஆண்டுகளாக அவர்களுக்கு ஜீவநாடியாக இருக்கின்ற பாவடியை போட்டுக் கொள்வதற்கு மேலும் அனுமதிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் . . .

**DEPUTY SPEAKER :** இந்த மசோதாவிலுள்ள திருத்தத்தைப் பற்றி மட்டும் பேசுங்கள், சம்பந்தமில்லாத விஷயங்களைப்பற்றி இதில் பேசவேண்டாம். அடுத்ததாக கனம் ஆதிமூலம் அவர்கள் பேசலாம்.

**Sri D. S. AUTHIMOOLAM :** மிஸ்டர், டெப்யூடி ஸ்பீக்கர் ஸார், இந்த அறநிலைய பாதுகாப்பு மசோதாவைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நம்முடைய இந்திய சரித்திரத்திலேயே சென்னை ராஜ்யத்தில் கொண்டு வந்திருக்கின்ற மசோதா நல்ல முறையில் நடந்துகொண்டு இருக்கிறது. இந்த இலாகாவும் நல்ல முறையில் நடந்து கொண்டிருக்கிறது. ஒரு பக்கத்தில் பக்தி குறைந்து கொண்டு வருகின்றது என்றிருந்தாலும், ஒரு பக்கத்தில் லட்சக்கணக்கான பேர்கள் பழைய ஆசாரங்களிலேயே போய்க்கொண்டு தான் இருக்கிறார்கள். அப்படியும் நடக்கின்றது. இப்படியும் நடக்கின்றது. அவ்விதமிருக்கின்ற ஒரு நாட்டில் இந்த இலாகாவினுடைய சேவை மிகவும் நல்ல முறையில் நடந்து கொண்டிருக்கிறது. இதை நாம் மறுக்க முடியாது. உலகத்தில் எங்குமே இல்லாத முறையில் மத சம்பந்தமான ஒரு இலாகா நம் ராஜ்யத்தில் மட்டும் இருப்பது ஆச்சரியம்தான். இப்படிப் பட்ட ஒரு இலாகாவில் மற்ற உத்தியோகங்களுக்கு எல்லாம் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் மூலமாக அதிகாரிகளை தேர்ந்தெடுப்பது போல் இல்லாமல், மந்திரிகளும் அதிகாரிகளும் பார்த்து தகுதி வாய்ந்த நபர்களை இதில் வேலை செய்கின்ற அதிகாரிகளாக நியமிக்கவேண்டும் என்று சர்க்கார் சொல்வது ஒருவிதத்தில் சரிதான். அவ்விதமில்லாமல், கனம் கோவிந்தசாமி அவர்கள் சொல்வது போல் இதற்கும் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் மூலமாகவே இந்த அதிகாரிகளையும் தேர்ந்தெடுக்கவேண்டும் என்று சொன்னால், இவ்விதம் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் கோவிலுக்குள் குழாய் சட்டைப் போட்டுக் கொண்டு போய் நிற்பார்கள். அப்போது என்ன செய்கிறது என்பதையும் நாம் ஆலோசிக்க வேண்டும். அது மட்டுமல்ல, திராவிட முன்னேற்றக் கழகமே ஆட்சிக்கு வந்தாலும்கூட, இந்த அறநிலைய பாதுகாப்பு போர்டுக்கு மந்திரியாக இருக்க ஒரு சரியான ஆளை தேர்ந்தெடுக்க வேண்டிய வேலை அவர்களுக்கு இருக்கிறது. (சிரிப்பு). பொதுவாக, இந்தத் திருத்தம் கொண்டு வந்திருப்பதை நான் வரவேற்கிறேன். நான் இதில் முக்கியமாக சொல்லவிரும்புவது, இதற்கான ஆட்களை தேர்ந்தெடுக்கும் போது, தகுதியான ஆட்களைப் பார்த்து தேர்ந்தெடுத்து நியமனம் செய்ய வேண்டும் என்று சொல்லிக்கொண்டு, இதை வரவேற்று, என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

[28th March 1961

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நான் முன்பே இதைப்பற்றி விளக்கினேன். இப்போது இருக்கின்ற விதிகளின்படி டெப்டி கமிஷனரோ அல்லது அதைப்போன்ற அதிகாரிகள் யாராவது லீவில் போனால்கூட வேறு ஆட்களை போட முடியாது என்கின்ற நிலை இருந்து கொண்டிருக்கிறது. இதுதான் இதில் இருக்கிற குறைபாடு. அதனால்தான் இவ்விதமான ஒரு திருத்தம் கொண்டு வரவேண்டியிருக்கிறது. இதில் ஒரு விஷயத்தை கனம் கோவிந்தசாமி அவர்களுக்குச்சொல்லிக் கொள்கிறேன். டயரக்ட் ரெக்ரூட்மென்ட் என்று சொன்னால் உடனேயே எங்கள் இஷ்டம்போல் அல்லது சர்க்கார் இஷ்டம் போல் எதுவும் உடனடியாக செய்து விடுவதில்லை. இந்தச் சட்டத்தில் இதைக் கொண்டு வருவதற்கு முன்னால், இந்த இலாகாவில் டெப்டி கமிஷனர் அல்லது கமிஷனர் என்ற பதவியில் இருக்கின்றவர்கள் நீதி இலாகாவிலுள்ளவர்கள் இருப்பது நல்லது என்று எனக்கு தோன்றிற்று. இதைப்பற்றி முன்னால்சொல்லியிருக்கிறேன். அதன் காரணமாக அதைப்பற்றி ஹைக்கோர்ட்டை எல்லாம் கேட்டோம். தகுதியுள்ளவர்களைச் சொல்லும்படியாக அவர்களை கேட்டுக்கொண்டோம். ஹைக்கோர்ட்டாரும் சில பெயர்களை எங்களுக்கு அனுப்பினார்கள். இதில் சர்வீஸ் கமிஷன் யாரை தேர்ந்தெடுக்கிறது என்பதை அறிவதற்காக சர்வீஸ் கமிஷனுக்கு அனுப்பி அவர்கள் சொன்னதைத்தான் போட்டோம். நீதி இலாகாவிலிருந்து யாரை எடுக்கவேண்டும் என்று ஹைகோர்ட்டாரைக் கேட்கிறோம். அதன் பின்னால் சர்வீஸ் கமிஷனையும் கேட்கிறோம். ஆகவே இதில் சர்வீஸ் கமிஷனை புறக்கணிக்கின்ற பேச்சுக்கே இடமில்லை. அது மட்டும் அல்ல, ப்ரோமோஷன் விஷயத்திலும் சர்வீஸ் கமிஷனை கலந்துதான் முடிவு எடுக்கிறோம். சர்வீஸ் கமிஷனை கலந்து ஆலோசிக்க வேண்டியதில்லை என்றிருந்தாலும்கூட, சர்வீஸ் கமிஷன் என்ன சொல்கிறது என்பதைப்பற்றி கேட்கிறோம். ஆகவே எல்லா விஷயத்திலும் சர்வீஸ் கமிஷனை கலந்துதான் முடிவு எடுக்கிறோம் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

கனம் கோவிந்தசாமி அவர்கள் நாமம் போடுவதைப்பற்றியும், விபூதி போடுவதைப்பற்றியும் எடுத்துச் சொன்னார்கள். பட்டை பட்டையாக நாமம் போட்டிருப்பவர்கள் எல்லாம், வைஷ்ணவர்கள் என்றோ அல்லது பட்டை பட்டையாக விபூதி போட்டிருப்பவர்கள் எல்லாம் சைவர்கள் என்றோ சொல்ல முடியாது.

**SRI A. GOVINDASAMY** : கனம் அமைச்சர் அவர்கள் இதில் எந்த மதத்தைச் சார்ந்தவர்கள் என்பதை தெரிவிக்க வேண்டுகிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : நான் நாமமும் போட்டுக் கொள்வதில்லை, விபூதியும் போட்டுக்கொள்வதில்லை. ஆகவே எனக்கு இரண்டிலும் பக்தியில்லை என்று சொல்லிவிட முடியாது. பட்டை நாமம் போட்டால் தான் விஷ்ணு பக்தி இருக்கிறது என்றோ அல்லது பட்டையாக விபூதிப் போட்டுக்கொண்டால்தான் சைவ பக்தியிருக்கிறது என்றோ நாம் ஏற்றுக் கொள்ள முடியாது. இரண்டிலும் நம்பிக்கை இருக்க வேண்டியதுதான். அப்படிப்பட்டவர்கள் இதில் இருக்க வேண்டும் என்பதுதான் என்னுடைய கவலை. அப்படிப்பட்ட தகுதியானவர்களை தேர்ந்தெடுக்கவேண்டும். அந்த வகையில் நம்முடைய கையை யாரும் கட்டிவைக்கக் கூடாது. இருந்தாலும் நாம் எல்லா விஷயத்திலும் சர்வீஸ் கமிஷனை கேட்கிறோம். அந்த முறையில்தான் இந்தத் திருத்தத்தை கொண்டு வந்திருக்கிறோம். ஆகவே இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The question is :

'That the Madras Hindu Religious and Charitable Endowments (Amendment) Bill, 1961, as passed by the Legislative Council be taken into consideration :'

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2, 1 and the Preamble were put and carried.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

'That the Madras Hindu Religious and Charitable Endowments (Amendment) Bill, 1961, as passed by the Legislative Council, be passed.'

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Hindu Religious and Charitable Endowments (Amendment) Bill, 1961, as passed by the Legislative Council, be passed.'

The motion was put and carried and the Bill was passed.

(7) THE MADRAS WAKF (SUPPLEMENTARY) BILL, 1961 (L.A. BILL NO. 10 OF 1961).

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

'That the Madras Wakf (Supplementary) Bill, 1961 (L.A. Bill No. 10 of 1961),[a] be taken into consideration.'

கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இது முகம்மதிய தர்ம ஸ்தாபனங்கள் பரிபாலனத்தைப் பற்றியது. இதைப் பற்றி 1954-ம் வருஷத்திலே பார்லிமெண்ட் சபையிலே ஒரு சட்டம் நிறைவேற்றப்பட்டது. அந்தச் சட்டம் 1955-லே அமுலுக்கு வந்தது. அது இங்கும் அமுலில் இருக்கிறது. அதையொட்டி ஒரு வக்ஃப் போர்டுகூட அமைக்கப்பட்டிருக்கிறது. பூர்வாங்கமாக சர்வே செய்யப்பட்டு வக்ஃப் போர்டு இப்போது தொண்டாற்றி வருகிறது. முகம்மதிய தர்ம ஸ்தாபனங்களுக்கு சொத்தெல்லாம் இருக்கிறது. பராதீனமும் செய்யப்படுகிறது. சரியாக நடக்கவேண்டும் என்பதில் எல்லோருக்கும் கருத்து வேறுபாடு இல்லை. தி.மு.க.வைச் சேர்ந்தவர்கள் வேண்டுமானால் இதில் நம்பிக்கை இல்லை என்று சொல்லலாம்—ஆனால் அவர்களும் முகம்மதியர்கள் விஷயத்தில் அந்த மாதிரி சொல்லத் துணிய மாட்டார்கள்—இதை நிச்சயம் வரவேற்பார்கள். சமீபத்திலே அகில இந்திய ரீதியில் ஒரு மாநாடு நடந்தது. அதில் பெரிய பெரிய மௌலிகள் வந்து கலந்துகொண்டார்கள். இந்தச் சட்டத்தை நடத்துவதில் ஒரு குறைபாடு இருக்கிறது. இந்த வக்ஃப் என்றால் எது—முகம்மதிய தர்ம ஸ்தாபனங்கள் என்றால் எது—என்று சட்டத்திலே டெஃபனிஷன் எப்படி இருக்கிறது என்றால் முகம்மதிய மத சம்பந்தமான தர்மங்கள் நடத்த முகம்மதியர்களால் விடப்பட்ட சொத்து என்று, அது ஜங்கம சொத்தாக இருக்கலாம் அல்லது ஸ்தாவர சொத்தாக இருக்கலாம் என்ற முறையில் இந்தச் சட்டத்திலே இருக்கிறது. இப்போது என்ன நிலைமை என்றால், இதை எல்லோரும் உணர்ச்சியுடன் தெரிந்துகொள்ள வேண்டும், இதை ஒரு பாடமாகக் கூட நினைத்துக் கொள்ள வேண்டும். பல ஹிந்துக்கள், பல ஹிந்து ராஜாக்கள் முகம்மதிய தர்ம ஸ்தாபனங்களுக்கு சொத்துக்களை விட்டிருக்கிறார்கள். இப்போது முகம்மதியரல்லாதவர்கள் விட்ட சொத்துக்கள் இந்தச் சட்டத்தின்கீழ் வரவில்லை. இன்னும் இன்றைய தினம் நாகூரில் எடுத்துக்கொண்டால் அது ஒரு மகம்மதியர் ஆலயம், அங்கே ஹிந்துக்கள் கூட வருகிறார்கள். பண்டை காலத்தில் இந்த மாதிரி வித்தியாசம் பாராட்டுவதில்லை. ஹிந்துக்கள் முகம்மதிய தர்ம ஸ்தாபனங்களுக்குச் சொத்து விட்டிருக்கிறார்கள். அதே மாதிரி ஹிந்து ஆலயங்களுக்கு முகம்மதிய ஆட்சியாளர்கள் சொத்து விட்டிருக்கிறார்கள். முகம்மதியர் விட்டது

a Published in the *Fort St. George Gazette*, dated 23rd February 1961.

[Sri M. Bhaktavatsalam] [28th March 1961]

மாத்திரமல்ல, வெள்ளைக்கார ஆட்சியாளர்கள் கூட ஹிந்து ஆலயங்களுக்கு சொத்து விட்டிருக்கிறார்கள். காந்தியடிகள், எவ்வளவு தான் நம் சமயத்திலே பற்று இருந்தாலும் பிற சமயத்தைப் பற்றி தூஷிக்கக் கூடாது, மரியாதை செலுத்த வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். இது காந்தியடிகள் காட்டிய வழி. அந்த முறையில் தான் எந்த சமயத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் பல ஆட்சியாளர்கள் இன்னும் மற்றவர்கள் தர்ம ஸ்தாபனங்களுக்கு சொத்து கொடுத்திருக்கிறார்கள். இதிலிருந்து நாம்கூட ஒரு நல்ல பாடம் கற்றுக்கொள்ளவேண்டி யிருக்கிறது.

இந்த மசோதாவைப் பொறுத்த மட்டில் முகம்மதியரல்லாதவர்கள் முகம்மதிய ஸ்தாபனங்களுக்கு சொத்து விட்டிருந்தாலும் அவைகளும் இந்தச் சட்டத்தின் கீழ் வர வேண்டுமென்பது தான் நோக்கம். அகில இந்திய அடிப்படையில் பார்லிமெண்ட்டில் சட்டம் வந்தது. மற்ற ராஜ்யங்களில் இருக்கிறதோ இல்லையோ எங்கள் ராஜ்யத்திலே இப்படி இருக்கிறதே இதற்கு ஒரு திருத்தம் வேண்டுமென்று மத்திய சர்க்காரிடம் நாங்கள் கேட்டோம். அதற்கு அவர்கள் நீங்கள் திருத்தம் செய்துகொள்ளுங்கள், ஆட்சேபணை இல்லை என்று சொன்னார்கள். இது இந்தியச் சட்டத்திற்கே திருத்தம். ஆகவேதான் இப்போது கொண்டுவரப்பட்டிருக்கிறது. இதை கனம் அங்கத்தினர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

DEPUTY SPEAKER: Motion moved—

'That the Madras Wakf (Supplementary) Bill, 1961 (L.A. Bill No. 10 of 1961) be taken into consideration.'

* SRI R. SRINIVASA IYER: Sir, while welcoming this measure, I wish to say a few words. Under entry 28, Schedule 7, List III of the Constitution, we find that charitable institutions and religious endowments have been included in the Concurrent List. The Central Act XXIX of 1954 has been in force in this State from 1955. But, we have enacted the Hindu Religious and Charitable Endowments Act in such a way as people would say that it was the best Act with reference to our religious and charitable institutions and endowments. Being in Pattukkottai, a part of Tanjore, where there are a large number of Dargas and other institutions to which the Mahratta Rulers of Tanjore in those days had dedicated very large extents of properties, besides a number of Muslim people professing Islam having endowed very large extent of properties to certain wakfs, I am afraid I have got to bring to the notice of the Government that in spite of the enforcement of this Act, those wakfs are not being managed efficiently or properly. They are not run for the best advantages or for the purpose for which they were created. No doubt, the wakfs are intended to benefit some beneficiaries on the pretext that they are the hereditary trustees and some schemes in that regard have also been framed. The objects of the wakf are not fully carried out. What I desire to point out in this connection is that after the Shariat Act was passed in 1939 or so, all Muslims were governed by the Personal Law; but after our present Indian Constitution came into force, and these things are included in List III. I would like to know why we should not pass a comprehensive legislation with reference to wakfs without injuring in any way Muslim ideas or their religious tenets. That will be for the benefit of the very institutions for which these wakfs are

28th March 1961] [Sri R. Srinivasa Iyer]

created. Of course, we may have to send it for the President's consent or reserve it for his consideration, as otherwise it may not be possible for us to enact that measure here.

Another important point that I wish to refer in this connection is this. In the original Act, I do not find any restriction with regard to the person to be appointed as Commissioner or the religious attachments of the person who was to be appointed Commissioner under that Act. As a matter of course, only Muslims are appointed. There is a chance of their being, in some way or other, influenced by the circumstances under which these wakfs are managed. We should really appreciate the laudable object with which Hindu Rulers had given gifts of valuable properties to Muslim religious institutions. We should also appreciate in the same way the laudable object of the Nawab of Carnatak and other Muslim Rulers who had endowed large extents of properties to Hindu religious institutions for lighting lamps and such other purposes in Muslim religious institutions. If only we go through old history which is found in copper plates found in Dargas in Adhirampatnam, Mudukur and other places, we will be surprised to know of the vast extent of properties endowed by Hindus to Muslim institutions. I hope the Government will take the earliest opportunity to go through the various aspects of the matter and to bring forward a comprehensive legislation, as this is included in the Concurrent List, of course after taking the consent of the President in the matter.

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இது ஒரு முக்கியமான திருத்தம்—ஆனால் சிறிய திருத்தம். கனம் அங்கத்தினர் பேசியபோது இன்னும் பல திருத்தங்கள் நிறைவேற்ற வேண்டும். இந்த பூரா சட்டத்தையும் நம் ராஜ்யத்தில், இது கன்கரண்ட் லிஸ்ட்டில் இருப்பதால், இங்கே தனியாக ஒரு சட்டத்தைக் கொண்டுவந்து நிறைவேற்ற வேண்டும் என்று சொன்னார்கள். நான் கூறியதுபோல 4–5 ஆண்டுகளாக எவ்வாறு நடத்தப்பட்டு வருகிறது, இன்னும் என்ன செய்ய வேண்டும், என்று இதிலே பொறுப்பு வகிக்கும் அமைச்சர்கள், மற்றும் இதிலே அக்கறை கொண்ட அங்கத்தினர்கள் மற்றப்படி மௌலிகள் எல்லோரையும் சேர்த்து 2–3 மாதங்களுக்கு முன் இரண்டு நாள் விவாதம் நடந்தது—ஒரு மாநாடு நடந்தது. அங்கே பல விஷயங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. குறிப்பாக மேலும் பார்லிமெண்டில்கூட சட்டத்தைத் திருத்த வேண்டுமென்று ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கிறது. இந்தத் திருத்தத்தைப் பொறுத்த மட்டில் நீங்களே நிறைவேற்றி விடுங்கள் என்று சொன்ன காரணத்தினால் இது இப்போது இங்கே கொண்டுவரப்பட்டிருக்கிறது. காம்ப்ரெஹென்ஸிவ் லெஜிஸ்லேஷனை நாம் எடுத்துக்கொள்வது முறையல்ல. ஒவ்வொரு ராஜ்யத்திலும் இருக்கும் நிலைமையைப் பொறுத்து பார்லிமெண்ட்டில் ஒரு சட்டம் கொண்டு வந்து நிறைவேற்றினால் தான் நலம். இதைப்பற்றி மத்திய அரசாங்கமும், சம்பந்தப்பட்ட மற்ற அரசாங்கங்களும் கவனம் செலுத்துவார்கள், செலுத்திக்கொண்டு வருகிறார்கள். இந்த வார்த்தைகளோடு, இந்த மசோதாவை அங்கீகரிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Wakf (Supplementary) Bill, 1961 (L.A. Bill No. 10 of 1961) be taken into consideration.'

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clauses 2, 3 and 4 were put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I move—

'That the Madras Wakf (Supplementary) Bill, 1961 (L.A. Bill No. 10 of 1961) be passed.'

DEPUTY SPEAKER : The question is—

'That the Madras Wakf (Supplementary) Bill, 1961 (L.A. Bill No. 10 of 1961) be passed.'

The motion was put and carried and the Bill was passed.

## (8) THE MADRAS IRRIGATION CESS (AMENDMENT) BILL, 1961 (L.A. BILL NO. 17 OF 1961)—DISCUSSION—cont.

DEPUTY SPEAKER : Now the discussion on the Madras Irrigation Cess (Amendment) Bill, 1961, will be continued.

SRI A. R. MARIMUTHU : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த இர்ரிகேஷன் செஸ் மசோதா இந்த சபையிலே நன்கு ஆலோசிக்காத முறையில் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்றுதான் நான் கருதுகிறேன். இப்போது சில புது திட்டப் பகுதிகளிலே இது அமுலில் இருக்கிறது. ஆகவே இதர இடங்களிலும் அமுலாக்க வேண்டுமென்ற கருத்துடன்தான் இப்போது இது இங்கு கொண்டு வரப்பட்டிருக்கிறது. இது அமுலிலே இருக்கிற பகுதிகளில் என்னென்ன நலன்கள் கிடைத்திருக்கிறது என்பதைத் திட்டவட்டமாக அறிந்த பின்னர், இதை இதர இடங்களுக்கும் மேலும் பலன் கிடைக்குமென்று இந்தச் சட்டத்தை இந்த அரசாங்கம் கொண்டு வருவதற்கு உத்தேசித்து, அந்த முறையிலே கொண்டு வரப்பட்டிருக்கிறதா என்பதையும் அறிந்து கொள்ள வேண்டும். அப்படியெல்லாம் இல்லாமல் ஒரு பகுதியிலே இருக்கிறது, இதை மற்றப் பகுதிகளுக்கும் விஸ்தரிக்க வேண்டுமென்று கொண்டு வருவதானது தவறாகும் என்பதை இந்தச் சமயத்திலே கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

இப்போது மேட்டூர் பாசனப் பகுதியை எடுத்துக் கொண்டால், அங்கே கடந்த 25 ஆண்டுகளாக பாசன வசதி செய்யப்பட்டு இருக்கிறது. இன்னும் பல இடங்களில் தண்ணீர் வாய்க்கால் மூலமோ, அல்லது வேறு வகைகளிலோ சரியாகப் பாயாத நிலை இருக்கிறது. பல கோரிக்கைகள் இப்போது அந்தந்தப் பகுதிகளிலிருந்தும், மாவட்டங்களிலிருந்தும் வந்து அவைகள் எல்லாம் பரிசீலனை செய்யப்பட்டு, வேறு இடங்களுக்கு இவைகளை எப்படி மாற்ற வேண்டும், எங்கு பாசன வசதி கம்மியாக இருக்கிறது, எங்கெங்கெல்லாம் தரிசு நிலங்கள் அதிகமாக இருக்கிறது, அவைகளுக்கு நேரடியாகப் பாய்வதற்கு என்னென்ன செய்யவேண்டும் என்ற கோரிக்கைகள் பல இடங்களிலே இருக்கிறது. இன்னும் தண்ணீரானது பல வாய்க்கால்களிலே நல்ல முறையில் பாய்ச்சப்படாமல், தண்ணீர் ஒழுங்காக சப்ளை செய்ய முடியாததினால் வருஷா வருஷம் நிலங்கள் எல்லாம் தரிசாகப் போகின்றது என்று தந்திகள் மூலம் அமைச்சர்கள் அவர்களுடைய கவனத்திற்கு கொண்டு வரக்கூடிய நிலைமையைப் பார்க்கின்றோம். இப்படித் தந்தி கொடுப்பவர்கள் ஏதோ நிலத்தை தரிசு போட வேண்டுமென்று போடவில்லை. அவர்கள் அப்படி நிலத்தைத் தரிசாகவே போட மாட்டார்கள். அப்படிப் போடுவதால், அவர்களுக்கு நஷ்டம்தான் ஏற்படும். ஆகவே தண்ணீர் வசதி இல்லாமையால் அவன் தன்னுடைய நிலத்தைத் தரிசாகப் போடுவானே தவிர, சும்மா தரிசாக நிலத்தைப் போடுவதற்கு வழியே கிடையாது.

28th March 1961] [Sri A. R. Marimuthu]

இன்னும் எங்கள் பகுதியை எடுத்துக்கொண்டால், ஒவ்வொரு நிலத்திற்கும் வாய்க்கால் வசதிகூட கிடையாது. அப்படி வாய்க்கால் வசதி இருக்கக் கூடிய இடத்தில், பக்கத்து நிலக்காரருக்கு வாய்க்காலை வெட்டி விட மாட்டேன் என்று சொல்லி அடைத்துக் கொண்டால், அதைப்பற்றி கேஸ் போடுவதானால் 3 வருஷம், 4 வருஷமாகி விடுகிறது. இதுபோல் பல இடங்களில் இருக்கிறது என்பதை கனம் அமைச்சர் அவர்களுக்கு நான் நிரூபிக்க முடியும். இப்படி இருப்பதால் நிலங்கள் பல இடங்களில் தரிசாகவே இருக்கிறது. ஆகவே தண்ணீர் பாய்ச்சினாலும், பாய்ச்சா விட்டாலும் நிலத்திற்கு வரி என்று இருக்குமானால், அதனால் பல சங்கடங்கள். அளிக்கக் கூடியதாய் இருக்கும். அப்போது விவசாயிகள் ஏக்கர் ஒன்றுக்கு 20-க்கு மேல் வரியாகக் கட்ட வேண்டுமென்று இருக்குமென்பதை கனம் அமைச்சர் அவர்களுக்கு இந்த சமயத்திலே ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

அது மட்டுமல்ல. இப்போது எல்லாப் பகுதிகளிலும் புஞ்சை கிளாசிபிகேஷன் வைத்துவிட்டு, அதற்குமேல் நில வரி, தண்ணீர் வரி என்று போட்டால், அது நஞ்சைக்குப் போடப்படும் வரியைக் காட்டிலும் அதிகமாகி விடும். ஆகையால் அவைகளைக்கூட நஞ்சை என்று கிளாசிபிகேஷன் செய்துவிட்டால், வரிகூட குறையும். ஆகவே நிலத்திற்குத் தகுந்தவாறு ரி-செட்டில்மெண்டின்போது கிளாசிபிகேஷன் செய்தால் நல்லது. அப்போது அது விவசாயிக்கும் ஒரு நன்மையாக முடியும். அப்படி இல்லாமல், தண்ணீர் எடுத்துக் கொள்வாயோ இல்லையோ நீ வரி கொடுக்க வேண்டும் என்ற ஒரு நிர்ப்பந்தம் ஏற்படுத்துவது அவ்வளவு சரியல்ல. ஆகவே இப்போதுள்ளபடியே வைத்துக்கொண்டு, இந்தச் சட்டத்தைப் புகுத்தினால் அது பெரும்பாலான விவசாயிகளுக்கு பெரும் நஷ்டத்தைத்தான் உண்டாக்கும். அதோடு அதனால் தேசத்தில் எந்தவிதமான நலன்களும் ஏற்படப் போவதில்லை. சில இடங்களில் வாய்க்கால் வசதி இருந்தும், கடைசிப் பகுதிக்குத் தண்ணீர் வரவில்லை என்று சொல்லப்படுகிற குறை இருந்து வருகிறது. அப்படிப்பட்டவைகளையும் கவனிக்க வேண்டும். தண்ணீர் வராத இடங்களுக்குத் தீர்வை இருக்கக்கூடாது. ஆகவே இந்தக் குறைகளை யெல்லாம் போக்க வேண்டுமென்று சொன்னால், முதலில் சாகுபடிக்கு கொண்டு வரக்கூடிய நிலங்களுக்கு ஒரு நிரந்தரமான வசதியைச் செய்ய வேண்டும். அப்படி ஏற்படுத்திய பிறகு, நிலங்களை தரிசு போடக்கூடாது என்று செய்ய வேண்டும். அப்படி தரிசு போட்டாலும் அதற்கு வரி உண்டு என்று ஏற்படுத்தினால், அப்போது அவசியம் சாகுபடிக்கு கொண்டு வருவதற்கான ஒரு நிலைமையை ஏற்படுத்த முடியும். ஆகவே தண்ணீர் பாய்ந்தாலும், பாயாவிட்டாலும் வரி கொடுக்க வேண்டுமென்ற இந்தச் சட்டத்தை தயவு செய்து சிந்தித்து ஒரு முடிவு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER: The hon. Member, Sri Karuthiruman, has given notice of an amendment and he can move it now.

Sri P. G. KARUTHIRUMAN: Mr. Deputy Speaker, Sir, I move—

'That the Madras Irrigation Cess (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 17 of 1961), be referred to a Select Committee.'

The names of hon. Members will be furnished later.

Sri S. NAGARAJA MONIGAR: Sir, I second the amendment.

DEPUTY SPEAKER: Now the amendment is also before the House for discussion.

**Sri P. G. KARUTHIRUMAN:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே இப்போது கொண்டுவந்திருக்கும்படியான சென்னை இர்ரிகேஷன் செஸ் திருத்த மசோதாவை பொறுக்குக் கமிட்டிக்கு விடவேண்டுமென்று கேட்டுக் கொண்டு, அதற்கு முன்னுல் சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படு கிறேன். முதலிலே கீழ்பவானித் திட்டம் ஏற்பட்ட சமயத்திலே லோயர் பவானி செஸ் ஆக்ட் என்று ஒன்றிருந்தது. மேட்டூர் வாய்க்கால் கொண்டு வந்த சமயத்திலே, தனிச் சட்டம் இருந்தது. ஆனுல் இப்போது பலவிதமான அபிவிருத்தித் திட்டங்கள் ஏற்பட்ட காரணங்களினுலே, இன் னும் பலவிதமான குளம், குட்டைகளை எடுத்துக் கொண்டு பூமிகளை யெல்லாம் அபிவிருத்தி செய்ய வேண்டுமென்ற நிலைமை ஏற்பட்டதினுலே, ஒவ்வொன்றிற்கும் ஒன்றன்பின் ஒன்ருகச் தனித்தனியாக சட்டம்கொண்டு வரவேண்டுமென்று ஏற்படுவதாலே, அந்த நிலைமையைத் தவிர்ப்பதற்காக, இப்படி மொத்தமாக ஒரு சட்டத்தைக் கொண்டு வந்தால் நல்லதென்று கருதித்தான் இர்ரிகேஷன் வசதி பெரும்படியான சர்க்கார் ஏற்பாடுகள் செய்துள்ள இடங்களுக்கெல்லாம் மொத்தமாக ஒரு சட்டம் கொண்டு வந்திருக்கிருர்களென்று நான் நினைக்கிறேன். இந்தச் சமயத்தில் நான் ஒன்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இப்போது இருக்கும்படி யான இந்தச் சட்டத்தில் பலவிதமான தவறுகள் இல்லையென்று சொன்னு லும்கூட, இது எப்பொழுதோ போட்ட ஒரு சட்டமாகையால், இதை இந்தக் காலத்திற்கு ஏற்ற வகையில் மாற்றிக்கொள்வதுதான் நல்லது என்று நான் நினைக்கிறேன். முன்னுல் இருந்த சந்தர்ப்பங்களில் முதலீட்டுச் செலவு குறைந்து, அதிகமான வரியைச் செலுத்திக் கொண்டு வந்திருக் கிருர்கள். அதைப் பார்க்கும்போது, இப்போது இருக்கும்படியான வரி அதிகமென்று சொல்லுவதற்கே இல்லை. பரவலாக இருக்கிறது. முன் னுல் ஒரு மூட்டை நெல் 5 ரூபாய்க்கு விற்றது. அப்போது ஏக்கருக்கு 12 ரூபாய் வரி என்று வரி கொடுத்திருக்கிருர்கள். ஆனுல் இப் போது ஒரு மூட்டை நெல் 25 ரூபாய்க்கு விற்கிறது. ஆனுல் இப்போதும் ஏக்கருக்கு 15 அல்லது 20 என்று தான் கட்டுகிருர்கள். இதை அதிக மென்று ஒருக்காலும் சொல்ல முடியாது. அந்தக் காலத்திலே இப்படி யெல்லாம் கொடுத்து ரொம்பவும் விவசாயத்திலே நஷ்டமடைந்திருக் கிருர்கள். ஆகவே விவசாயி பெரும் நஷ்டத்திற்கு ஆளாகியிருக்கிருர்கள் என்பதை தெரிவித்துக் கொள்ளுவது மிக மிக அவசியமென்று நான் நினைக்கிறேன். ஆகவே இனிமேல் கொண்டு வரும் சட்டத்தைகூட ஒரே மாதிரியான முறையிலே மாற்றியமைப்பது நல்லதென்று எண்ணுகிறேன். அப்படி மாற்றியமைக்கும்போது நான் சில யோசனைகளைக்கூற விரும்பு கிறேன். அதாவது சாகுபடிக்கு கொண்டு வரக்கூடிய நிலங்களுக்கெல்லாம் ராயல்டியாக இவ்வளவு வரி கொடுக்க வேண்டுமென்று நிர்ணயிக்க வேண்டும். அதை ஒரு அடிப்படையாக வைத்துக் கொண்டு, ஒரு ரூபாய் அல்லது இரண்டு ரூபாய் என்று திட்டமாக வைத்துக்கொண்டு, அதற்கு மேல் காட்டு வெள்ளாமை, குளப் பாசனம், கிணற்றுப் பாசனம், வாய்க் கால் பாசனம் என்று வைத்துக் கொண்டு அந்த அடிப்படையிலே நிர்ண யிப்பது நல்லதென்று நினைக்கிறேன். ஆகவே இதற்கெல்லாம் ஒரே கிளாசி பிகேஷன் இருக்கவேண்டும். இரண்டு அணு, நான்கு அணு, எட்டு அணு என்று இப்போதிருக்கும் பூமிகளுக்குத் தீர்வை போடப்பட்டிருக்கிறது. இந்

1 p.m. தப் பூமி தீர்வை என்பது ஒரே அடிப்படையைக் கொண்டதாக இருக்க வேண்டும். எல்லாவற்றையும் ஒரு ரூபாய் அல்லது இரண்டு ரூபாய் என்று வைத்து, அந்த அடிப்படையிலிருந்து விவசாயிக்கு சர்க்காரிலிருந்து பெறக்கூடிய நன்மைக்குத் தகுந்தவாறு தீர்வையை உயர்த்திக் கொண்டே போனுல் மிகவும் நன்மையாக இருக்கும். இந்தச் சமயத்தில் ஒரு சம்பவத் தைக் குறிப்பிட விரும்புகிறேன். ஒருவன் தன் கடைசி காலத்தில் தன் மகனைக் கூப்பிட்டு, தன்னுடைய ஆசைகளைச் சொன்னுன், மகன் எல்லா வற்றையும் குறித்துக் கொண்டான்; "எனக்கு அங்கே 5,000 ரூபாய் வரவேண்டும்" என்று சொன்னுன், மகன் குறித்துக் கொண்டான்; "இந்த ப்ரோ நோட்டில் வரவு வர வேண்டும்" என்ருன், அதையும் குறித்துக் கொண்டான். கடைசியாக நான் கடன் இவ்வளவு திருப்பிக் கொடுக்க வேண்டும் என்ருன்; மகன் உடனே இவருக்கு சாகும் சமயத் தில் புத்தி கெட்டு விட்டது என்ருன்; வேறு விதமாகச் சொல்லுகிருர்கள்

28th March 1961] [Sri P. G. Karuthiruman]

என்றான். அப்படிப் புத்தி கெட்டுவிட்டது என்று சொன்ன மகனைப் போல் இல்லாமல், நம் கடமையை உணர்ந்து, நாம் அனுபவிப்பதற்குத் தக்க வரி செலுத்த வேண்டும் என்ற மனப்பான்மையை வளர்க்க வேண்டும். வரி கொடுக்க வேண்டாம், வேண்டாம் என்ற மனப்பான்மை இருக்கக்கூடாது. பொருத்தமான வரியைச் செலுத்தினால்தான், உரிமை வரும். வரியை நியாயமான முறையில், மக்களைப் பாதிக்காத முறையில் போட வேண்டும், அம்மாதிரிச் செய்ய வேண்டும் என்று பொறுக்குக் கமிட்டிக்கு இதை அனுப்ப வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். மாகாணம் பூராவுக்கும் அடிப்படையாக ஒரு வரியை ஏற்படுத்திக் கொண்டு, அதன் பிறகு, பூமிக்குத் தக்கவாறு, அது அடையும் நன்மைக்குத் தக்க வாறு, அதற்குக் கொடுக்கும் வசதிகளுக்குத் தக்கவாறு வரி விதிப்பு இருக்க வேண்டும் என்று தெரிவிக்கிறேன்.

SRI S. M. ANNAMALAI : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, ஆளும் கட்சியைச் சேர்ந்த விப்பைத்தவிர அத்தனை பேரும் கூட ஆதரிக்கிற மாதிரி, இந்த மசோதா தேவையில்லை என்ற முறையிலே எதிர்த்தார்கள். இந்த மசோதாவைப் பார்க்கும் போது, இதிலே பலகோடி ரூபாய்கள் வருமானம் வரும் என்று தோன்றுகிறது. மசோதா சிறிய மசோதா தான் ; அது லோகல் ஸெஸ் ஆகப் போட்டால் அதில் பல லட்சக் கணக்கான ரூபாய்கள் வருமானம் வரும். இதிலே, "Water is made available" என்றிருக்கிறது ; "Made available" என்று சொல்லுவது எவ்விதம் பொருந்தும் என்றுதான் புரியவில்லை. தண்ணீரைத் தேக்கிப் பாய்ச்சவேண்டுமானால், "field bothies" போன்றவைகளை போட்டுக்கொடுக்காததால், மக்கள் அந்த தண்ணீரை உபயோகிப்பதில் கஷ்டம் இருக்கிறது ; ரிக்ளமேஷன் செய்யாமலும், தண்ணீர் பாயும் வசதிகளும் இல்லை. அவர்கள் தாங்களாகவே செய்து கொள்ள வசதியற்றவர்களாக இருக்கிறார்கள். எல்லோருக்கும் சேர்த்து 'Made available' வார்த்தையைப்போட்டு இருக்கிறார்கள். அது பயங்கரமான வார்த்தை. மேலும் தண்ணீர் பாய்ச்சினாலும், பாய்ச்சாவிட்டாலும், தீர்வை உண்டு. நிலங்கள் 2 எக்கர், 3 எக்கர் என்று இருந்து, வசதியும் இல்லாவிட்டால், அவர்கள் தண்ணீரை உபயோகிக்க முடியாத நிலையில் இருப்பார்கள். அந்த நிலங்கள் ஆயக்கட்டில் சேர்ந்திருந்தால் அவர்களும் தீர்வை கட்டித்தான் ஆகவேண்டும். ஆகவே தான் இந்த மசோதா செலக்ட் கமிட்டிக்குச் செல்லுகிறது. அப்படியே அதைச் சட்ட மன்றத்திற்கு வராமல் அந்த இடத்திலேயே கைவிட்டு விடவேண்டும் என்று கோரி முடிக்கிறேன்.

SRI S. NAGARAJA MONIGAR: ஸார், இந்த தண்ணீர் தீர்வை மசோதாவைப் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்ப வேண்டுமென்று விப் அவர்கள் கொண்டு வந்திருக்கும் திருத்தத்தை ஆதரிக்கிறேன். இதிலே, நீர்ப்பாசனங்கள் பல காலமாக இருந்து, தண்ணீர் தவறாமல் விவசாயிகளுக்கு கிடைக்கிறது என்றால் கொஞ்சம் பொருந்தும். அநேக நீர்ப் பாசனங்கள் புதிதாக ஏற்பட்டிருக்கின்றன. அதிலெல்லாம் ஜில்லாவுக்கு ஜில்லா நிலைமை மாறுபட்டு இருக்கிறது. மழையே இல்லாத பிராந்தியங்களுக்கு, சர்க்கார் 10 அல்லது 20 வருஷங்களுக்கு வெற்றிகரமாக ஜலம் கிடைக்கும் என்ற முறையிலே திட்டமிட்டிருக்கிறார்கள். அப்படி ஜலம் கொடுக்கும் போது, விவசாயத்திற்கு வேண்டிய காலத்தில் அணைக்கட்டுகள், நீர்த்தேக்கங்கள் நிரம்பி, ஜலம் கொடுக்க வேண்டும். அப்படி யில்லாமல் காலந்தாழ்த்திக் கொடுப்பதால் பிரயோஜனம் இல்லை. கால்வாய் பாசனம் உள்ள இடங்களில் எதிர்பாராமல் மழை ஏற்பட்டால், அதைக் கொண்டு புஞ்சை தானியங்கள் விளைவிப்பார்கள். அப்படிப்பட்ட இடங்களில் மேலும் ஜலம் விடும்போது, அவர்கள் புஞ்சை தானியத்தை அழித்து விட்டு நஞ்சை விளைவிக்கப் போவதில்லை. சர்க்கார் கொள்கை, புதிதாக நல்ல வசதிகள் கொடுக்கும் போது, அந்தப் பிராந்தியத்திலுள்ள மக்கள் எந்தவிதமான தண்ணீர் தகராறும் இல்லாமல், நிலங்களுக்கு நல்ல முறையில் தண்ணீரைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பது.

அநேக இடங்களில் தனிப்பட்டவர்கள் தன் சொந்த சொத்தில் விட்டுக் கொடுப்பதில்லை. ஏதோ எல்லோரும் சேர்ந்து ஒரு கட்டடம் கட்டுவது, ரோடு போடுவது போன்ற காரியங்களில், வீட்டுக்கு ஒருவர் என்று வந்து வேலை செய்தாலும், தன் சொந்த சொத்து என்று வரும்போது யாரும் விட்டுக் கொடுக்க முன்வருவதில்லை. இம்மாதிரி மனப்பான்மையினாலேயே பல இடங்களிலும் விவகாரங்கள் வந்து, கொலை, வெட்டு குத்து என்று ஏற்படுகிறது. இதெல்லாம் நல்ல முறையில் நடக்க சர்க்கார் ஆவன செய்ய வேண்டும்.

சில இடங்களிலே, மதகுகளை உயர்த்திக் கட்டி விடுகிறார்கள். அப்படி உயரமாக இருப்பதால் மக்கள் பம்பு செட்டுகள் போட்டுத்தான் தண்ணீர் இறைக்க வேண்டியிருக்கிறது. அம்மாதிரி இடங்களில் இன்றைக்கு எஞ்ஜினியர்கள் மாறுதல் அவசியம் என்று கருதுகிறார்கள். நல்ல, நிறைந்த தண்ணீர் வேண்டுவது அவசியம். நம் நாடு விவசாய நாடு. நாம் அறிவோம் கங்கைத் தண்ணீரைக் கொண்டு வர எவ்வளவு பாடுபட்டார்கள் என்று ஐதீகத்தில் சொல்லி இருப்பதை. சில இடங்களிலே ஆற்றிலிருந்து 2 பர்லாங், 3 பர்லாங் வரை டிஸ்ட்ரிப்யூடரிஸ் இருக்கும் இடத்தில் கிணறு வெட்டக் கூடாது, ஆழப்படுத்தக் கூடாது என்று சொல்லுகிறார்கள். பம்பு செட்டுகள் வைக்கக்கூடாது என்று சொல்லுகிறார்கள். அது கொள்கையாக இருக்கலாம். ஆனால் அது விவசாயிகளைப் பாதிக்கிறது. தீர்வை கொடுக்க வேண்டும் என்று சொல்லும் போது காலாகாலத்தில் தண்ணீர் கொடுக்கிறோம் என்று சர்க்கார் அஷ்யூர் பண்ண முடியுமா என்று தெரியவில்லை. இன்றைக்கு கிருஷ்ணகிரி தேக்கத்தில் வருஷத்தில் 7 மாதம் தண்ணீர் கொடுக்கிறோம். பாக்கி 5 மாதம் நிச்சயமில்லை, நிர்ணயமில்லை. இப்படியெல்லாம் சிக்கலான பிரச்னை இருக்கின்றன. கிருஷ்ண சாகர் நீர்த் தேக்கத்தை வைத்துத்தான் பேசினேன். இன்றைக்கு இதை பொறுக்குக் கமிட்டிக்குப் போவதை ஆதரித்து என் வார்த்தைகளை முடித்து கொள்கிறேன்.

**SRI A. GOVINDASAMY** : சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, இந்த மசோதாவிலே நீர்ப்பாசன வசதியைப் பயன்படுத்திக் கொண்டாலும் இல்லாவிட்டாலும் வரி என்ற நிலைமை இருக்கிறதே அது கூர்ந்து கவனிக்க வேண்டிய விஷயம் என்பதைப்பற்றி பரவலாக எல்லா அங்கத்தினர்களும், குறிப்பாக ஆளும் கட்சி அங்கத்தினர்களும் வன்மையாகக் கண்டித்துப் பேசினார்கள் என்பது எல்லோருக்கும் தெரியும். அப்படி எல்லோரும் பேசியதன் காரணமாகத்தான் சர்க்கார் கட்சிக் கொரடா அவர்கள் இந்த மசோதாவைப் பொறுக்குக் கமிட்டிக்கு அனுப்பவேண்டுமென்ற ஒரு திருத்தத்தைக் கொடுத்திருக்கிறார்கள். அதை நான் வரவேற்கிறேன். ஆனால் அவர் கூறின கதையை நான் ஏற்றுக் கொள்ளத் தயாராய் இல்லை. அவர் கனம் ஆக மாறின பிறகு சொல்ல வேண்டியவைகளை கனம் ஆவதற்கு முன்னாலேயே பின் சீட்டில் இருந்து சொன்னது கொஞ்சம் வருத்தமாக இருந்தது. முன் வரிசையில் உட்கார்ந்து சொல்லியிருந்தால் ஒருவிதம்.

சாத்தனூர் அணைக்கட்டு, திருக்கோவிலூர் அணைக்கட்டு இங்கெல்லாம் விவசாயிகள் தண்ணீரை எடுத்துக்கொண்டாலும் கொள்ளாவிட்டாலும் வரி என்று போடுவதற்கு முன்னால் எல்லா விவசாயிகளுக்கும் அவர்களுடைய ஆயக்கட்டுகளுக்கு பாசன வசதி அளிக்க நாம் என்ன உறுதி செய்திருக்கிறோம் என்பதைக் கவனிக்க வேண்டும். ஸ்ரீ நாகராஜ மணிகார் தொகுதிக்குப் போய்ப் பார்த்திருக்கிறேன். டெய்ல்எண்டு பகுதியில் தண்ணீர் பாய்வதே கிடையாது. அப்படி தண்ணீர் வசதி செய்து கொடுக்க முடியாத நிலைமையில் அவர்கள் கிணற்றுப் பாசனத்தை நம்பி பயிர் செய்து அது சாவியாகப் போனால் வரி வஜா செய்ய வேண்டியது இருக்க, சாவியாகப் போனவற்றுக்குக் கூட கர்ணங்கள் விளைந்தது எனத் தவறான கணக்குக் கொடுக்க அவர்கள் வரி கட்டுகிறபோது தண்ணீர்த் தீர்வை என்பதும் சரியல்ல. அதையெல்லாம் வைத்துத்தான் அவர் பேசினார். வடாற்காடு மாவட்டத்தில் 19 ஆயிரம் ஏக்கரா, தென்னாற்காடு மாவட்டத்தில் 4 ஆயிரம்

28th March 1961] (Sri A. Govindasamy)

எக்கரா ஆக 23 ஆயிரம் எக்கராவுக்கு இப்போது பாசன வசதி ஏற்பட்டிருக்கிறது. பாசன வசதி இல்லாத இடங்களுக்கு வரி விலக்கு அளிக்கப்படுகிறது. எலிச்சத்திரம் அணைககட்டு, திருக்கோவிலூர் அணைக்கட்டு இங்கெல்லாம் இந்தச் சட்டம் வந்தால் பெரிதும் பாதிக்கப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். தண்ணீர் வந்தாலும் வராவிட்டாலும் அவர்கள் வரி கொடுக்க வேண்டும் என்பது அர்த்தமில்லை. நம் நாட்டில் தான் ஒரு சொட்டுத் தண்ணீரைக் கூட வீணுக்காமல் விவசாயிகள் சாகுபடிக்குப் பயன்படுத்திக் கொள்கிருர்கள். ஆகவே நாம் தண்ணீர் விடுகிறோம், அதை அவர்கள் உபயோகப்படுத்திக் கொள்ளாவிட்டால் என்ன ? வரி கட்டத்தான் வேண்டும் என்று சொல்வதற்கே இடம் இல்லை. இவை பற்றியெல்லாம் நன்ருகப் பரிசீலனை செய்தாக வேண்டும். ஆகவே, இந்த மசோதா பொறுக்குக் கமிட்டிக்குப் போவதைப்பற்றி வரவேற்கிறேன். இந்தக் கமிட்டி ஒவ்வொரு பிராஜெக்ட் ஏரியாவுக்கும் நேரிடையாகச் சுற்றுப் பிரயாணம் செய்து அங்குள்ள விவசாயிகளுடைய குறைபாட்டைத் தெரிந்து கொண்டு நடவடிக்கை எடுக்க வேண்டும். தண்ணீர் வசதி செய்து கொடுக்காமல் வரி கட்ட வேண்டுமென்று சொல்வது கொஞ்சம் கூடப் பொருத்தமில்லாதது என்று சொல்லிக் கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI P. G. KARUTHIRUMAN : On a point of personal explanation நான் கதை பண்ணவில்லை. நான் சொன்னது அங்கத்தினருக்கு புரியவில்லை என்ருல் அது என் தவறு இல்லை. தண்ணீர் விட்டாலும் விடாவிட்டாலும் வரிபோட வேண்டும் என்று சொல்லவில்லை. தண்ணீர்-விடுகிறபோது அதை பயன்படுத்திக் கொள்ளாவிட்டாலும் வரிவிதிக்க வேண்டும் என்பதைத் தான் பொறுக்குக் கமிட்டியில் பரிசலிக்க வேண்டு-மென்று சொன்னேன்.

DEPUTY SPEAKER : It is only a point of explanation.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் சபாநாயகர் அவர்களே இந்த மசோதா பொறுக்குக் கமிட்டிக்குப் போவதற்குக் கனம் அமைச்சர் அவர்கள் ஒத்துகொண்டதற்காக நன்றி செலுத்திகொள்கிறேன். எப்போதுமே அவர்தான் ஜனநாயகக் கருத்துக்கு மதிப்புக்கொடுத்து நடந்து கொள்வார். இப்போதும் இந்த மசோதா பொறுக்குகமிட்டிக்கு போவதற்கு அமைச்சர் அவர்கள் ஒத்துக்கொண்டிருப்பதானது வரவேற்கத்தக்கது.

DEPUTY SPEAKER : The hon. Member, Sri Karuthiruman, has moved the amendment, but the Hon. Minister has not yet replied.

SRIMATHI T. N. ANANDANAYAKI : Anyway it is a move from the Government (laughter).

அவர்கள் இன்னும் ஒத்துக்கொள்ளவில்லை என்ருலும்கூட அவர் சம்மதிக்கவில்லை என்ருல் இந்தத் திருத்தம் பிரேரேபிக்கப்பட்டிருக்காது அதற்காக நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன் என்று சொல்ல விரும்புகிறேன். நான் ஒரு விவசாயி என்று இல்லாவிட்டாலும் இந்த நாட்டில் பிறந்தவர்களுக்கு எல்லாம் விவசாயம் தெரியும் என்கிற காரணத்தினுல் நான் சொல்லுகிற கருத்து தவருக இருந்தாலும் அதைப் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும் என்பதற்காகச் சொல்லுகிறேன்.

குறிப்பாக லோயர் பவானி, மேட்டூர் கெனுல் போன்ற திட்டங்கள் நிறைவேற்றப்பட்டவுடன் தனியாக இதற்குச் சட்டம் போட்டிருக்கிறோம் இப்படி ஒவ்வொரு பிராஜெக்டும் பல கோடி ரூபாய் செலவு செய்து கொண்டுவந்தவுடன் தனித் தனியாக சட்டம் கொண்டுவருவது சரியல்ல, நல்லது அல்ல என்று யோசித்துத்தான் இப்போது பொதுவாக இந்தச் சட்டம் கொண்டுவரப்படுகிறது.

(At this stage the Deputy Speaker sounded the gong.)

SRIMATHI T. N. ANANDANAYAKI : I want two minutes more. As it is a Bill, we should discuss it in detail.

